உங்கள்
வேலையை
இலகுவா
க்குவதற்
கென்றே
தயாரிக்
கப்பட்டுள்ள
அற்புத
சோப்பவுடர்




## வெட்டவெளிச்சமான உண்மை...

# ரின்ஸோ வெளுப்பது அதிவெண்மை

ரின்ஸோ - வெண்மை யென்றால் உண்மையான வெண்மை! சக்தி வாய்ந்த ரின்ஸோவின் நுரை, நூலிழைகளில் மறைந்துள்ள அழுக்குகளையும் அறவே அகற்றிவிடுகிறது. அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டாம். வெள்ளைத் துணிகள் வெள்ளைவெளேரென்றும், வர்ணத் துணிகள் அதிகப் பிரகாசமாகவும் ஆகிவிடும். புடவைகள் முதல் கைக்குட்டை வரை, குடும்பத்தின் சகல துணிகளுக்கும் உகந்தது ரின்ஸோ!

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே




| | | |
|---|---|---|
| மலர் 8<br>இதழ் 14 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற<br>தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | விளம்பி௵<br>ஐப்பசி 17௳ |


# நிலப்பிரச்னைக் குழப்பம்

ஹைதராபாத்தில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் சென்னை நிதிமந்திரி திரு சி. சுப்பிரமணியம் நிலச் சீர்திருத்தம் விஷயமாகச் சில உண்மைகளைச் சொன்னார்.

அவர் பிரசங்கத்தில் முக்கிய பகுதியைக் கீழே தருகிறோம்:

"நிலச் சீர்திருத்த விஷயமாக வெறும் கோட்பாடுகளையே வற்புறுத்தும் மனோபாவம் கூடாது. காங்கிரஸ் ஒரு குறிப்பிட்ட பாணியை ஏற்கச் சம்மதித்துள்ளது. தற்போதுள்ள பெரிய பண்ணைகளைத் துண்டு செய்து குறைத்து விடுவது அவசியமா என்பதைக் காங்கிரஸ்காரர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நிலவுடைமை உச்சவரம்பை நிர்ணயிப்பதை நான் எனது சொந்த ஹோதாவில் எதிர்க்கவில்லை. ஆனால், அனுபவத்திலிருந்து 90 சதவிகித நிலவுடைமைக்காரர்கள் மிகவும் சொற்ப விஸ்தீரணமுள்ள நிலங்களையே வைத்திருக்கிறார்கள். என்றாலும் அவர்கள் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு உதவவில்லை. உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்குப் பெரிய பண்ணைகளைக் குலைப்பது அவசியமெனத் தோன்றவில்லை. நிலத்தைப் பற்றி எடுத்த முறைகள் நிறைவேற்றி வைப்பது விவசாயிகளின் மனோபாவத்தில் மாறுதலையுண்டாக்கி, உற்சாகமூட்டும் என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் உற்பத்தி அதிகரிக்காமல் குறைந்து போகும் என்று அஞ்சுகிறேன்."

மேற்கண்ட பிரசங்கத்தைப் படித்தவர்கள் 'ஆகா! நமது நிதிமந்திரி எவ்வளவு நன்றாகப் பேசியிருக்கிறார். நாம் பல முறை கூறி வந்ததையே ஒப்புக் கொண்டு பேசியிருக்கிறாரே' என்று எண்ணி மகிழ்ந்து போவார்கள்! ஆனால் இந்த மகிழ்ச்சியெல்லாம் அற்ப மகிழ்ச்சி.

நமது நிதி மந்திரியின் பேச்சுக்குக் காங்கிரஸ் வட்டாரத்தில் நல்ல வரவேற்பிருந்தது என்று பேசிக் கொண்டார்களே. அந்தத் தைரியத்தில் "நிலவுடைமை வரம்புப் பிரச்னையே எடுக்க வேண்டாம்!" என்று தீர்மானம் செய்ய முடிந்ததா? இல்லை. அப்படியொரு தீர்மானத்தைப் பிரேரேபிக்கவாவது முடிந்ததா? அதுவும் இல்லை.

அதற்குப் பதில் இன்னும் ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டும் என்று யோசனை சொல்லி நிறைவேற்றியிருக்கிறார். இதற்கு நேருஜியும் ஆதரவளித்திருக்கிறார். இந்தக் கமிட்டியில் பதினைந்து பேர்கள் இருக்க வேண்டுமாம்! மீண்டும் இந்தப் பிரச்னையை ஆதியோடந்தமாக ஆலோசனை செய்ய வேண்டுமாம்!

இப்பொழுதுதான் காங்கிரஸின் பெரிய திரிமூர்த்திகள் கொண்ட கமிட்டியை நியமித்து, நிலச் சீர்திருத்தம் சம்பந்தமாகத் திட்டக் கமிஷன் யோசனைக்கு 'ததாஸ்து' பாடினார்களே, அதற்குள் என்ன கமிட்டி வேண்டியிருக்கிறது?

இதைச் சற்றுக் கூர்ந்து யோசித்தால் காங்கிரஸின் தர்மசங்கடம் புலப்படும்!

'நில உச்ச வரம்பு' என்ற பல்லவியைப் பாடாவிட்டால் வோட்டுக்களைப் பெற முடியாமல் போய் விடுமோ என்ற பயம் காங்கிரசுக்கு இருக்கிறது. இந்தப் பாட்டைக் கம்யூனிஸ்டுகள் பாடி வோட்டுக்களைத் தட்டிக் கொண்டு போய் விடுவார்களோ என்ற பயமுமிருக்கிறது. அதனால் அந்தப் பாட்டை விட முடியவில்லை.

ஆனால் பெரிய பண்ணைகளை உடைத்து விட்டால் உற்பத்தி குறைந்து விவசாயம் பாழ்பட்டுப் போகும் என்ற நிச்சயமுமிருக்கிறது. அதனால் அதை உடனே அமுல் நடத்தவும் முடியவில்லை.

ஆகவே, எல்லாத் தர்மசங்கடத்திலிருந்தும் தப்ப ஒரே வழி: கமிட்டிகள் நியமிப்பது தான். அடுத்த தேர்தல் வரை மூன்று பேர் கமிட்டி, பதினைந்து பேர் கமிட்டி, முப்பது பேர் கமிட்டி என்று மாற்றி மாற்றி நியமித்துக் கொண்டே போகலாம் அல்லவா? மக்களும் ஏதோ நடக்கிறது என்று நினைத்துக் கொண்டிருப்பார்கள் அல்லவா? அதனால் தான் இப்படிக் கமிட்டிகள் நியமிக்கிறார்கள்.

நமது நிதிமந்திரி சென்னை ராஜ்யத்தை விட்டு வெளியேறியவுடன் நமது ராஜ்யத்துக்கு எது நல்லது என்பது அவருக்குத் தெளிவாகப் புரிகிறது. அதைப் பற்றிப் பேசுவார். ஆனால் அதற்கு மாறான முடிவுக்கு ஒப்புக் கொள்வார்! இது அவர் வழக்கம். இதை அமிர்தசரஸ் காங்கிரஸில் பார்த்தோம்; கோஹாட்டி காங்கிரஸில் பார்த்தோம். இப்போது, ஹைதராபாத் — அ. இ. காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திலும் பார்க்கிறோம்!

நிலச் சீர்திருத்தங்களின் பயனாக உற்பத்தி பெருகவில்லை என்று தமது அனுபவ வாயிலாகக் கண்ட இவர், சொந்த ஹோதாவில் நில உச்ச வரம்பை வரவேற்பானேன்? சொந்த ஹோதாவில் விவசாயம் பாழ்பட்டு, உற்பத்தி பெருகாமற் போனாலும் பரவாயில்லை என்பது இவர் கருத்தா? இது ஒரு நாளும் இருக்க முடியாது! பின் ஏன் இப்படிப் பேசுகிறார்?

தமிழ் நாட்டில் சில நாட்களுக்கு முன் நமது முதன் மந்திரி தஞ்சை ஜில்லாவில் மிராசுதாரர்களைக் கடுமையாகத் தாக்கிப் பேசினார். அவர்கள் உரிமைகளை யெல்லாம் பறித்துவிடப் போவதாக மிரட்டினார். அப்படி யெல்லாம் செய்ய உத்தேசமில்லை என்று சொல்வதற்காக, ஹைதராபாத் அ. இ. கா. கமிட்டி மேடையைத் தேர்ந்தெடுத்தாரோ என்னவோ?

எதுவாயினும் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டங்களில் நிலப் பிரச்னை சம்பந்தமாக வெறும் பேச்சுச் சாமர்த்தியங்களும், அகட விகடங்களும் காணப்படுகின்றனவே தவிர, அந்தரங்க சுத்தியைக் காணோம். வோட்டுப் பண்ணையை முற்றிலும் மறந்துவிட்டு, விவசாயத்தில் புத்தியைச் செலுத்தினால்தான் ஏதாகிலும் ஒரு சரியான முடிவு ஏற்படும்.

பண்டித ஜவாஹர்லால் நேரு சொன்னார்: ''காங்கிரஸில் பெரும் தலைவர்கள் இருந்தார்கள். அவர்களுக்குள் கருத்து வேறுபாடு உண்டு. ஆனால் அவர்கள் நெஞ்சறிந்த பொய்யைச் சொல்லியது கிடையாது. உள்ளத் தூய்மையோடு நடந்து கொண்டார்கள். இப்பொழுது காங்கிரஸில் அந்தத் தூய்மையைத்தான் காணோம்!''

# ஜெயப்பிரகாசர் சென்னை வந்தார்!

சென்ற வாரம் சென்னைக்கு விஜயம் செய்த ஜெயப்பிரகாசருக்கு முன் எப்போதுமில்லாத முறையில் சென்னை வர்த்தகப் பிரமுகர்கள் வரவேற்பு நல்கினர். பல கூட்டங்களில் பேசினார். மக்கள் பெருங் கூட்டமாகச் சென்று அவர் பேச்சுக்களைக் கேட்டதில் குறைவில்லை. ஜெயப்பிரகாசின் கூட்டங்களுக்கு நமது மந்திரிகள் தலைமை வகித்துக் கலந்து கொண்டனர். ஜெயப்பிரகாச் நாராயண், காங்கிரஸ் பெருந் தலைவர்களைப் பதவியை விட்டு இறங்கிவர வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தாலும், இவரும் பதவிக்குப் போய் விடலாம் என்ற பலமான வதந்தி உலவி வருவதால் இந்த நிகழ்ச்சிகளில் ஏதும் வியப்பில்லை.

ஜெயப்பிரகாச் நாராயண் பேச்சு மக்கள் மனத்தில் எழுச்சியை உண்டாக்கவில்லை. மிகுந்த குழப்பத்தில் ஆழ்ந்திருக்கிறார் என்ற உணர்ச்சியைத்தான் மக்கள் மனத்தில் அவரால் உண்டாக்க முடிந்தது.

தலைவர்கள் பதவியை விட்டு வெளியில் வந்தால் தேசத்தில் புது உற்சாகத்தை, சேவை உணர்ச்சியை உண்டாக்க முடியும் என்று சொல்கிறார்.

நல்ல சிறந்த தலைவர்கள் ஆட்சிப் பொறுப்பிலிருந்து தேசத்தை நிர்வகிப்பதை விட்டு, இரண்டாந்தர மூன்றாந்தர ஆட்களிடம் சர்க்கார் நிர்வாகத்தை ஒப்படைத்தால் இன்னும் நிர்வாகம் ஊழலாகிப் போகாதா என்பதே பொதுமக்களின் கவலை. அதனால் தேசத் தலைவர்கள் பதவிகளை விட்டு வரவேண்டுமென்னும் கோரிக்கைக்கு அநுதாப பூர்வமான எதிரொலி மக்கள் மனத்திலிருந்து வரவில்லை.

பெருந்தலைவர்கள் வெளியில் வந்து மக்களுடைய துர்நடத்தைகளை அகற்றி அறநெறியில் நடக்கச் செய்வார்கள் என்பது ஜெயப்பிரகாசரின் கருத்து. அதிகாரத்திலிருந்து தலைவர்கள் நன்னெறிப் பிரசாரம் செய்து கொண்டுதான் வருகிறார்கள் அவையொன்றும் பயனளிக்கவில்லை. பதவியை விட்டு விட்டுப் பிரசாரம் செய்தால் அதிக பலன் வரும் என்று யாரும் நம்புவதற் கிடமில்லை. அரசியல் பற்று ஏதுமில்லாதவர்கள் செய்யும் அறநெறிப் பிரசாரந்தான் பலன் அளிக்கும். அதற்குத் தகுந்தவர்கள் அதைச் செய்ய வேண்டும். பிரதமர் நேரு அவர்களாவது வேறு மந்திரிகளாவது பதவியை விட்டு விட்டு வருவதினாலேயே அதற்கு வேண்டிய தகுதியை அடைந்துவிட மாட்டார்கள்.

அடுத்தாற் போல் ஒரு கட்சி ஆட்சியை ஜெயப்பிரகாசர் ஆதரிக்கிறார். கம்யூனிஸ்ட்டுகள் தவிர, நாட்டிலுள்ள அத்தனை ஜனநாயகக் கட்சிகளும் இணைந்து ஒரே கட்சியாகி, சர்க்கார் நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்கிறார். ஜெயப்பிரகாசரின்

## கண் துடைப்புத் திட்டம்




அமெரிக்கா, ஒரு வருஷத்துக்கு விஷ குண்டு சோதனைகளை நிறுத்த ருஷ்யாவை ஒப்புக் கொள்ளச் சொல்கிறது!

---

யோசனை ஒரு கட்சி ஆட்சியாக முடிந்துவிடும். கம்யூனிஸ்ட்டுகளுடன் போட்டியிடும் ஒரு கட்சி ஆட்சியாகவே முடிந்து விடும். இதை விட ஆபத்து வேறு வேண்டியதில்லை. கம்யூனிஸ்ட் ஆட்சிக்கும் அதற்கும் பேதமே இராது.

அரசியல் பற்றே இல்லாமல், சர்க்கார் நிர்வாகத்தில் பதவி வகிக்கும் யோசனையை முற்றிலும் ஒழித்து விட்டுச் சரியான தர்மப் பிரசாரத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டியது ஜெயப்பிரகாசரின் கடமை.

# நேருஜியின் கோபம்!

**பா**கிஸ்தானில் ராணுவச் சட்டம் அமுலானதைப் பற்றி இந்தியப் பத்திரிகைகள் மிக ஜாக்கிரதையாகவே தலையங்கங்கள் எழுதியிருந்தன. சில பத்திரிகைகள், 'பாகிஸ்தானில் ஏற்பட்ட நிலை இந்தியாவுக்கு ஏற்பட்டுவிடக் கூடாதே' என்ற கவலையில் அதைப்பற்றி இலேசாகக் குறிப்பிட்டால் கூட அத்தகைய நிலை ஏற்பட்டு விடுமோ என்று பயந்து கொண்டு சும்மா இருந்து விட்டன. இப்படி இந்தியப் பத்திரிகைகள் இக்பிரமை அடைந்து, பொறுப்புடன் நடந்து கொண்டதைப் பிரதமர் பாராட்டியிருக்க வேண்டும்.

ஆனால் ஒன்றிரண்டு பத்திரிகைகள், பாகிஸ்தானில் ஏற்பட்ட ராணுவ ஆட்சியிலிருந்து இந்தியாவும் கற்றுக் கொள்ளக் கூடிய பாடம் இருக்கின்றது என்று எழுதியிருந்தன.

இதைக் கூட நேருஜியினால் சகித்துக் கொள்ள முடியவில்லை என்பதை ஹைதராபாத்தில், பத்திரிகைகளைக் கண்டித்துக் காண்பித்துக் கொண்டு விட்டார்.

இந்தியாவில் வலுவான எதிர்க்கட்சி கிடையாது. இருக்கும் பத்திரிகைகளும் சர்க்காரை ஆதரித்தே எழுதும் பத்திரிகைகள். ஒன்றிரண்டுதான் சர்க்காரை எதிர்த்து, குற்றமுள்ளவற்றைக் குற்றம் என்று எழுதி வருகின்றன!

நல்ல எதிர்க் கட்சி இல்லாத வேளையில் ஒரு சில பத்திரிகைகளாவது, ஜனநாயகத்துக் குரிய அப் பணியைச் செய்கின்றனவே என்று நேருஜி சந்தோஷப்பட வேண்டியிருக்க, எதிர்ப்பே தேசத் துரோகமாகும் என்ற பாணியில் பேசியது பரிதாபம்.

# மந்திரியும் ஹிந்தியும்

ஹைதராபாத் தமிழர்கள் நல்லவர்கள். தமிழ் நாட்டிலிருந்து பிரமுகர்களாக இருப்பவர்கள் யார் போனாலும் ஹைதராபாத் தமிழ்ச் சங்கத்தினர் அவர்களை அன்புடன் வரவேற்று உபசரிக்கின்றனர். அதிலும் தமிழ் நாட்டிலிருந்து மந்திரிகள் போய் விட்டால் உபசரிக்காமல் இருப்பார்களா? திரு சுப்பிரமணியத்தையும், திரு பக்தவத்சலத்தையும் ஹைதராபாத் தமிழ்ச் சங்கத்தினர் வரவேற்று உபசரித்தனர்.

அங்கு திரு சி. சுப்பிரமண்யம், "ஆங்கிலத்தை அகற்றச் சக்தி வாய்ந்த ஒரு மொழியை அபிவிருத்தி செய்ய இந்திய மக்கள் முயற்சி செய்ய வேண்டும்!" என்று பேசியிருக்கிறார்.

இதன் பொருள் இந்தியை வளர்த்துப் பரப்ப வேண்டும் என்பது. ஆங்கிலத்தின் ஸ்தானத்தில் இந்தியை அமரச் செய்வது நமக்குச் சம்மதமில்லை. இது நம்முடைய மந்திரிக்கு நன்கு தெரியும். ஆயினும் அதற்கு மாறாக வடக்கத்தியார் கூட்டங்களில் பேசுகிறார். இது அரசியல் சாலக்கு.

பழைய நாட்களில் அடி வகுப்புக்களில் ஆங்கிலம் சொல்லித் தந்ததை நிறுத்திவிட்டு, ஆறாவது வகுப்பிலிருந்து பள்ளிக்கூடங்களில் ஆங்கிலம் சொல்லிக் கொடுத்து வந்தார்கள். ஆனால் இப்பொழுது புது ஏற்பாடு செய்திருக்கிறார்கள். நான்காவது வகுப்பிலிருந்தே ஆங்கிலம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பழைய முறைக்குத் திரும்பி வந்திருக்கிறார்கள். இது நல்ல நிகழ்ச்சி. இதைப் பாராட்டிக் கல்வி மந்திரியின் கீழ் வேலை பார்க்கும் சென்னை கல்வி இலாக்கா டைரக்டர் மந்திரியின் முதுகில் தட்டிக் கொடுத்திருக்கிறார்.

சொல் ஒன்று; செயல் வேறாயினும் செயல் நல்லதாயின் போற்றத் தக்கது.

# பாண்டிமாதேவி

பாண்டிமாதேவி சரித்திரத் தொடர் கதையில் ஒரு முக்கியமான திருப்பம் ஏற்பட்டிருக்கிறது. பாண்டிய மன்னர்களின் சிம்மாசனத்தையும், கிரீடத்தையும், வீர வாளையும் பாண்டிய சிம்மாசனத்துக்கு உரிய இளவரசனே கள்வனைப் போல் கவர்ந்து கொண்டு இரவோடு இரவாக ஓடிவிடுகிறான். அப்படி ஓடிய இளவரசனின் இதயத்தைச் செம்பவழத் தீவில் உள்ள மதிவதனி கவர்ந்து விடுகிறாள். அவள் விரித்த வலையில் இளவரசன் சிக்கிக் கொள்கிறான். ஆம், உண்மையிலேயே முதலை பிடிப்பதற்காக விரித்த வலையில் அகப்பட்ட இளவரசனை அப்படியே கருட்டி இழுத்து மரத்தின் உச்சாணிக் கிளையில் வைத்துக் கொண்டு பேசும் அற்புதக் காட்சியைத்தான் இந்த இதழ் அட்டைச் சித்திரமாகத் தீட்டியிருக்கிறார் ஓவியர் வினு. கதையின் சுவைக்கேற்ற சித்திரம்.

## தொழிலதிபர் திரு வி. சேஷசாயியின் மறைவு

பிரபல தென்னிந்தியத் தொழிலதிபர் திரு வி. சேஷசாயி காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம். இயற்கை வளம் அதிகம் பெற்றிராத பிரதேசத்திலும் பெரிய அளவில் தொழிற்சாலைகள் அமைத்து நாட்டின் நலத்தைப் பெருக்க முடியும் என்பதை நிரூபித்துக் காட்டிய பெருமை அன்னாருக்குரியது.



தொழில் வளத்துக்குப் பஞ்சாலைகள் மட்டுமே இருந்த தென்னிந்தியாவில் இதர தொழில்களும் வெற்றிகரமாக நடத்த முடியும் என்று நிரூபித்தார். காஸ்டிக் சோடா, ரசாயன உரம், ரேயான், காஸ்டிக், அலுமினியக் கம்பிகள் முதலிய புதுத் துறைகளில் தொழிற்சாலைகள் ஏற்படுத்தி நடத்திக் காட்டியவர். எல்லாத் துறைகளுக்கும் அவர் ஒரு வழிகாட்டி. அவருக்குத் தென்னிந்தியத் தொழில் உலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

இவ்வளவு உயர்ந்த ஸ்தானத்தை அடைந்த போதிலும், திரு வி. சேஷசாயி எல்லோருக்கும் எளியவராகவே வாழ்ந்து வந்தது அவரது சிறப்பை அதிகப்படுத்துகிறது. அவருடைய எளிமைக்கு அவருடைய ஆழ்ந்த தெய்வ பக்தியையும், ஸனாதன தர்மப் பண்பாட்டில் அவருக்கு இருந்த அடிப்படையான பற்றையும் காரணமாகச் சொல்லலாம். அவருடைய பிரிவால் துயருற்றுள்ள அவர் குடும்பத்தினர்களுக்கு நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# அருள்வாக்கு

நமது சமூகத்தில் ஈச்வர நாமாவைப் பஜனை செய்யும் பழக்கம் தொன்றுதொட்டு வந்து கொண்டிருக்கிறது. வாரந்தோறும் சனிக்கிழமைகளிலும், மற்றும் ஏகாதசி போன்ற விசேஷ நாட்களிலும் பஜனைகள் செய்வது சாதாரணமாகவே காணப்படும் பழக்கம். இதற்காக ஒவ்வொரு கிராமங்களிலும் பஜனைக் கூடங்களும் இருக்கின்றன.

ஒவ்வொரு தெருவிலும் பிள்ளையாருக்கு ஒரு சிறியகோயில் கட்டியிருப்பதை இங்கே பார்க்கிறோம். பெரிய கிராமங்களானால் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் அம்பிகைக்கும் கோயில்கள் இ க்கும். இக்கோயில்களுக்குச் சென்று, அந்தந்த மூர்த்திகளைத் தரிசித்து, சில நிமிஷங்களாவது தியானத்திலிருக்கிறோம். அதன் மூலம் நமக்கு எல்லா சுகங்களையும் அருளியிருக்கும் பரம்பொருளுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

பஜனைக் கூடங்களும் இம்மாதிரி காரியத்துக்காக ஏற்பட்டவையே பல பேர்கள் ஒன்றாகக்கூடி நாமசங்கீர்த்தனத்தில் கலந்து கொள்ளுவதற்காகவே பஜனைமடங்கள் இருக்கின்றன. 'ரகுபதி ராகவ ராஜாராம்' 'ஹரேகிருஷ்ண, ஹரேகிருஷ்ண, கிருஷ்ண, கிருஷ்ண, ஹரே, ஹரே' மற்றும் இவை போன்ற இதர நாமாவளிகளும் இன்னிசை வாத்தியங்களுடன் அவ்விடங்களில் இனிமையாகச் சொல்லப்படுகின்றன.

இன்னும் சில இடங்களில் நகர சங்கீர்த்தனம் செய்யும் பழக்கமும் உண்டு. வைகுண்ட ஏகாதசி போன்ற விசேஷமான புண்ணிய காலங்களில் பெரிய கிராமங்களிலுள்ள மக்கள் எல்லோரும் ஒன்றாகக் கூடி, பகவானுடைய நாமாக்களைச் சேர்ந்து சொல்லுவது சம்பிரதாயம். இதைத்தான் நகர ஸங்கீர்த்தனம் என்று சொல்லுகிறார்கள். ஒவ்வொருவரும் மாலை வேளைகளில் குடும்பத்தில் பஜனை செய்யும் பழக்கத்தை மேற்கொண்டால், நகர ஸங்கீர்த்தனம் செய்வது என்னும் சம்பிரதாயம் வலுப்பெறும். குடும்ப பஜனை செய்யும் வழக்கத்தை மேற்கொள்ளுவது அப்படி ஒன்றும் சிரமமான காரியம் அல்ல. குடும்பத்தில் உள்ளவர்கள் அவரவர்கள் வீட்டில் பூஜை அறையில், அல்லது பூஜை அறை என்று தனியாக ஒரு அறை இல்லையென்றால், ஒரு குத்து விளக்கின் முன் வரிசையாக உட்கார்ந்து கீர்த்தனங்களைப் பாடலாம்.

இந்தக் குடும்ப பஜனை நடத்துவதில் எவரும் வெட்கப்பட வேண்டியதில்லை. இதில் வெட்கப்படுவதற்கு என்ன இருக்கிறது? கருணையே வடிவமாக இருக்கும் கடவுளின் நாமாவைச் சொல்லுவதில் வெட்கத்துக்கு இடமேது? இந்தப் பழக்கம் மிகவும் நல்லது. நம்முடைய ஆனந்தத்தையும் க்ஷேமத்தையும் இது பெருக்கவல்லது இதை ஒவ்வொருவரும் உணர்ந்து ஒவ்வொரு குடும்பத்தினரும் மாலை வேளைகளில் பத்து நிமிஷங்களாவது ஈச்வர நாமாக்களைப் பஜனை செய்வது என்று வழக்கம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

— ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சீ காமகோடிபீடம்

# பிரதம மந்திரியின் சமாதானப் பேச்சு

கொழும்பு, அக்டோபர், 24-ல

இவ்வாரம் வர்த்தக மந்திரி திரு ஆர். ஜி. சேனநாயகா இந்தியப் பிரச்னையைப் பற்றி நிகழ்த்திய ஒரு பிரசங்கம் இந்திய வம்சாவளியினர்களுக்கு மிகுந்த கவலையையும் வெறுப்பையும் அளித்திருக்கிறது. இந்தியர்களுக்குப் பிரஜாவுரிமை வழங்குவதற்காக அரசாங்கம் ஒரு சட்டமியற்றி அதன்படி பிரஜாவுரிமைப் பதிவு வேலைகளை நடத்தி வருகிறது. இச் சட்டம் அநீதியாக அமுல் நடத்தப்படுவதினால் ஏழு லட்சத்துக்கு அதிகமானவர்கள் நாடற்றவர்களாக்கப்பட்டுச் சுமார் ஒன்றரை லட்சம் பேர்களுக்கு மட்டும் இலங்கைப் பிரஜாவுரிமை வழங்கப்பட்டிருக்கிறது. ஒன்றரை லட்சம் இந்தியர்களுக்குமேல் ஒருவருக்குக் கூடப் பிரஜாவுரிமை அளிப்பதில்லையென்று அரசாங்கம் தீர்மானித்திருப்பதாயும் மற்ற இந்தியர்கள் இந்தியாவுக்குத் திருப்பி யனுப்பப்பட்டு விடுவார்கள் என்றும் வர்த்தக மந்திரி ஒரு கூட்டத்தில் சொல்லியிருக்கிறார். அரசாங்கம் இவ்விதம் பிரஜாவுரிமை பெறக் கூடியவர்களின் எண்ணிக்கையைத் தீர்மானிப்பதாயின் அதற்கென்று ஏற்பட்ட சட்டம் வெறும் கேலிக்கூத்தா என்ற கேள்வி எழுகிறதல்லவா?

இவ்வாரம் நடைபெற்ற பத்திரிகை நிருபர்கள் மகாநாட்டில் இதைப்பற்றிப் பிரதம மந்திரி பண்டாரநாயகாவிடம் நமது நிருபர் கேட்டபோது சங்கடமான நிலைமைகளிலிருந்து தப்பித்துக்கொள்ள அரசியல்வாதிகள் வழக்கமாக உபயோகிக்கும் சமாதானத்தைப் பிரதம மந்திரியும் உபயோகித்தார். வர்த்தக மந்திரியின் பேச்சைப் பத்திரிகைகள் சரியாகப் பிரசுரிக்கவில்லையென்றும், இது வரையில் ஒன்றரை லட்சம் இந்தியர்கள் இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்யப்பட்டிருப்பதையும் பிரஜா பதிவு வேலைகள் முடிந்து விட்டதையுமே வர்த்தக மந்திரி குறிப்பிட்டிருக்கிறார் என்றும் பிரதமர் சமாதானம் சொன்னார். இந்தியப் பிரச்னை பிரதம மந்திரி இலாகா பொறுப்பிலுள்ள விஷயமாயிருக்கையில் அதைப் பற்றி வர்த்தக மந்திரி ஒரு பிரசங்கம் செய்து தப்பெண்ணங்களை உண்டு பண்ணுவானேன்? இந்தியர்களைப் பற்றித் தாறுமாறாகப் பேசிப் பொதுஜன உணர்ச்சிகளைக் கிளப்பி விடும் கீழ்த்தரமான நடவடிக்கைகளைச் சில மந்திரிகள் கடைப்பிடிப்பதுதான் பிரச்னை மேலும் மேலும் சிக்கல் அடையக் காரணமாக இருந்து வருகிறது. இலங்கை இந்தியர் பிரச்னையைச் சுமுகமாகத் தீர்க்க இரு அரசாங்கங்களுக்குமிடையே பேச்சு வார்த்தைகள் தொடர்ந்து நடைபெற்று வருவதாயும் விரைவில் ஒரு நல்ல முடிவு ஏற்பட்டு விடும் என்ற நம்பிக்கை தமக்குப் பூரணமாக இருப்பதாயும் பிரதம மந்திரி தெரிவித்தார்.

இலங்கைப் பெண்களை மணந்து ஜீவனாம்சம் கொடுக்குமாறு இலங்கைக் கோர்ட்டாரினால் உத்தரவிடப்பட்ட இந்தியர்கள் இந்தியாவுக்குத் திரும்பி விடும் பட்சத்தில் அவர்களை இலங்கைக் கோர்ட்டுகளின் உத்தரவு கட்டுப்படுத்தாது. இதனால் நியாயமாக ஜீவனாம்சம் செலுத்த வேண்டிய பல இந்தியர்கள் தப்பி விடுகிறார்களாம். அவர்களை மணந்த இலங்கைப் பெண்கள் திக்கின்றித் தவிக்க வேண்டியிருக்கிறதாம். இந்த நிலைமையைச் சீர்திருத்துவதற்காக இலங்கை ஜீவனாம்சச் சட்டத்தை இவ்வாரம் திருத்தியிருக்கிறார்கள். ஜீவனாம்ச வழக்குத் தீர்ப்புகளை இந்திய கோர்ட்டுகள் மூலமாகவும் அமுல் நடத்தப் புதிய சட்டத்தில் வசதி செய்யப்பட்டிருக்கிறது. —ரஜனி

## நல்லவரின் மறைவு

• • •

அரசியல் வட்டாரங்களின் நல்லவர்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறது. திரு பெருமாள்சாமி ரெட்டியார் காலமானார் என்ற செய்தியைக் கேட்டதும் தமிழ் நாட்டிலிருந்த ஒரு நல்ல காங்கிரஸ்காரர் மறைந்து விட்டாரே என்றுதான் தமிழ் மக்கள் ஏக்கமுற்றனர். கொள்கையை விட்டுக் கொடுக்காத அஞ்சாத நெஞ்சினராய் விளங்கினார். காங்கிரஸ் ஸ்தாபனத்தில் அவர் பட்டம் பதவி என்று தேடிச் சென்றதில்லை. ஆனால் அவருடைய அடாத காங்கிரஸ் பற்றையும், நேர்மையையும் சீலத்தையும் கண்டு, காங்கிரஸ் பதவிகள் அவரை நாடி வந்தன. அவர் சில காலம் நமது ராஜ்யத்தில் மந்திரியாகவும் இருந்திருக்கிறார். அவர் மறைவு வட ஆற்காடு ஜில்லாவுக்குப் பெரு நஷ்டம். தமிழ் நாட்டுக்கும் நஷ்டம்.



# "POORNIMA"

Cynosure of discriminating Eyes

FOR 100% PURE

# "MYSORE SILKS"

Manufactured by

**MYSORE GOVT. SILK WVG. FACTORY**



## POORNIMA SILK HOUSE

**CHICKPET : BANGALORE CITY**

# அத்துவைத ஆராய்ச்சி
## —ஒரு கதை
### ராஜாஜி

கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரியாருடைய குமாரர் ராமசந்திர சர்மா சம்ஸ்க்ருதம் நன்றாகப் படித்தவர். காவியம், வியாகரணம், சாஸ்திரம் எல்லாம் நன்றாக ஆராய்ந்து படித்து முடித்தவர். கடைசியாகக் காசியில் ஐந்து வருஷங்கள் ஒரு பெரிய அத்துவைத பண்டிதரிடம் இருந்து விட்டு ஊர் திரும்பினார். அதற்குள் தகப்பனார் வயோதிகராகி, கிரக கிருத்தியமெல்லாம் ராமசந்திர சர்மாவே கவனிக்க வேண்டியதாயிற்று.

அவரால் அது முடியவில்லை. வறுமையின் கஷ்டம் அதிகமாகிக் குடும்பம் மிகவும் வருந்தியது.

சில நாட்கள் கழிந்து தகப்பனார் பரம பதம் அடைந்தார். அதன்பின் தாயாரை அழைத்துக் கொண்டு ராமசந்திர சர்மா காஞ்சீபுரம் சென்றார். அங்கே எப்படியோ ஜீவனம் நடந்தது. பிறகு தாயாரும் இறந்து விடவே, சர்மா காஞ்சீபுரத்தில் ஞானானந்த சந்நியாசி மடத்தில் சேர்ந்தார். பூரண சாஸ்திர ஞானம் அடைந்த சர்மாவைச் சந்நியாசி மிகவும் பிரியமாகவும் மதிப்போடும் நடத்தி வந்தார்.

மடத்தில் ஐந்து சிஷ்யர்கள் இருந்தார்கள். அவர்களில் சர்மா வெகு எளிதில் முதன்மை ஸ்தானம் பெற்று விட்டார்.

சிஷ்யர்களில் ஒருவர் வேங்கடேச சாஸ்திரி அதிகம் படித்தவரல்ல. ஆனால் அவருடைய சீலமும் பக்தியும் எல்லாரையும் கவர்ந்தன. அவர் ராமசந்திர சர்மாவிடம் மிக்க அன்பு கொண்டு தான் படித்திராத சாஸ்திர நூல்களை அவருடைய உதவியைக் கொண்டு சேவித்து வந்தார். இந்த விதத்தில் குரு ஸ்தானம் அடைந்த ராமசந்திர சர்மாவின் உள்ளத்தில் அகங்காரம் புகுந்தது.

முதலில் அவருக்குக்கூட இது தெரியவில்லை. பிறகு வியக்தமாயிற்று. ஆயினும் நன்றாக சாஸ்திரம் கற்றவரான படியால் யாரும் அவருடைய அகங்காரத்தைப் பற்றி ஆட்சேபிக்கவில்லை. 'படிப்போடு அகங்காரம் இருந்துதான் தீரும். அதற்கென்ன செய்ய! அது ஒரு பெருங் குற்றம் ஆகாது' என்று ஞானானந்த சந்நியாசியும்கூட ஒருசமயம் சில சிஷ்யர்களிடம் கூறினார்.

* * *

அத்துவைத சாஸ்திரம் படித்த நிபுணரான ராமசந்திர சர்மா ஒருநாள் வேங்கடேச சாஸ்திரியின் தாயாருடன் —விருத்தாப்பிய தசையில் இருந்த அந்த அம்மையிடம்-பேசிக் கொண்டிருந்தார்.

"என் பிள்ளைக்கு சாஸ்திரம் எல்லாம் சொல்லித் தருகிறீர். நீர் நன்றாக இருக்க வேண்டும்!" என்றாள் கோமதியம்மாள்.

"உங்கள் பையன் வேங்கடேசன் நன்றாகப் படித்தவன். ஆனால் ஏனோ அத்துவைத தத்துவத்தைச் சரியாக உணர்ந்து கொள்ள மாட்டேன் என்கிறான். வியாக்கியானங்களை எடுத்து விளக்கும்போது



ஆட்சேபணைகளைச் சொல்லிச் சொல்லித் தடுக்கிறான்" என்றார் சர்மா.

"உங்கள் புத்தி சூட்சுமம் அவனுக்கு இல்லை. நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்றாள் கோமதியம்மை.

"நான் வேறு, நீ வேறு, அவன் வேறு என்கிற மாயை அவனை விடமாட்டேன் என்கிறது. இவன் துவைதியாகத்தான் போய்த் தீருவான்" என்றார் அவர்.

"துவைதி என்றால் என்ன?" என்று கோமதியம்மை கேட்டாள்.

"ஒன்றுமில்லை. அது உங்களுக்குத் தெரியாது. அது ஒரு தவறான சாஸ்திரம். மாத்வாள் எல்லாம் அந்த சாஸ்திரத்தைத்தான் வைத்துக் கொண்டு அலைகிறார்கள்!" என்றார் சர்மா.

"ஐயோ!" என்றாள் கோமதியம்மாள். ஒன்றும் தெரியாமல். எங்கேயாவது பையன் கெட்டுப் போவானோ என்ற பயம் அவளுக்கு!

* * *

அன்றிரவு மடத்தில் எல்லாரும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். மடத்துக்கு அடுத்த வீட்டில் ஒரு ராஜுபாளையத்துப் பணக்காரர் குடியிருந்தார். மூன்று நாய்கள் வைத்திருந்தார். அவை தவிர மாடு, எருமை, கோழி எல்லாம் உண்டு. எப்போதும் அந்த வீடு கலகலவென்று சந்தோஷம் நிறைந்திருக்கும்.

இப்படிப்பட்ட வீட்டில் நடுராத்திரியில் அன்று ஒரு நாய் அழ ஆரம்பித்தது.

வேங்கடேச சாஸ்திரி தூக்கம் கலைந்து விழித்து நாயின் நீண்ட அழுகுரலைக் கேட்டுக் கொண்டே இருந்தார். அவருக்குத் தூக்கம் வரவில்லை. நேரம் ஆக ஆக அவரால் அந்த அழுகையைத் தாங்க முடியவில்லை. ராமசந்திர சர்மாவை எழுப்பினார்.

"இதென்ன! நாய் மனிதக் குரலில் அழுகிறது. என்னால் பொறுக்க முடியவில்லையே" என்றார் வேங்கடேச சாஸ்திரி.

"இதற்கென்ன பயம்? சந்திரனைப் பார்த்து நாய் ஊளையிடும். இது உனக்கு தெரியாதா? சும்மா தூங்கு" என்றார் சர்மா.

"சந்திரன் இல்லையே! இன்று ஏது சந்திரன்? அமாவாசை கழிந்து இன்று இரண்டாம் நாள்தானே? பாருங்கள், சந்திரன் இல்லை, நல்ல இருட்டு. ஆனாலும் நாய் அழுவதைப் பாருங்கள். ஏதோ ரொம்பவும் கஷ்டப்படுகிறது. போய்க் கேட்கட்டுமா?" என்றார் சாஸ்திரி.

"பைத்தியக்காரா! நாய் எக்கேடு கெட்டுப் போனால் நமக்கு என்ன? தூங்கு. உனக்குத் தூக்கம் வராவிட்டால் தூங்குகிறவர்களை எழுப்பாதே!" என்றார்.

இப்படிச் சொல்லி விட்டு ராமசந்திர சர்மா படுத்துத் தூங்கி விட்டார். நாய் இரவு முழுதும் அழுது ஊளையிட்டுக் கொண்டேயிருந்தது. வேங்கடேச சாஸ்திரி அன்று தூங்கவே இல்லை. வேதனையும் யோசனையுமாகவே இருந்தார்.

"இந்த நாயின் துக்கம் ஏன் என்னைப் பிடிக்கிறது? அது வேறு உயிர், நான்



வேறு உயிர். அந்தக் குரல் ஏன் என்னைத் துன்பப்படுத்துகிறது? இது என்னுடைய அஞ்ஞானமா? அதன் வலி ஏன் என் உள்ளத்தில் சங்கடமுண்டாக்குகிறது?'—இவ்வாறு சிந்தித்துக் கொண்டேயிருந்தார்.

மறு நாள் மத்தியானத்துக்கு மேல் ஓய்வு நேரத்தில் ஞானானந்த சந்நியாசியிடம் சென்று வணங்கி நின்றார்.

"வேங்கடேச சாஸ்திரி! என்ன சமாசாரம்? சுகமாயிருக்கிறாயா?" என்று கேட்டார் சந்நியாசி.

"சுகமாகத்தான் இருக்கிறேன். பக்கத்து ராஜு வீட்டில் ஒரு நாய் இரவு முழுதும் அழுது கொண்டிருந்தது. எனக்குத் தூக்கம் வரவில்லை. என் உள்ளத்திலும் துக்கம் நிறைந்து நின்று பிடித்தது. இது என் அஞ்ஞானமா?" என்று கேட்டார் சாஸ்திரி.

"அஞ்ஞானமல்ல, மகனே! அது ஞானமே யாகும்" என்றார் சந்நியாசி.

"ஓர் உயிரின் நோயானது நோயில்லாத மற்றோர் உயிருக்கு ஏன் துக்கம் தருகிறது?" என்று வேங்கடேச சாஸ்திரி கேட்டார்.

"அப்பனே! எல்லா உயிரும் ஒன்றல்லவா? உடல்கள் வேறாயினும் சுகமும் துக்கமும் ஓரளவு ஒன்றாகப் பரவுகிறது. அதற்குத்தான் 'அநுதாபம்' என்று பெயர். அனைத்தும் ஒன்று என்பதற்கு அதுவே பிரத்யக்ஷப் பிரமாணம். அத்வைதத்துக்கு இந்த அநுதாபம் ஜீவ வித்து!" என்றார் சந்நியாசி.

• • •

"நேற்று உபதேசித்ததை இன்னும் கொஞ்சம் விவரமாக விளக்கவேண்டும்" என்றார் வேங்கடேச சாஸ்திரி, அடுத்தநாள் சந்நியாசியை வணங்கி.

"அநுதாப வேகத்துக்கும் அத்துவைத உண்மைக்கும் உள்ள சம்பந்தத்தையா கேட்கிறாய்?" என்றார் சந்நியாசி.

"ஆமாம், சுவாமி! இந்த அநுதாபம் உள்ளத்தில் ஊர்ஜிதமாக ஏன் வேர் விட்டு வளரவில்லை? ஏன் சிலருக்குக் கொஞ்சமாகவும் சிலருக்கு அதிகமாகவும் இருக்கிறது? சிலர் கல்மனமாக இருக்கிறார்களே! அத்துவைதம் நிரந்தர உண்மையாக இருந்தால் ஏன் மானிட உலகில் அநுதாப வேகம் இருந்தும் இல்லாததுமாக—நீர் வற்றிய பாலாறு போல்—இப்படி மணலாகக் கிடக்கிறது?" என்று கேட்டார் வேங்கடேச சாஸ்திரி.

"அப்பனே! அதுதான் மாயையின் வேலை. நான், நீ, அவன் என்று பிரிந்து கொண்டு பொய்யை மெய்யாக எண்ணுகிறோம். பறவைக் குஞ்சு பறக்கப் பார்க்கிறது. பிறவி வேகம் அதை அப்படித் தூண்டுகிறது. வர வர அது பறக்கும் சக்தியை அடைகிறது. அதைப் போல் அத்துவைத வேகம் மனிதனுடைய உள்ளத்தில் மெள்ள வேலை செய்கிறது. அதுதான் அநுதாபம். பிறர் நோய் நம் கண்களில் நீர் வடியச் செய்கிறது. அதை நாம் அடக்கி அடக்கி மரத்துப் போகச் செய்கிறோம். பிறகு அது இருந்த இடம் தெரியாமல் அழிந்து போகிறது. மாயையானது உண்மையை மறைத்து விடுகிறது. பறவைக் குஞ்சைப் பறக்க விடாமல் கூண்டில் அடைத்தமாதிரி!" என்றார் சந்நியாசி.

"அநுதாப வேகத்தை வளர்த்து வந்தால் அதுவே அத்துவைத ஞானமாகி விகாசம் அடைந்து விடுமா?" என்றார் வேங்கடேச சாஸ்திரி.

"ஆமாம். அதைத்தான் உபநிஷத்தில் ரிஷி சொல்லியிருக்கிறார். உனக்குத் தெரியாதா? பிற உயிர்களை உன் உடலில் இருக்கும் உயிராகவே பார். அவற்றின் சுகமும் துக்கமும் எல்லாம் உன் சுகமும் துக்கமுமாகவே எண்ணுவாய். உன் உயிர் பிற உடல்களில் இருப்பதாக எண்ணி எண்ணிப் பயிற்சி பெற்றாயானால் பயமும் பொறாமையும் வெறுப்பும் நீங்கிப் போம் என்று ரிஷி சொல்லியிருக்கிறதை நீ படிக்கவில்லையா?" என்றார்.

"ஆம்! சொல்லியிருக்கிறது. அது தான் அத்துவைதம் என்று சொல்லவில்லையே!" என்றார் வேங்கடேச சாஸ்திரி.

"அடுத்த மந்திரத்தைப் படித்துப் பார்!" என்றார் சந்நியாசி.

வேங்கடேச சாஸ்திரி குருவை நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டார்.

• • •

இரண்டு மந்திரங்களையும் திரும்பத் திரும்பப் படித்தார்.

"எல்லா உயிர்களையும் தன் உயிராகவே பாவித்துத் தன் உயிரும் பிற உடல்களில் இருப்பதாகவே காண்பவனுக்கு மோகம் ஏது? சோகம் ஏது? அவன் அனைத்தும் ஒன்று என்பதைக் கண்டுவிட்டவன் ஆவான்!" என்று ரிஷி சொல்லியிருப்பதைச் சிந்திக்கலானார்.

அடுத்த நாள் ராமசந்திர சர்மாவிடம் வழக்கப்படி கீதை படித்தார். கர்மயோகம், தியானயோகம், பக்தி யோகம் என்பதைப் பற்றியெல்லாம்

ராமசந்திர சர்மா பிரித்து விரிவாக விளக்கம் செய்தார்.

"இந்த யோகங்களைப் போலவே அநுதாபப் பயிற்சியும் ஒரு யோகம் அல்லவா? பிற உயிரின் துக்கத்தைக் கண்டால் அநுதாப வேகம் தோன்றுகிறது. இயற்கையில் மனித உள்ளத்தில் அது உண்டாகிறது. அதை அடக்கி அடக்கி அழிக்காமல் வளர விட்டுப் பயிற்சி செய்தால் அத்துவைதத்தைக் காண்போமல்லவா?" என்று வேங்கடேச சாஸ்திரி கேட்டார்.

"ஏது, நீ புது சாஸ்திரம் எழுதுவாய் போலிருக்கிறது! தியான யோகமே மேலானது. அநுதாப யோகம் என்று யாரும் இதுவரை தனியாகச் சொல்லவில்லை. கர்ம யோகத்தில் அதுவும் ஒரு பாகம் ஆகலாம். அநுதாப யோகம் என்று நீ எதைச் சொல்லுகிறாய்?" என்று ராமசந்திர சர்மா கேட்டார்.

"தியானம், வேத அத்யயனம், சாஸ்திரம் படிப்பது எல்லாம் தாமஸ ராஜஸ குணங்களை நீக்கி உள்ளத்தைத் திருத்துவதற்குச் சாதனங்கள் தானே? பூததயையும் அதற்கு ஒரு நல்ல பயிற்சியாக ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது? அதைப் பயின்றால் விசுவரூபத்தை அதாவது உயிர்கள் எல்லாம் ஒன்று என்பதைக் காணலாமல்லவா? அதோ, அந்த நாய் இன்னும் அழுதுகொண்டேயிருக்கிறது. என் உள்ளத்தை அது சங்கடப்படுத்துகிறது. கண்களில் தாரை நீர் வடியச் செய்கிறது. இதை அடக்கி விடாமல் இயற்கைக்கு இடம் கொடுத்து வளர விட்டால் செல்லச் செல்ல புஸ்தகம் ஏதும் படிக்காமலேயே அத்துவைத உணர்ச்சி எனக்கு உண்டாகுமல்லவா? நாயின் உயிரும் என் உயிரும் ஒன்றாகப் போகுமல்லவா?" என்று வேங்கடேச சாஸ்திரி கொஞ்சம் தடுமாறித் தடுமாறிச் சொல்லிக் கொண்டு போனார்.

"ஏது நீ பிரவசனம் செய்வாய் போலிருக்கிறது! நாயும் நாமும் ஒன்றாகப் போவது அத்துவைதம் என்கிறாய்!" என்று சிரித்தார் ராமசந்திர சர்மா.

பிரும்ம சூத்திரம் படித்த ராமசந்திர சர்மா சிரித்தார். வேங்கடேச சாஸ்திரி சிரிக்கவில்லை!

* * *

அடுத்த நாள் பக்கத்து வீட்டில் நாய் அழும் சத்தம் கேட்கவில்லை. நின்று விட்டது. என்னவாயிற்று என்று விசாரிக்கப் போனார் சாஸ்திரி. பிராணி வைத்தியசாலைக்கு நாயை அனுப்பிச் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்திருப்பதாக அறிந்தார். அதைக் கேட்டதும் சந்தோஷம் அடைந்தார்.

அத்துவைதமானது புஸ்தகப் படிப்பால் தோன்றாது என்று வேங்கடேச சாஸ்திரி முடிவுக்கு வந்தார். சந்நியாசியும் அது உண்மை என்றார்.

* * *

ராமசந்திர சர்மா சங்கர பாஷ்யத்துக்கு ஒரு புது வியாக்கியானம் எழுதி சந்நியாசிக்குக் காட்டினார்.

"இது நம் மடத்துக்குப் புகழ் சம்பாதித்துத் தரும்" என்று சந்நியாசி சொன்னார். அந்தக் கிரந்தத்தின் பெயர் 'அபிநவபிரபோத சந்திரோதயம்'. யாராவது தனவந்தரிடம் சொல்லி அச்சிடச் செய்யவேண்டும் என்று சந்நியாசி யோசித்து வந்தார்.

இந்த நிலையில் சில மாதங்கள் கழித்து ஞானானந்த சந்நியாசி மடத்தை விட்டு விட்டுப் பரிவிராஜகராகப் போக நிச்சயித்து விட்டார். மடத்துக்குத் தலைவர் ஒருவரை அமைத்து விட்டுப் போக வேண்டும். சிஷ்யர்களில் யாரைப் பொறுக்கி எடுப்பாரோ என்று எல்லாரும் மிகுந்த ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் காலை எழுந்து ஞானானந்தர் "எனக்குப் பகவான் ஆணை வந்தது. வேங்கடேச சாஸ்திரியை மடத்தில் தலைமை தாங்க ஏற்பாடு செய்ய வேண்டும். அவரும் தீட்சை பெற வேண்டும் என ரொம்ப நாட்களாகச் சொல்லி வருகிறார். ஆசாரசீலன், குணவான், பகவத் பிரசாதம் பெற்றவர்" என்று சிஷ்யர்களிடம் சொன்னார் சந்நியாசி.

எல்லாரும் சந்தோஷப்பட்டார்கள்—ஒருவர் தவிர. ராமசந்திர சர்மாவுக்கு இந்த யோசனை வியப்பாக இருந்தது. பிடிக்கவில்லை! "சகல சாஸ்திரமும் படித்த நான் இருக்கிறேன். ஆசார விவகாரம் எல்லாம் தெரிந்தவனாக இருக்கிறேன். 'அபிநவ பிரபோத சந்திரோதய'த்து ஆசிரியன். என்னை விட்டுவிட்டு இந்த நிரக்ஷரகுக்ஷியா மடத்துக்குத் தலைவராக இருப்பது?" என்று தமக்குள் எண்ணி எண்ணிக் கோபம் அடைந்தார்.

பத்து நாட்கள் கழித்து மடத்தை விட்டுப் போவது என்று நிச்சயித்தார். தம்முடைய கிரந்தத்துக் கையேட்டுச் சுவடியை எடுத்துக் கொண்டு 'சிருங்கேரி மடத்துக்குப் போகிறேன்' என்று சந்நியாசியிடம் சொல்லி விட்டு ரயிலேறிப் புறப்பட்டுப் போனார்!



# செல்லம் அழுதது ஏன்?

பிற்பகல் வேளை; பித்தான்கள் உடைந்து காலரிலும் கைகளிலும் கிழிந்திருந்த என் கணவரின் சட்டைகளை நான் தைத்துக்கொண்டிருந்தேன். அதே சமயம் பக்கத்து வீட்டுப் பப்பியுடன் விளையாடிக் கொண்டிருந்த என் குழந்தை செல்லம் திடீரென வீறிட்டு அழுதாள்; அந்த அதிர்ச்சியில் தையல் ஊசியே என் கையில் ஏறிவிட்டது. கோபத்துடன் திண்ணைக்கு ஓடிவந்தேன். அதே சமயம், பப்பியின் தாயார் கண்ணம்மாவும் அங்கு ஓடிவந்து செல்லத்தை வாரியெடுத்து சமாதானம் செய்ய முயன்றாள்: "ஆரு அடிச்சாம்மா என் செல்லக் குழந்தையை?"

"மாமி, ப...ப...பப்பி என் பொம்மயோட கவுனை அழுக்காக்கிட்டா, மாமி!" என்று விசித்து விசித்துக் கூறினாள் செல்லம்.

"அவ்வளவுதானே. பப்பியை ரொம்ப நல்லா அடிச்சுட்டு, உன் பொம்மைக்கு புதுசா ஒரு கவுன் வாங்கிப் போட்டுடலாம். வா!" என்று தேற்றிவிட்டு, இரு குழந்தைகளையும் தன்னோடு அழைத்துச் சென்றாள் கண்ணம்மா. கண்ணம்மாவிடம் காணப்படும் தங்கமான குணங்களில் ஒன்று, தன் குழந்தைகளைப் போலவே பிறர் குழந்தைகளையும் அரவணைத்துக்கொள்ளும் தன்மை. தன் தந்தை பணக்காரர் என்ற கர்வம் எள்ளளவும் அவளிடம் கிடையாது.-இவ்வாறாக எண்ணமிட்ட வண்ணம் அப்படியே கண்ணயர்ந்துவிட்டேன். அப்புறம் செல்லம் வந்து என்னை எழுப்பினாள். கண்விழித்துப் பார்த்ததும், செல்லத்தின் கையிலிருந்த பொம்மைக்குப் புதுக்கவுன் போட்டிருந்தது தென்பட்டது—முன்பிருந்ததைப் போலவே இருந்தது இந்தக் கவுனும். இந்த ஏற்பாடு எனக்குப் பிடிக்கவில்லை. இதை ஆட்சேபிக்க கண்ணம்மாவின் வீட்டுக்கே சென்றேன்.

கண்ணம்மாவோ "புதிதாகக் கவுன் ஏதும் வாங்கவில்லையே. சில துணிகளை நான் துவைக்க வேண்டியிருந்தது. கையோடு கையாக அந்தக் கவுனையும் அலசினேன்" என்றாள். அழகாயிருக்கிறதே பேச்சு! வீட்டில் துணிகளைத் துவைத்துக் கொள்ளும் வழக்கம் எங்களுக்கே கிடையாது; சலவை செய்ய வெளியே அனுப்புகிறோம். அப்படியிருக்க, மோதிரக் கையினால் துணி துவைப்பதாகக் கூறினால், நம்புகிறவள் நானா? "அதெப்படியம்மா துவைத்தீர்கள், அடித்துத் துவைக்கும் சத்தங்கூடக் கேட்காமல்?" என்றேன்.

G. 256A-50 TM

என் பேச்சில் நம்பிக்கை இல்லாவிட்டால் இதோ இந்தத் துணிகளைப் பாருங்கள். இப்போது தான் இஸ்திரிபோட்டு முடித்தேன். ஆனால் அடித்துத் துவைக்கும் சத்தம் கேட்காத காரணம்........."



ஆனால் என் கவனமோ அவள் பேச்சில் லயிக்கவில்லை. வெகு பளிச்சென்று சுத்தமாக விளங்கிய அந்தத் துணிகள் மீது என் பார்வையைப் பதிகொடுத்துவிட்டேன். எனினும், அதே சமயம் என் மனதை உறுத்திய விஷயம் வேறொன்று: தன் செய்கையைப்பற்றி நாலுபேர் என்ன நினைப்பார்கள் என்பதை யோசித்துப் பார்த்தாளா இவள்? இதையே நான் இவளிடம் கேட்டதும், அவள் சிரித்துவிட்டு "நல்ல கேள்வி கேட்டாய். என் வேலையை செய்வதற்கு நான் ஏன் கூச்சப் படவேண்டும். தாம் தூம் விவகாரமே எனக்குப் பிடிப்பதில்லை. என் கையாலேயே நான் துணிகளைத் துவைத்துக்கொள்வதில் எவ்வளவோ சிக்கனமிருக்கிறது. அன்றாடம் உடுத்திக்கொள்ள சுத்தமான துணிகள் கிடைப்பதோடு அவை நீடித்து நிற்கவும் செய்கின்றன" என்றாள்.

"நீடித்து உழைக்கிறதாவது; அதென்னமாக? எங்கள் வீட்டுத்துணிகள் விறுவிறுவென்று கிழிந்துவிடுவதும் வாங்கின சுருக்கோடு விட்டுப்போய் விடுவதும் சர்வ சாதாரணமாகிவிட்டன: வருஷத்துக்குப் பலதடவை புதுத்துணிகள் வாங்கி மாளவில்லை!"



"அடித்துத் துவைப்பதால்தான் அவை கிழிந்துவிடுகின்றன. ஆனால் நாங்களோ அடித்துத் துவைக்காமல் ஸன்லைட் சோப்பினால் சலவை செய்கிறோம்"

பரிசுத்தமுள்ள சிறந்த சோப்பான ஸன்லைட் ஏராளமான நுரை சொரிகிறது என்றும், கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலுமுள்ள எல்லா அழுக்குகளையும் கொடிப்பொழுதில் அகற்றிவிடும் நுரை அதனுடையதுதான் என்றும் விளக்கிக்கூறினாள் கண்ணம்மா.

இப்போதெல்லாம் நாலுபேர் நினைப்பதைப்பற்றி நானும் அக்கரைப்படுவதில்லை. துணிகளை வீட்டிலேயே ஸன்லைட் சோப்பினால் சலவை செய்துவிடுகிறேன். அது சிக்கனமான சோப் என்றும், சிறிதும் பெரிதுமாக சுமார் நாற்பதைம்பது உருப்படிகளை சுத்தமாகவும் பளிச்சென்றும் வெளுப்பதற்கு ஒரே ஒரு வில்லை ஸன்லைட்டே போதுமானது என்றும் கண்டு கொண்டேன். இப்போதெல்லாம் அன்றாடம் உடுத்துவதற்குத் தூய்மையான துணிகள் எங்களெல்லோருக்கும் கிடைத்துவருகின்றன: கிழிசல்கள் தைக்கப்பட்ட ஆடைகளை அணிந்து கொள்ளும் நிலைமையும் காலர்களையும், கைகளையும் கோட்டுக்குள் மறைத்துக்கொள்ளும் அவசியமும் இனி என் கணவருக்குக் கிடையாது. சிக்கனம் என்றால் எல்லா விதத்திலும் சிக்கனம். ஒரு குடும்பப் பெண்மணிக்கு இதைவிட வேறென்ன வேண்டும்?



ணமாக அப் பெரியோர்கள் சமூகத்தை அடியோடு மாற்றிவிட வேண்டும் என்ற கருத்துடையவர்களாக இருப்பார்கள். எல்லா மதப் பெரியோர்களும் இவ்விதமானவர்கள். நெப்போலியன், ஹிட்லரைப் போன்றவர்கள் யுத்த வெறி பிடித்தவர்களாக இருப்பார்கள். இரு வகையார்களும் அரசாங்கத்தைச் சரிவர நடத்த முடியாது.

சிற்சில சமயங்களில் ஜனநாயகத்திலும் உயர்ந்த தலைவர்கள் தோன்றுவார்கள். அமெரிக்காவில் வாஷிங்டன், லிங்கன், ரூஸ்வெல்ட் முதலியோரும், பிரிட்டனில் கிளாட்ஸ்டன், லாயிட் ஜார்ஜ் போன்றவர்களும் எந்த எதேச்சாதிகாரிகளுக்கும் சமமானவர்கள். அவ்விதத் தலைவர்கள் கிடைக்கும்பொழுது அவர்களை நன்கு பயன்படுத்திக் கொண்டால் ஜனநாயகம் விரைவில் முன்னேறும் என்பதில் ஐயமில்லை.

எக் காலத்திலும் தனது கொள்கைகளின் பலத்தாலும், முறைகளின் நேர்மையாலும், நடைபெறக் கூடியது ஜனநாயகம். மக்களின் பக்தியும், புத்தி பூர்வமான ஒத்துழைப்பும் சேர்ந்தால் சாதாரணத் தலைவர்களைக் கொண்டும், பெரிய பெரிய காரியங்களைச் சாதிக்கக் கூடும்.

## 18. பொருளாதாரம்

முன்காலங்களில் அரசாங்கத்துக்கும் பொருளாதாரத்துக்கும் நெருங்கிய தொடர்பு இல்லை. வருவாயில் 6ல் ஒரு பங்கு அரசனுக்கு உரிமை என்பது பண்டை பாரத சம்பிரதாயம். அதுவும் நிலம், வியாபாரம் முதலிய தொழில்களிலிருந்து கிடைக்கும் வருமானத்திலிருந்தே வரி வசூலிக்கப்பட்டது. கொடுங்கோல் மன்னர்கள் தங்கள் இஷ்டப்படி தாங்க முடியாத வரிவசூல் செய்து மக்களைத் துன்புறுத்துவதுண்டு. யுத்தகாலங்களில் வேண்டிய பொருள்களை அரசன் எடுத்துக் கொள்ளுவான். தோற்றுவிட்டால் எதிரியின் சைனியங்கள் கொள்ளையடிப்பார்கள்.

ஆயினும் பெரும்பாலும் விவசாயமும், குடிசைத் தொழில்களுமே பொருள் உற்பத்தி சாதனங்களாக இருந்ததால் இவ்வித கஷ்டங்கள் நீடித்திரா. இயற்கையால் ஏற்படும் வெள்ளம், வறட்சி முதலிய துர்ப்பாக்கியங்களைப் போலவே கொடுங்கோல் மன்னர்களின் செயல்களும் கருதப்பட்டன.

இப்பொழுது நிலைமை முற்றிலும் மாறி விட்டது. தற்காலத்திய அரசாங்கங்களின் செலவு மிகவும் அதிகம். பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடு போன்ற இயந்திர வளர்ச்சி பெற்ற தேசங்களில் நாட்டின் வருமானத்தில் ஏறக்குறைய மூன்றில் ஒன்று வரையில் சர்க்கார் வரியாக எடுத்துக் கொண்டு விடுகின்றனர். பாரதத்தில் 10ல் ஒரு பங்கு தான் தற்சமயம் இவ்விதம் எடுத்துக் கொள்ளப்படுகிறது. நாட்டின் செல்வம் வளரும் பொழுது இந்த சதவும் அதிகரித்து வரும் என்பதில் சந்தேகமில்லை.

தற்காலத்திய வரிகளிலிருந்து எவரும் தப்ப முடியாது. நேர்முகமாக வருமானவரி, நிலவரி, மரணவரி, தான வரி முதலியவை வசூல் செய்யப்படுகின்றன. மறைமுகமாகச் சுங்கவரி, விற்பனை வரி, உற்பத்திவரி, ரயில்வரி, மோட்டார் வரி முதலிய வரிகள் விதிக்கப்படுகின்றன.

இந்த வரிகள் இக்காலத்திய எல்லா அரசியல் அமைப்புகளுக்கும் பொதுவானவை. ஆனால், ஜனநாயகத்தில் வரி விதிப்பதும், வசூல் செய்வதும் குழந்தைகளுக்கு விளக்கெண்ணெய் போட்டுவதுபோலாகும். எந்தக் குழந்தையாவது அதற்குச் சம்மதப்படுமா? ஆனால் பிரஜைகளின் பிரதிநிதிகள் சம்மதித்தே ஜனநாயகத்தில் வரி விதிக்க வேண்டும். ஆதலால், ஏழைகளையும், மத்தியதர வகுப்பாரையும் இலேசாக விட்டுவிட்டு, அதிக வருமானமுள்ளவர்களுக்கு மிகுதியான வரி விதிக்க முயற்சி செய்யப்படுகிறது. இது நியாயமுமே. ஆனால் பணக்காரர்களின் எண்ணிக்கைக்கும், அவர்களின் வருமானத்துக்கும் எல்லையுண்டு. அநேகமாக அந்த எல்லையைப் பல ஜனநாயக அரசாங்கங்கள் அடைந்து விட்டன. பாரதத்திலும் அப்படியே. பணக்காரர்கள்மீது சுமத்தியிருக்கும் வரிகளை இனி உயர்த்துவது சுலபமல்ல. இதற்குமேல் தேவையான வரிகளைச் சாதாரண மக்களிடமிருந்தே வசூல் செய்ய வேண்டும். பிரிட்டன், அமெரிக்காவில் எல்லாக் குடும்பங்களும் வருமான வரி செலுத்துகின்றன. அவ்விதமே பாரதத்தில் விவசாயக் குடும்பங்கள் நிலவரி செலுத்துகிறார்கள். நகரங்களில் இருப்பவர்கள் மட்டும் வருஷ வருமானம் ரூ. 3000 வரையில் நேரில் வரி செலுத்துவதில்லை. ஆனால் மறைமுகமாக அவர்களும் போதிய வரி செலுத்தி வருகின்றனர்.

வரியின் பளு அதிகமாக இருப்பதால், அரசாங்கத்தை ஏமாற்றிக் குறைந்த வரி செலுத்துவதும், செலுத்தாமல் தப்பித்துக் கொள்ளுவதும் ஒரு சூக்ஷ்ம கலையாகிவிட்டது. ஒவ்வோர் பெரிய வியாபாரியும் இக்கலையில் தேர்ச்சி பெற்றோருக்கு ஆயிரக் கணக்காக சன்மானம் கொடுக்கிறான். வருஷந்தோறும் பாரத, ராஜ்ய அரசாங்கங்களுக்குச் சேர வேண்டிய தொகைகளில் 50, 60 கோடி ரூபாய்கள் இவ்விதத்தில் நஷ்டமாகிறதென்று மதிப்பிடப்படுகிறது. இதைத் தடுப்பதில் பிரஜைகள் அரசாங்கத்துக்கு உதவி செய்தால் தங்கள் தலைமீதுள்ள பளு சிறிதளவு குறையும்.

வரி ஒரு பக்கம் விஷம்போல ஏறிக்கொண்டிருக்கும்பொழுது, நாணயத்தின் மதிப்பும் குறைந்து வருகிறது. இருபது வருஷங்களுக்கு முன் ஒரு ரூபாயால் வாங்கக்கூடிய பண்டங்களுக்கு இன்று மூன்று ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறது. அனைவருக்கும் வருமானம் மூன்று மடங்காகி விட்டால், இதனால் கஷ்டமிராது. அப்படியின்றிச் சில வகுப்பாரின் வருமானம் இந்த சவுக்கு அதிகமாகக் கூடியும் மற்றவர்களுக்கு சவுப்படி அதிகரிக்காமலும் இருப்பதால் குழப்பமும், அதிருப்தியும் பெருகி வருகின்றன.

சாதாரணச் செலவுகள் வரிப்பணத்திலிருந்து செய்யப்படுகின்றன. சர்க்கார் தரப்பில் புதிய தொழிற்சாலைகள் ஏற்படுத்தவும், நீர்ப்பாசன அணைகள் கட்டவும், மின்சார உற்பத்தி

நிலையங்கள் அமைக்கவும் வேண்டிய முதலுக்காக ஜனங்களிடமிருந்து சர்க்கார் ஏராளமாகக் கடன் வாங்கவேண்டி யிருக்கிறது. நாணய மதிப்புக் குறைவினால் இந்தக் கடன் தொகைகளின் மதிப்பும் குறைந்து விடுகின்றன. இக்காலத்தில் மிச்சம் பண்ணி வருங்காலத்தில் ரூபாய்க்குக் கால் ரூபாய் பெறுவதில் என்ன லாபமென்று பலர் எண்ண வேண்டி யிருக்கிறது. அதனால் வருங்காலத்தில் மதிப்பு உயரக்கூடிய நிலங்கள், வீடுகள் தங்கம், வெள்ளி முதலிய சொத்துக்களைச் சேர்க்க முயற்சி செய்கிறார்கள். குடியானவர் குத்தகை நிர்ணயம், நகரக் குடித்தனக் காரர்கள் பாதுகாப்பு முதலிய சட்டங்களால் இவைகளுக்கும் அபாயம் ஏற்பட்டு வருகின்றன.

மொத்தத்தில் பல வகைகளில் பொருளாதாரம் சிக்கலாகி, கவலையும், குழப்பமும் அதிகரிக்கின்றன. அதோடு இயந்திர வளர்ச்சியால் நாட்டின் செல்வமும் பெருகி வருகின்றது. ஓங்கும் செல்வத்துக்கும் பெருகும் கவலைக்கும் ஈடு செய்து பிரஜைகளின் அதிருப்தியை வரம்புக்குள் வைத்துக் கொள்ளுவதே ஜனநாயகத்தின் பொருளாதாரப் பிரச்னை.

## 19. முடிவு

‘இ’க்காலத்தில் வாழ்க்கையின் சிக்கல்கள் அதிகரித்து அரசாங்கத்தின் அலுவல்களும் மிதமிஞ்சிப் பெருகி வருவதால் செங்கோல் மிகவும் கடினமாகிறது. ஜனநாயக அரசியலும் சுலபமானதல்ல. ஆனால் இவ்விரண்டும் ஒன்று கூடினாலொழிய, சமூகத்தில் சமாதானமும், சுகமும் நிலைத்திரா.

உலகில் சில நாடுகளில் ஜனநாயகமும் இதர தேசங்களில் ஏதேச்சாதிகாரமும் இருப்பது பேரபாயமாகும். ஏதேச்சாதிகாரங்கள் என்று திடீரென்று எதைச் செய்யுமோ என்ற அச்சத்தால் ஜனநாயக நாடுகள் தமது செல்வத்தில் கணிசமான பாகங்களைச் சைனியத்தில் செலவிட வேண்டியிருக்கிறது.

எல்லா நாடுகளுக்கும் பொதுவான ஓர் உலகராஜ்யம் ஏற்பட்டு சைனியம், நாணயம் முதலிய துறைகளில் சர்வாதிகாரம் பெற்று உலகமக்களனைவரும் ஓர் குடும்பமாகக் கருதப் படாமலொழிய தற்போதைய அபாயங்களும், கவலைகளும் அதிகரித்து வருமென்று பல பெரியார்கள் நினைக்கின்றனர்.

மனித வாழ்க்கை வளரும் தன்மையுள்ளது. ஆதலால் இத்தகைய பிரச்னைகளும் பெருகுவது சகஜமே. அதைப் பற்றி மிதமிஞ்சிக் கவலைப்பட்டுப் பிரயோசனமில்லை. ஒவ்வொருவரும் தனிமையிலும், சிறு கூட்டங்களாகவும் அந்தந்தப் பிரச்னைகளைத் தமது சக்தியளவில் தீர்க்க முயற்சி செய்து மற்றதைக் கடவுளுக்கு விட்டு விடுவதே புத்திசாலித்தனமாகும்.

ஆதலால் பாரதத்தின் தற்போதைய நிலைமையில், அதன் மக்கள் உலகத்துக்குச் செய்யக் கூடிய சேவை, இந்த நாட்டில் ஜனநாயகத்தைப் பாதுகாத்து, செங்கோலை நிலை நிறுத்தி வறுமையையும் அறியாமையையும் அகற்றுவதே. இவைகளில் முதன்மையானது ஜனநாயகத்தின் பாதுகாப்பு. அதை இழந்து விட்டால் இதர நன்மைகளும் தீமைகளாகி விடும். ஜனநாயகத்தின் மூலம் திடீரென்று பொருளாதார முன்னேற்றம் வேண்டுமென்றோ, உலகத்தில் செல்வாக்கு பெற வேண்டுமென்றோ, நேர்மையில்லாத தலைவர்களை ஆதரித்தும், தற்காலத்துக்கு இனியதாகவும் வருங்காலத்தில் விஷமாகவுமுள்ள முறைகளைக் கையாண்டும் செங்கோலைப் பொருட்படுத்தாமல் இருந்தாலும் அதே அபாயங்கள் நேரிடும்.

இதெல்லாம் முடிவில் மக்கள் அறிவையும், குணத்தையும், திறமையையும் பொறுத்திருக்கிறது. பாரத மக்களுக்கு நல்ல குணங்கள் பரம்பரைச் செல்வமாகக் கிடைத்திருக்கின்றன. ஆதலால் அவர்களின் அறிவையும், அதன் மூலம் இக்காலத்திய பணிகளைச் செய்யும் திறமையையும் வளர்ப்பது எல்லா நன்மைகளுக்கும் மூலாதாரமானது. இக்கட்டுரைகள் அந்த நோக்குடனேயே எழுதப்பட்டன. இவற்றில் ஆராயப்பட்ட பொருள்களை அதிக நுட்பமாகவும், விரிவாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறும் பல நூல்களும் கட்டுரைகளும் வெளிவந்து தமிழ் மக்கள் அறிவிலும் ஆற்றலிலும் பாரதத்தின் முன்னணியில் நிற்பார்களாக.



## இந்தியாவில் ஏராளமான
# சீட்டுக் கட்டுகள்

தயாரிப்பாளர்கள். அனைவருக்கும் ஏற்ற பற்பல ரகங்கள் வசீகரமான அனேகவித டிசைன்களில் கிடைக்கும்

விற்பனை விவரங்களுக்கு எழுதவும்

**THE POPULAR FINE ART LITHO WORKS. Tardeo Road, BOMBAY-7**

ஏஜண்டுகள் வி 4 ராமலிங்கம் அண்டு சன்ஸ். 2/422, தம்புசெட்டித் தெரு, சென்னை - 1

---

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி வியாதிகளுக்கு
## மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கண்டு ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: குறிப்பு:—காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| | | | |
|---|---|---|---|
| கரூர் | 1 | காலை | சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| சேலம் | 2 | காலை & மாலை | கோயமுத்தூர் வாட்ச், (பிராஞ்சு) |
| ஈரோடு | 3 | காலை | நவபவன் வாட்ஜில், கோஷா ஆஸ்பத்திரிக்கு எதிரில் |
| திருப்பூர் | 3 | மாலை | ஆர். எஸ். வாசன் & கோ., |
| கோயமுத்தூர் | 4 | காலை & மாலை | ஈஸ்வர் & கோ., (நாடார் மான்ஷன்) 189, ரங்கை கவுடர் தெரு |
| பாலக்காடு | 5 | காலை | நாதம் & கோ., |
| பொள்ளாச்சி | 5 | (2 to 3 மாலை) | எஸ். எஸ். மணி & கோ., |
| உடுமலைப்பேட்டை | 5 | (4 to 5 மாலை) | ராஜேந்திரா & கோ., |
| பழனி | 5 | (6 to 7 மாலை) | ஷண்முகானந்தா பவன் ரெயில்வே ஸ்டேஷன் ரோடு |
| திண்டுக்கல் | 6 | காலை | வி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ் |
| பெரியகுளம் | 6 | மாலை | யூனிடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், மூவிளக்கு ரோடு |
| மதுரை | 7 & 8 | காலை & மாலை | டி. என். வி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| விருதுநகர் | 9 | (8 to 9 காலை) | சரவணமுத்துபிள்ளை சத்திரம், மதுரை ரோடு |
| கோவில்பட்டி | 9 | (10 to 12 பகல்) | தனலக்ஷ்மி மெடிகல் மார்ட் |
| தூத்துக்குடி | 9 | மாலை | தூத்துக்குடி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருநெல்வேலி | 10 | காலை & மாலை | சந்திரவிலாஸ் ஹோட்டல் |
| ,, | 11 | காலை | ,, |
| ஸ்ரீவைகுண்டம் | 11 | மாலை | கோமதிநாயகம் பிள்ளை, மெடிகல் ஷாப் |
| அம்பாசமுத்திரம் | 12 | காலை | கோமதி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| தென்காசி | 12 | மாலை | எஸ். கிருஷ்ணா & கோ., மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருவனந்தபுரம் | 13 | காலை & மாலை | எம். வி. கணபதி ஐயர் & சன்ஸ், அட்டகுளங்கரை |
| ராஜபாளையம் | 14 | காலை | வி. எஸ். திருப்பதி ராஜா, ஜெனரல் மெர்ச்சன்ட் |
| சிவகங்கை | 14 | மாலை | மீனாக்ஷி & கம்பெனி |
| காரைக்குடி | 15 | காலை & மாலை | ஏ. வி. & சன்ஸ் டிராவலர்ஸ், ரெஸ்ட் ஹவுஸ் |
| தேவகோட்டை | 16 | காலை | ஸ்ரீ மீனாக்ஷி ஸ்டோர்ஸ் |
| புதுக்கோட்டை | 16 | மாலை | வசந்தா வாட்ச் |

**ஜம்மி வெங்கடரமணய்யா அண்டு சன்ஸ்**

சென்னை ● திருச்சிராப்பள்ளி ● கும்பகோணம்



# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

54

ஈர நெஞ்சைப் பற்றி வற்புறுத்திச் சொல்லிய பின் புலால் உணவைப் பற்றி முனிவர் உபதேசிக்கிறார்.

நம் நாட்டில் 'சைவம்' அல்லாத உணவை ஆகாரத்தில் சேர்த்துக் கொள்கிறவர்களே பெருந் தொகையினர். அவர்கள் இந்தக் குறள்களைப் பற்றி நொந்து கொள்ளலாகாது.

முனிவர் புலால் உண்ணலை மிக வன்மையாகக் கண்டிக்கிறார். புலால் மறுத்தலை மிகச் சிறந்த இல்லற தருமமாக உபதேசிக்கிறார். அந்தக் காலத்தில் (ஜைனரும் பௌத்தரும் செல்வாக்கு பெற்றிருந்த காலம்) இது மிக முக்கியமான தருமமாக இருந்தது. ஆயினும் புலால் உணவு தவிர்க்கும் விரதத்தில் எக்காலத்துக்கும் பொருத்தமான உண்மை இருக்கத்தான் செய்கிறது.

> தன்னூன் பெருக்கற்குத்
> தான்பிறிதூன் உண்பான்
> எங்ஙனம் ஆளும்
> அருள்

உண்பவன், உண்ணப்பட்ட பிராணி இருவருமே ஊன்படைத்த ஜீவன்கள். தன் ஊனைப் பெருக்குவதற்காக மனிதன் இன்னொரு பிராணியின் ஊனைத் தின்பது என்ன கொடுமை! அவ்வாறு செய்யும் மனிதனுடைய உள்ளத்தில் கருணை என்னும் மனோபாவத்துக்கு இடம் ஏது? கருணையற்றவன்தான் அநாவசியமாகத் தன்னுடைய உடலைப் பெருக்குவதற்காக, வேறு ஆகாரம் இருக்கப் பிற பிராணிகளின் உடலை ஆகாரமாகக் கொள்வான்.

காப்பது வேறு; பெருக்குவது வேறு. தன் ஊனைக் காப்பதற்காக அல்ல, புலால் உண்ணுதல், பெருக்குவதற்காக. காப்பதற்குப் பிற உயிரைக் கொன்ற இறைச்சி அவசியமில்லை. 'பெருக்குவது' என்பதில் அந்த உணவு அவசியம் இல்லையாயினும் ருசிக்காக உண்கிறான் என்பதைக் காட்டுகிறார்.

'ஊன்' என்பதை இரண்டு இடத்திலும் வைத்துச் சொல்வதில், செய்யும் காரியம் எவ்வளவு அக்கிரமம் என்பது எடுத்துக் காட்டப்படுகிறது. சம உரிமை உண்டு எல்லா உயிர்களுக்கும். ஆயினும் ஒரு உயிரின் சந்தோஷத்துக்காக மற்றொரு உயிரின் சொத்தைப் பறிமுதல் செய்வது குற்றம். அதிலும் எப்பேர்ப்பட்ட சொத்து. உயிரோடு பிரியாத இணைப்பு கொண்ட சொத்து. அதைப் பறித்துத் துன்பம் உண்டாக்கும் மனிதனுக்கு அருள் என்பது வெகு தூரம். உள்ளத்தில் ஈரம் இருப்பவன் அதைச் செய்ய முடியுமா? ஈரம் வற்றிப் போனால்தான் அதைச் செய்ய முடியும். செய்யச் செய்ய இயற்கையிலிருந்த ஈரம் வற்றிப் போகும்.

புலால் உண்பவர்கள் நெஞ்சு ஈரத்தைப் பற்றிப் பேசாமலிருப்பதே நலம். அவர்களுக்கும் அருளுக்கும் வெகு தூரம் என்கிறார் முனிவர். இது

புலால் உண்ணும் வழக்கத்தை விடாமல் வேதாந்தம் பேசுபவர்களைப் பார்த்துச் சொல்வதாகும்.

புலால் உணவு வேண்டுபவர்கள் பிற உயிரின் மேல் கருணை வைக்காதவர்கள் உணவு முறையில் கொடுமை செய்பவருக்கு அருள் என்கிற பேச்சுக்கு உரிமை இல்லை. பேசலாமே ஒழியப் பேச்சில் மெய்ம்மை இருக்க முடியாது இது குறளின் கருத்து.

பொய் பேசுவதே தொழிலாக வைத்துக் கொண்டிருக்கிறவனுக்கு வாய்மையைப் பற்றிப் பேச உரிமை இல்லை என்பதைப் போல. பொய்க்கும் வாய்மைக்கும் உள்ள வேற்றுமை புலால் உண்ணுனுக்கும் நெஞ்சு ஈரத்துக்கும் இருக்கும் வேற்றுமை. இதை அடுத்த குறளில் இன்னும் விளக்குகிறார்.

• •

படைகொண்டார் நெஞ்சம்போல்
நன்றுஊககாது ஒன்றன்
உடல்சுவை உண்டார்
மனம்

கசாப்புத் தொழில் செய்பவனுக்கும் புலால் உண்டு மகிழ்ச்சி அடைகிறவனுக்கும் பேதம் இல்லை என்கிறார். மனத்தை நல்ல வழியில் பண்படுத்தாமல் ஒரு பிராணியின் உடலாகிய இறைச்சியில் ருசி கண்டு உண்பவனுக்கும் கத்தியைக் கொண்டு பிராணிகளை வெட்டி வதம் செய்யும் கசாப்புத் தொழிலில் வாழ்க்கை நடத்துபவனுக்கும் பேதமில்லை. இருவர் மனமும் ஒன்றேயாகும். இருவரும் ஈரமற்ற கொடும் நெஞ்சு பெற்றவர்களாவார்கள்.

நான் கொல்லவில்லை. கசாப்பு வேலை செய்கிறவன் கொன்றான் நான் அவனிடம் இறைச்சியை வாங்கி உண்கிறேன். கொல்லும் தொழிலில் நான் இறங்க மாட்டேன் என்று சமாதானம் செய்து கொள்ளுவதில் பயனில்லை என்கிறார் முனிவர். சமைத்த புலாலை மென்று ருசி கண்டு உண்ணும் போது பிராணியைக் கத்தி எடுத்து இரக்கமில்லாமல் வெட்டுவதாகவே வைத்துக் கொள்ள வேண்டும். "நன்று ஊக்காது உடல்உண்டார்"-இதற்கும் அதற்கும் ஒரு பேதமுமில்லை என்பதை ஆராயாமல், நான் பிராணியைக் கொல்லும் பாவத்தில் இறங்கவில்லை. வேறு ஒருவன் கொன்றதைத்தான் நான் உண்கிறேன் என்று சமாதானம் செய்து கொள்ளுவது மடமை; ஆகையால் நன்று ஊக்காது என்றார். சுவை உண்டார்-நன்றாயிருக்கிறது, நன்றாயிருக்கிறது என்று சுவையை அனுபவித்து உண்பவர்கள்.

புலால் உணவு உட்கொள்வதை வழக்கமாக வைத்துக்கொண்டிருப்பவர்கள் கசாப்புத் தொழிலை ஈனத் தொழிலாகப் பாவிக்கிறார்கள் மிக ஈனத் தொழிலாகவே பாவிக்கிறார்கள். இதை வைத்துத்தான் "நன்று ஊக்காது" என்று எடுத்துக் காட்டி அதிலுள்ள அறியாமையை விளக்கினார்.

'படைகொண்டார்' என்பதற்குக் கசாப்புத் தொழில் செய்பவர்கள் என்று பொருள் கொள்ளாமல், 'ஆயுதம் எடுத்தவர்கள்' என்று பொதுவாகப் பொருள் கொடுக்கும் சொல்லலாம். அதாவது.-ஒரு கொலை செய்யும் யோசனையில் கத்தியோ குலமோ, வில்லோ எடுத்தவர் கருணை என்கிறதை மறந்து விட்டு எண்ணிய கொலையையே நோக்குவது போல், புலாலை உண்டு அந்த ருசியில் ஈடுபட்டவர்கள் தாம் செய்யும் பாபத்தை எண்ணாமல் புலாலை விரும்பிப் புசிப்பார்கள் என்றும் விளக்கலாம்.

இரண்டு பொருளிலும் உள்ள சாரம் ஒன்றே—உண்பவனும் ஆயுதம் கொண்டு கொல்லுகிறவனும் ஒரு சமானம் என்பது.



# உயர்தரத்திற்கும் சிறப்பான த்வனிக்கும்

இணையற்ற இரு

## அற்புதமான நேஷனல்-எக்கோ ரேடியோ மாடல்கள்!



இதோ செவிக்கினிய விருந்தளிக்கும் இரு நேர்த்தியான நேஷனல்-எக்கோ ரேடியோ மாடல்கள். உயர்தரம் வாய்ந்த இந்த ரேடியோக்களின் ஒலிபரப்புகளை அற்புதமாகக் கேட்கலாம்! இவைகள் 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டவை. மற்றும் ஒரு வருஷத்திற்கு உத்திரவாதம் கொண்டவை. உங்களுக்கு அருகாமையிலுள்ள நேஷனல்-எக்கோ ரேடியோ வியாபாரியிடம் இவைகளை இயக்கிக் காண்பிக்கச் சொல்லுங்கள்!



மாடல் 717: தங்கவர்ண வேலைப்பாட்டுடன்கூடிய, மரூன் நிற பிளாஸ்டிக் காபினெட். மாடல் U-717: 5 வால்வுகள்; 3 பாண்டுகள்; 250 வோல்ட் ஏஸி/டிஸி செட். மாடல் B-717: 4 வால்வுகள்; 3 பாண்டுகள்; புஷ் பாட்டரி செட். ரூ. 250/-

விலைகள் நெட்.
உள்ளூர் வரிகள் தனி



மாடல் 187: 6 வால்வுகள், 5 பாண்டுகள், அழகிய மர காபினெட். மாடல் A-187 ஏஸி செட்; மாடல் U-187 ஏஸி/டிஸி செட். ரூ. 475/-

நேஷனல்-எக்கோ
ரேடியோக்கள் சிறந்தவை —
அவைகள்




செய்யப்பட்டவை

GRA. 4/58



**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸெஸ் பிரைவேட் லிமிடெட்**

ஆபேரா ஹவுஸ், பம்பாய்-4 • 3, மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா-13 • ஃபிரேஸர் ரோடு பாட்னா • 1/18, மவுண்ட் ரோடு, மதராஸ் • 36/79, ஸில்வர் ஜூப்ளி பார்க் ரோடு, பெங்களூர் • ஜோத்தியன் பில்டிங், சாந்தினி சௌக், டெல்லி

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 9. தக்ஷன் செய்த வேள்வி

பிரமதேவனுடைய மனத்திலின்று தோன்றிய மைந்தருள் ஒருவரான தக்ஷன், ஸ்வாயம்புவமனுவின் மூன்றாவது மகள் ப்ரஸூதியை மணந்துகொண்டான். இவர்களுக்குப் பதினாறுபெண்கள் பிறந்தனர். கடைசிப் பெண் ஸதி என்பவளைச் சிவபெருமான் மணந்தார்.

முன் ஒரு காலத்தில் பிரமனுடைய புதல்வர்கள் அனைவரும் கூடி ஒரு வேள்வியை ஆரம்பித்தனர். அவ்விடத்துக்கு தேவரும், முனிவரும் ஏனைய பெரியோரும் வந்து சேர்ந்தார்கள். கதிரவன் போல் ஒளி வீசிக் கொண்டு தக்ஷனும் சென்றிருந்தான். இவனைக் கண்டதும் கூடியிருந்தோர் அனைவரும் எழுந்து வணங்கினார்கள். ஆனால் இவனுடைய தந்தையான பிரமனும், சிவனும் எழுந்து நிற்கவும் இல்லை, வணங்கவும் இல்லை. தக்ஷன் பிரமனை வணங்கிவிட்டுத் தம் இடத்தில்போய் உட்கார்ந்தான்.

ஆனால், தன் மருமகனான சிவன் தன்னைக் கவனிக்கவில்லை என்று தக்ஷனுக்குக் கோபம் மேலிட்டது. சிவனை நெருப்பென நோக்கிக் கீழ்வருமாறு மொழிந்தான்:

"இங்கு வந்திருக்கும் தேவரும் அந்தணரும் கேளுங்கள்! நன்னெறி தவறிய சிவன் லோக பாலகர்களுடைய பெருமையைக் குறைத்து விட்டான். என் பெண்ணை இவனுக்குக் கொடுத்து மகனெனக் கருதினேன். மான்விழிபடைத்த மகளைக் கொண்ட இக் குரங்குமுகன் என்னைக் கண்டதும் எழுந்து வணங்க வேண்டியவன்; வார்த்தையினால்கூடமரியாதை செய்யவில்லை. பேய்களும், பூதங்களும் சூழச் சுடுகாட்டில் தலைவிரித்தாடித் திரிகிறான். சிதைச் சாம்பலைப் பூசிக் கபால மாலை பூண்டு சிவன்* என்று பேர் இருந்தும் அபசகுனத்துக்காளாகி நிற்கிறான். பிரமன் சொல் கேட்டு என் மகளை இப் பித்தனுக்கு மணம் செய்து கொடுத்தேன்."

கைலாயபதியை இவ்வாறு ஏசினதும் போதாமல் மற்றத் தேவதைகளுடன் யாகத்தில் பாகம் இனிமேல் சிவனுக்குக் கிடையாது என்று சபித்து விட்டுத் தன் வீடு திரும்பினான். இதைக் கேட்ட நந்திகேச்வரர் "இந்த அறிவிலி இன்று தொட்டு உண்மையைக் கண்டறியான். சிற்றின்பச் சேவகனாய் வேள்விகளில் கடந்துழல்வான். தன்னையே தெரியாமல் விலங்கென மாறிவிட்டான். சிவனை அறியாத இம்மூடனுக்கு எண்ணற்ற பிறவிகள் வந்து கூடும். மாதரிடம் மயங்கி நிற்கும் இவனுக்குத் தன் தலைபோய் ஆட்டுத்தலைதான் லபிக்கும்" என்று தக்ஷனைச் சபித்தார். பிறகு, தக்ஷன் செயலைக் கண்டிக்காமல் பார்த்திருந்த அந்தணரை "மறையின் உட்பொருளை யுணராமல் அது சொன்ன செயல்களில்மட்டும்மனத்தைச் செலுத்தி வரும் இந்த வேத் துரோகிகள் வயிற்றுக்காக வித்தையை விற்றுப்பிச்சை எடுத்துக் கிடைத்ததை உண்டு காலம் கழிக்கக் கடவது" என்று சபித்தார்.

அந்தணர்மீது சாபம் இட்டதைக் கேட்டுக் கோபம் கொண்ட பிருகு என்ற ரிஷி, "சிவனைச் சார்ந்தவர் வேதத்துக்கு விரோதிகளாவார். கள்ளுடன் கலந்து செய்யும் சிவபூசையானது சடை பூண்டு சாம்பல் பூசித் திரியும் மதியீனருக்கே தகுதி. வேதத்தை இகழ்வோர் வேறு மதத்தவர். மறை என்பது சான்றோர் வகுத்த வழி. விஷ்ணுவுக்குப் பிரியமானது. இதைப் பழிக்கும் நீங்கள் நல்வழி தழுவிப் பூதேசனை வழிபடுவீர்"

---

* சிவம் என்றால் மங்களம் என்று பொருள்.



என்று இதற்கு எதிராகச் சிவகணங்களைச் சபித்து விட்டார்.

• • •

யாகசாலையை விட்டுச் சிவன் தம் பரிவாரங்களுடன் கைலாயம் சென்றார். அவர் முகத்தில் துயரம் குடிகொண்டது. சிவனுக்கும் தக்ஷனுக்கும் நெடுநாட்களாகப் பகை நீடித்தது.

தலைவருக்குள் முதல்வன் என்று பிரமனால் நியமிக்கப்பட்ட தக்ஷன் செருக்கை அடைந்தான். 'வாஜபேயம்' என்ற வேள்வியை நடத்தினான். அதற்குமேல் 'பிரகஸ்பதி - ஸவம்' என்ற மிகக் கடினமான மற்றொரு வேள்வியை ஆரம்பித்தான். இந்த வேள்விக்கு அந்தணரும், தேவ ரிஷிகளும், பித்ருக்களும் விண்ணவரும் தங்கள் மனைவியருடன் நல்லாடை உடுத்து ஆபரணம் அணிந்து கொண்டு வந்தனர்.



அச்சமயம் தக்ஷன் மகள் ஸதி, ஆகாயத்தில் ஏகும் தேவர்கள், தன் தந்தையின் பெரும் வேள்வியைப் புகழ்வதைக் கேட்டாள். அழகு வாய்ந்த யக்ஷரும் கந்தர்வரும் பொன் நகை அணிந்து பட்டுடுத்தித் தம்பதிகளாய் விமானங்களில் போவதையும் கண்ணுற்றாள். வேள்விக்குத் தானும் போக வேண்டும் என்று ஆசை மிகுந்து, ஸதி தன் கணவனிடம் விடை கேட்டாள்.

''உங்கள் மாமன் வீட்டில் பெரிய யாகம் நடைபெறுகிறது. நாமும் அதற்குப் போவோம். என் சகோதரிகள் அனைவருக்கும் என் தந்தை நன்கொடைகள் வழங்குவார், நமக்கும் கொடுப்பார். என் தாயைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை மேலிடுகிறது.

''பிறவி அற்ற உங்களிடம் சிருஷ்டி எல்லாம் மாயை என்ற தோற்றத்தில் தெரிகிறது. உண்மை, ஆனால் என் பேதைமை என்னைப் பிறந்த அகத்துக்கு இழுக்கிறது. பாருங்கள், எல்லோரும் அலங்காரம் செய்துகொண்டு அங்கே போகிறார்கள். வெண்ணிறம் வாய்ந்த அன்னங்களென விமானங்கள் வானத்தில் விரைகின்றன. தந்தை வீட்டில் நற்சடங்கென்று கேட்ட எந்த மகள் தான் ஆசையற்றிருப்பாள்? கணவன் வீட்டுக்கும், ஆசிரியர் வீட்டுக்கும், பெற்றோர் வீட்டுக்கும் அழைக்கவும் வேண்டுமா? ஆகையால், தங்கள் உடம்பில் பாதியாய் என்னைப்பாதுகாக்கும்பதியே! என் கோரிக்கைக்கு இணங்கி அனுமதி கொடுங்கள்'' என்று வினயத்துடன் வினவினாள்.

சிவன் நகைத்தார். தாம் பட்ட அவமானம் அவர் நினைவுக்கு வந்தது. மனைவிக்கு மெதுவாகப் பதில் உரைத்தார்.

''சுற்றத்தார் வீட்டுக்குத் தானாகப் போவதில் தவறில்லை. ஆனால் இன்பத்தால் கண்மூடி, பணத்தாலும், படிப்பாலும், தவத்தாலும், குலத்தாலும், வயதாலும், அழகாலும் செருக்கடைந்து வாழும் சுற்றத்தாரைக் காண்பதில் பயன் இல்லை. போர்க்களத்தில் அம்பினால் அடியுண்டால், நாளடைவில் புண் ஆறி உறங்கலாம்; ஆனால், மாசேறிய மனத்தினர் மொழியும் தீச்சொற்கள் அல்லும் பகலும் நெஞ்சைப் புண்படுத்தும்.

''தக்ஷன் மகளாயிருந்தும், நீ என் மனைவியாக இருப்பதினால் உன்னை அவர்கள் அவமதிப்பார்கள். வந்தவரைக் கண்டவுடன் எழுந்து நிற்பதும், நண்பரை எதிர்கொண்டு அழைப்பதும், வணங்குவதும், ஒவ்வொருவர் உள்ளத்திலும் குடிகொண்டிருக்கும் கடவுளுக்கேயன்றி, பிறருடைய உடம்புக்கல்ல. ஆகையால் என்னை அவமதித்த தக்ஷன் முகத்தில் நீ விழிக்க வேண்டாம். என் சொல்லை மீறினால் உனக்குத் தீமையே விளையும்'' என்றார் சிவபெருமான்.

தம் மனைவி எப்படியும் உயிர் துறப்பாள் என்று அறிந்த சங்கரர், தாம் சொல்ல வேண்டியதைச் சொல்லி

விட்டுச் சும்மா இருந்தார். ஸதியின் மனம் தந்தையிடமும் கணவனிடமும் மாறி மாறி ஊசலாடியது. துயரம் மேலிட்டு அழுதாள். கணவனைக் கோபத்துடன் நோக்கினாள். பெருமூச்சு விட்டாள். பெண் மதியினால் விவேகத்தைத் துறந்தாள். சிவனை விட்டுத் தந்தை வீட்டுக்குப் புறப்பட்டாள்.

சிவனுடைய பரிவாரங்கள் நந்தியின் தலைமையில் ஸதியோடு பின்சென்றன. கையில் மைனாவும், பங்கஜமும், பந்தும் ஏந்தி, மாலைகள் தரித்துச் சேவகர் வெண்குடை பிடித்துச் சாமரம் வீசச் சங்கும், குழலும் பேரிகையும் ஒலிக்க ஸதி தன் பிறந்தகம் போனாள்.

யாகசாலையை அணுகியதும் வேதத்தின் இசை ஸதியின் காதில் விழுந்தது. ஆனால் இவள் உள்ளே நுழைந்ததும் அங்கிருந்தவர்கள் இவளைப் பார்த்தும் பார்க்காததுபோல் இருந்து விட்டார்கள். தாயும் சகோதரிகளும் மட்டும் ஸதியை ஆசையுடன் அணைத்து, ஆனந்தத்தால் கம்மிய குரலோடு வரவேற்றனர். தக்ஷன் ஸதியை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. தன் கணவனுக்கு யாகத்தில் சேர வேண்டிய பாகத்தை வகுத்து வைக்காததையும், தன்னை அவமதித்ததையும் கண்ட ஸதி கோபத்துடன் சீறினாள்.

“தந்தையே! உம்மைத் தவிர தன்னிகரில்லாச் சிவனிடம் ஒருவரும் பகை பாராட்ட மாட்டார்கள். உம்மைப் போன்றவர் பிறரிடமிருக்கும் நற்குணத்திலும் தீமையைக் காண்பர். தேகத்தைத் ‘தான்’ என்று எண்ணும் மதியினர் பெரியோரைப் பழிப்பது இயல்பே. சொன்ன மாத்திரத்தில் பாபங்களை அழிக்கும் நாமம் பூண்ட சிவனைப் பகைக்கிறீர். நீர் கடைத்தேறுவது ஏது? உயிர்களுக்கெல்லாம் நட்பை நல்கும் சிவனிடம், வண்டுகள் தாமரையைத் தேடுவது போல் யோகிகள் தேடும் தான் படைத்த சிவனிடம் விரோதத்தை வளர்க்கிறீர்.

“தன் பிரபுவை வரையின்றி வைவதைக் கேட்பது தீது. அவ்விடத்தை விட்டு உடனே அகல வேண்டும். இல்லையேல் அவன் நாவை அறுத்தெறிய வேண்டும். தானும் உயிரை வைத்திருக்கலாகாது. ஆகையால் நீர் பெற்ற இந்த உடலைத் துறந்து வெளியேறுவேன். சிவனை இகழ்ந்தவர் பெற்ற இந்த உடலால் என்ன பயன்? இது ஒழியட்டும்” என்று கூக்குரல் இட்டாள். பிறகு ஆசமனம் செய்து விட்டு, மஞ்சள் ஆடை அணிந்து, கண்களை மூடிக்கொண்டு யோக முறையில் தன் உயிரை உடலினின்று பிரிக்கத் தொடங்கினாள். பிராணனை மெதுவாகக் கீழ் இருந்து மேலே கொண்டு போனாள். காற்றையும் நெருப்பையும் வரும்படி ஏவினாள். தன் பதியின் மீது மனத்தை வைத்து வேறு அனைத்தையும் மறந்தாள். திடீரென்று அவளைச் சுற்றி நெருப்பு பற்றிக் கொண்டது. ‘ஆ’ என்று விண்ணோர் ஆச்சரியத்துடன் பேரொலி செய்து திகைத்து நின்றனர். தக்ஷனை நிந்தித்தனர்.

இதைப் பார்த்திருந்த சிவகணங்கள், தக்ஷனைக் கொல்வதற்கு ஓடி வந்தார்கள்.



அவர்களுடைய வேகத்தைக் கண்ட பிருகு மகரிஷி, யாகத்தை அழிக்க வந்தவரைத் தடுக்கவல்ல மந்திரத்தை ஓதி ஆஹுதியை* அக்கினியில் வார்த்தார். பல்லாயிரம் பேர்கள் நெருப்பினின்று உடனே கிளம்பினார்கள். அவர்களை எதிர்க்க முடியாதவராய்ச் சிவனுடைய சேவகர்கள் நாலா பக்கங்களிலும் ஓடி விட்டார்கள்

• •

நடந்ததை யெல்லாம் நாரதர் வாயிலாக சிவன் கேட்டார். கடுங்கோபம் மீறி உதட்டைக் கடித்தார். 'ஓ' என்று அலறினார். தம் சடையில் ஒன்றை எடுத்து மின்னலோ, கடரோ என்று அஞ்சுமாறு, வீசித் தரையில் ஓங்கி அடித்தார். அதிலிருந்து ஒரு பெரும் புருஷன் கிளம்பினான். அவன்தான் சிவனுடைய அம்சமான வீர பத்திரன். முக்கண்ணும் சடையும் ஆயிரம் கைகளும் கோரமான பற்களும், மண்டை ஓட்டு மாலையும், வானத்தை அளாவும் தேகமும் தூக்கிய ஆயுதமும் துலங்க, சிவனை நோக்கி, "பிரபோ! நான் என்ன செய்ய வேண்டும்? கட்டளை இடுங்கள்" என்றான்.

"என் கணங்களை உதவியாகக் கொண்டு தக்ஷனையும் அவன் வேள்வியையும் அழிப்பீர்" என்றார் சிவபெருமான்.

சினம் கொண்ட சிவன் வாக்கைக் கேட்ட வீரபத்திரன் இடி இடித்தெனெ அலறிக் கொண்டு யாகசாலையை நோக்கி ஓடினான்.

வடதிசையில் சூழ்ந்த இருளைக் கண்டு யாகத்தைக் காண வந்தவர் நடுங்கினர். "இதென்ன இருள்? இதென்ன புழுதி? புவியின் முடிவா?" என்று ஒருவரையொருவர் கேட்டார்கள். இதற்குள் ருத்ரனுடைய படைகள் யாகசாலையைச் சுற்றிக் கொண்டன. சிலர் குள்ளர். சிலர் செந்நிறம். சிலர் கருநிறம். சிலர் முதலை போன்ற வயிறு வாய்ந்தவர் — இவர்கள் அனைவரும் சாலையில் புகுந்து அட்டகாசம் செய்தனர். உத்தரத்தை உடைத்து அந்தப்புரத்தை அழித்து. யாகசாலையைத் துகளாக்கி, உக்கிராணத்தைச் சிதறடித்து, மடப்பள்ளியைத் தரை மட்டம் செய்தார்கள். சிலர் பாத்திரங்களை உடைக்க, சிலர் வேள்வியின் அக்கினியை அணைக்க, சிலர் கோலத்தைக் கலைக்க யாகசாலை அலங்கோலப்பட்டது. சிலர் ரிஷிகளைப் புடைத்தனர். சிலர் மாதரை மிரட்டினர். சிலர் தேவரைத் தூக்கி எறிந்தனர். மணிமான் என்பவன் பிருகுவைக் கட்டினான். வீரபத்திரன் தக்ஷனைக் கட்டினான். கல்லும் கழியும் கலந்து படுத்தும் பாட்டைத் தாங்க முடியாத புரோகிதர் இருந்த இடம் தெரியாமல் பறந்தனர். வீரபத்திரன் மகாகனம் பொருந்திய பிருகுவின் மீசையைப் பிய்த்தெடுத்தான். பகனுடைய கண்களைக் கையால் பறித்தான். பூஷனின் பற்களை உடைத்தான். தக்ஷனைத் தரை மேல் தள்ளிக் கத்தியால் அவன் கழுத்தை வெட்ட முயன்றான். முதலில் வெட்ட முடியவில்லை. பின்னர் வேள்விக்கு ஆட்டை அறுப்பது போல், அறுத்துத் தலை வேறு உடல் வேறு என்று பிரித்தான். சிவகணங்கள் ஆரவாரம் செய்தன. தக்ஷன் தலையை வீரபத்திரன் 'தக்ஷிணாக்னி' என்ற வேள்வி நெருப்பில் விட்டெறிந்தான். முடிவில் யாக சாலைக்குத் தீ வைத்து விட்டு அனைவரும் கைலாயத்துக்குத் திரும்பினார்கள்.

வேள்விக்கு வந்தவர் யாவரும் பிரமனிடம் சென்று நடந்ததைச் சொல்லி முறையிட்டார்கள். அதற்குப் பிரமன், "சிவனுக்குச் சேர வேண்டிய யாகத்தின் பங்கைக் கொடுக்காமல் ஏமாற்றினீர்கள். எளிதில் களிப்புறும் சிவனையே சரண் புகுதல் நலம்" என்று ஆலோசனை கூறினார். பிரமனுடன் கூடி தேவர் கைலாயம் சென்றனர்.

பாடும் கந்தர்வரும், ஆடும் அப்ஸரஸ்களும் வாழும் கைலயங்கிரியின் அழகைக் கண்டு அனைவரும் ஆச்சரியம் அடைந்தார்கள். அங்கே சித்தருக்கேற்ற குகைகள், மரங்கள், செடிகள், சலசல வென்று ஓடும் ஆறுகள் பல இருந்தன. மதுவுண்ட சுரும்பும், கார் மேகம் கண்ட மயிலும் கூடிச் சத்தமிட்டு எதிரொலி எழுப்பும் மலையும், குயிலோசையும், 'வா' என்று கையால் அழைப்பது போல் ஆடும் இலைகளும் பறவைகளைக் கூப்பிடுவது போல் தோன்றும். ஆனைக் கூட்டங்கள் நடமாடும் மலையெனத் தோற்றம் அளிக்கும். ஓடும்நீர் ஒலி,பேச்சைஒத்திருக்கும்.

அந்தப் பர்வதத்தில் அளகாபுரி என்ற குபேர பட்டணத்தை தேவர்கள் கண்டார்கள். அந்நகரில் 'ஸௌகந்திகம்' என்று நறுமணம் வீசும் தாமரை மலருகிறது. நகரத்துக்கு வெளியே ஆலகநந்தா நந்தா என்ற இரு புண்ணிய நதிகள் உள்ளன. காம விளையாட்டால் களைத்த தேவ மாதர்கள் அங்கே நீராட வருவார்கள். அவர்கள் மார்பில் அணிந்த குங்குமம் நீரோடு கலந்து நறுமணப் பிரவாகமாய் ஓடும். மணத்தில் மயங்கி யானைகள் தாகமில்லாவிட்டாலும் அந்

* தெய்வாதும் வேறு ஜீவியங்களாலும் அக்னியில் செய்யும் ஓமம்.

நீரைத் தாமும் குடித்துப் பெண் யானைகளுக்கும் கொடுக்கும்.

தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்த விமானங்களும் எழில் வாய்ந்த யக்ஷ மாதர்களும் நிறைந்த அளகாபுரி மின்னலும் மேகமும் மிகுந்த ஆகாயத்தைப் போல் விளங்கியது.

சிறிது தூரம் சென்றதும் தேவர்கள் ஒரு பெரிய ஆலமரத்தைக் கண்டனர். நூறு யோசனை* உயரமும், எழுபத்தி ஐந்து யோசனை சுற்றளவும் உள்ள அந்த மரத்தடியில் எப்பொழுதும் நிழலாகவே இருக்கும். அம்மரத்தின் அடியில் சினமற்ற யமனைப் போல் வீற்றிருக்கும் சிவனை தேவர்கள் பார்த்தார்கள். தவக் கோலம் பூண்ட சிவனுக்குக் குபேரனும் ஸனந்தனரும் மற்றும் முக்தி அடைந்த பெரியோரும் பணிவிடை செய்து கொண்டிருந்தனர். தேவர்கள் சென்ற சமயம் நாரதருக்குச் சிவன் பிரம்ம தத்துவத்தை விளக்கிக் கொண்டிருந்தார். சிவனை தேவர்கள் வணங்கினர். சிவன் பிரமனை எதிர்கொண்டு அழைத்தார். பிரமன் சிவனைத் தோத்திரம் செய்தார். மாயையால் மதியை இழந்த தக்ஷனும் அவனுடன் வேள்வியை நடத்தினவர்களும் முன் போல் முழு மனிதராகி வேள்வியை முடிக்குமாறு அருள வேண்டும் என்று சிவனை வேண்டிக் கொண்டார்.

அதற்குச் சிவபெருமான் "மூடர்கள் செய்த செயலைக் குறித்து எனக்கு வருத்தம் இல்லை. அவர்களுக்கு நற்புத்தி வர வேண்டும் என்றுதான் தண்டித்தேன். தக்ஷனுக்கு ஆட்டின் தலை இருக்கட்டும். மற்றவர்களும் தேவதைகளுடைய உதவியினால் இழந்த உறுப்புகளைப் பெறட்டும்" என்று மொழிந்தார்.

தேவர்கள் களிப்புற்றுச் சிவனையும் அழைத்துக் கொண்டு யாகசாலை சென்றார்கள். கழுத்தில் சேர்க்கப்பட்ட ஆட்டின் தலையுடன் தக்ஷன் எழுந்து, சிவன் அருளால் பாபங்கள் நீங்கியவனாய்ச் சிவனைத் துதித்தான். வேள்வியும் மறுமுறை தொடங்கித் தடையின்றி முடிந்தது. ஹரியானவர் நேராக வந்தருள, அனைவரும் அவரைப் பூஜை செய்து புகழ்ந்தனர். உடலைத் துறந்த ஸதி இமவானுக்குப் பெண்ணாகப் பிறந்து மறுபடியும் சிவனை அடைந்தாள்.

தக்ஷனுடைய யாகத்தில் சிவன் செய்த செயல்களைப் பக்தியுடன் கேட்பவரும் சொல்பவரும் பாபங்களை இழந்து நற்கதியை அடைவார்கள். **(தொடரும்)**

* ஒரு யோசனை-ஒன்பது முதல் பத்து மைல்

## தீப்புண்?



## வெட்டுக்காயம்?



## விஷக்கடி?






# பர்னால்

உபயோகியுங்கள்

வெட்டுக்காயம்
கட்டபுண்
பெரியபுண்கள்
பூச்சிக்கடிகள்
உஷ்ணத்தினால்
ஏற்படும் புண்கள்
சரும நோய்கள்
முதலியவைகளுக்குச் சிறந்தது

தயாராயிருங்கள் !
எந்த சமயத்திலும், எந்த
இடத்திலும் விபத்துகள்
ஏற்படலாம்! ஆகையால்
பர்னாலை கையோடு
வைத்திருங்கள் ! குறைந்த
விலையில் கையடக்கமான
மஞ்சள் ட்யூப்களில்
கிடைக்கிறது. இன்றே
ஒரு ட்யூப் வாங்குங்கள் !

பர்னால் உன்னதமான
ஆண்டிஸெப்டிக் ஆயிண்ட்மெண்ட்

ஒவ்வொரு பர்னால் டியூபுடனும் ஒரு 1958-ம் வருட கலர் காலண்டர் இனமாக அளிக்கப்படும்

NB.1




அத்தியாயம் 34

## மதிவதனி விரித்த வலை

இருட்டி வெகு நேரமாகிவிட்டது. தென்னை மரங்களின் தோகைகள் காற்றில் [illegible]ம் ஓசையும், கடல் அலைகளின் இரைச்சலும், தவிர செம்பவழத் தீவு அமைதி பெற்றிருந்தது. பாலில் நனைத்து எறிந்த நீலத்துணி நெடுந் தூரத்துக்கு விரித்துக் கிடப்பது போல் கடல் நிலா ஒளியில் மிக அழகாகத் தெரிந்தது. தென்னங்கீற்றுக்களினிடையே நுழைந்து நிலவுக் கதிர்கள் நிழலினிடையே தரைமகளின் செம்மேனியில் தேமல் விழுந்தது போல் எவ்வளவு அழகாகப் பதிகின்றன?

கூடாரத்தின் வாயிலில் இராசசிம்மனும், சக்கசேனாபதியும் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார்கள். இராசசிம்மனின் மடியில் மாலையில் வாங்கிய அந்த வலம்புரிச் சங்கு இருந்தது.

"சக்கசேனாபதி! இந்தச் சங்குதான் எவ்வளவு அழகாக இருக்கிறது. பார்த்தீர்களா?" அதன் வழவழப்பான மேல் பாகத்தை விரல்களால் தடவியபடியே கூறினான் இராசசிம்மன்.

சக்கசேனாபதி அவன் முகத்தை உற்றுப் பார்த்து விஷமத்தனமாகக் கண்களைச் சிமிட்டினார்.

"சங்கு மட்டும்தானா அழகாக இருக்கிறது? அதைக் கொடுத்த..." சொல்ல வந்ததை முழுதும் சொல்லி முடிக்காமல் மறுபடியும் சிரித்தார் அவர்.

"சரிதான்! நீங்களே என்னைக் கேலி செய்ய ஆரம்பித்து விட்டீர்களா?"

"கேலியில்லை, இளவரசே! அந்தப் பெண் உண்மையிலேயே..."

"போதும், வருணனை! உங்களுக்குத் தலை, மீசை, எல்லாமே நரைத்திருப்பது மறந்து போய்விட்டது போலிருக்கிறது.

அவர் தன்னை வம்புக்கு இழுப்பதைத் தடுப்பதற்காக அவரையே வம்புக்கு இழுத்தான் இராசசிம்மன்.

"தலை, மீசை நரைத்து விட்டால் பெண்களைப் பற்றிப் பேசக்கூடாதென்று எந்த அறநூலில் சொல்லியிருக்கிறது? அந்தப் பெண் என் கைகளையா ஓடி வந்து பிடித்துக் கொண்டாள்? இளவரசருடைய வாலிபக் கைகளைத் தானே அவள் வலுவில்......?"

"எவனோ அன்னக்காவடிப் பயல் ஆயிரக்கணக்கில் விலை பெறக் கூடிய சங்கைத் தூக்குகிறானே என்று பயந்து போய்க் கையைப் பிடித்திருக்கிறாள்!"

நா. பார்த்தசாரதி



"நியாயந்தானே? அவளுக்குத் தெரியுமா, நீங்கள் தென்பாண்டி நாட்டு இளவரசர் என்று?"

"தெரிந்திருந்தால்...?"

"கையைப் பிடித்திருக்க மாட்டாள். அப்படியே காலடியில் விழுந்து வணங்கியிருப்பாள்!"

"அப்படியானால் தெரியாததே நல்லதாகப் போயிற்று." இராசசிம்மன் சிரித்தான். சக்கசேனாபதி அவனுக்குப் பயந்து பெரிதாக வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டார்.

"இளவரசே! நீங்கள் என்ன நினைத்துக் கொண்டாலும் சரி, நான் விளையாட்டுக்காகச் சொல்லவில்லை. இந்தத் தீவில் எல்லாப் பெண்களுமே அழகாகத்தான் இருக்கிறார்கள்...."

"சக்கசேனாபதி அவர்களே! மறுபடியும் நினைவூட்டுகிறேன்: உங்களுக்குத் தலை நரைத்துவிட்டது. நீங்கள் இந்தப் பேச்சு பேசாதீர்கள்!"

"ஏன் சொல்ல மாட்டீர்கள் இளவரசே? ஐம்பதுக்கு மேல் வயது ஆகிவிட்டது என்ற தெம்பில்தானே என்னை இப்படிக் கேலி செய்கிறீர்கள்? நானும் உங்களைப் போல் வயதுப் பிள்ளையாக இருந்தால்....?"

"இருந்தால் என்ன? அப்படி ஆவதற்கு வேண்டுமானால் காயகல்ப மருந்து சாப்பிட்டுப் பாருங்களேன்." இளவரசனின் கேலிச் சிரிப்பு பலமாக ஒலித்தது.

"எனக்கு உங்களோடு 'வாலிபப் பேச்சு' பேசிக் கொண்டிருக்க நேரமில்லை. காலையில் அருணோதயத்துக்கு முன்பே கப்பல் புறப்படவேண்டும். ஆக வேண்டியவைகளைக் கவனிக்கிறேன்" என்று எழுந்திருந்தார் சக்கசேனாபதி.

பகலில் அலுப்புத் தீர நன்கு உறங்கியிருந்ததனால் இராசசிம்மனுக்கு உறக்கம் வரவில்லை. நிலா ஒளியில் தீவின் கரையோரமாகச் சிறிது தூரம் நடந்து சென்று திரும்பலாமென்று எண்ணினான். சேனாபதியும், மற்ற ஆட்களும் கூடாரத்திலிருந்து சாமான்களைக் கப்பலில் ஏற்றுவதும், கப்பல் இயந்திரங்களைச் சரி பார்ப்பதுமாக வேலையில் மும்முரமாக முனைந்திருந்தார்கள்.

இராசசிம்மன் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் கையில் அந்தச் சங்கையும் எடுத்துக் கொண்டு கரையோரமாக நடந்தான். சில இடங்களில் கடலுக்கு மிக அருகிலே அலை நீர்த்துளிகள் மேலே தெறிக்கும்படி பாதை கடலைத் தொட்டாற்போல் இருந்தது. இன்னும் சில இடங்களில் தாழை மரங்களும், புன்னை மரங்களும் அடர்த்தியாக வளர்ந்து பக்கத்தில் கடல் இருப்பதே தெரியாமல் மறைத்துக் கொண்டிருந்தன. சுழித்துச் சுழித்து வீசும் காற்றுக்கும் அலை இரைச்சலுக்கும் நடுவில் தனியனாக நடந்து சென்று கொண்டிருந்த இராசசிம்மனுக்கு மனத்தில் எத்தனையோ விதமான சிந்தனைகள் உண்டாயின. அழகான இடங்களைப் பார்த்தால் உள்ளத்தில் அழகான-ஆழமான சிந்தனைகள் உண்டாகின்றன. சிந்தித்துக் கொண்டே நீண்ட தூரம் நடந்து விட்டான் இராசசிம்மன்.

அந்த இடத்தில் கரையின் தரைப் பரப்பு வளைந்து தெற்கு முகமாகத் திரும்பியது. திருப்பத்தில் ஒரு வேடிக்கையான காட்சியை இராசசிம்மன் கண்டான். கடலுக்கு மிக அருகில் சற்றே தாழ்வான பள்ளம் ஒன்றில் அழுத்தமாகவும், நெருக்கமாகவும் இரும்புக் கம்பிகளால் பின்னப்பட்டிருந்த வலை ஒன்று விரிக்கப் பட்டிருந்தது. வலையின் நான்கு மூலைகளிலும் கட்டப்பட்டிருந்த தேர்வடம் போன்ற கயிறுகள் மேலே உள்ள புன்னை மரத்து உச்சியில் தேர்ச் சக்கரம் போன்ற ஒரு மர இராட்டினத்தில் இணைக்கப்பட்டிருந்தன. இராட்டினத்தைச் சுற்றினால் வலை சுருட்டிக் கொண்டு மேலே எழும்பி விடும். இராட்டினத்துக்குப் பக்கத்தில் மரத்தின் அடர்த்தியில் யாரோ உட்கார்ந்து கொண்டிருப்பது போலிருந்தது. இராசசிம்மன் அந்தக் காட்சியை வேடிக்கை பார்த்து விட்டுத் தெற்குப் புறமாகத் திரும்பி நடந்தான்.

திருப்பத்தில் கரையோரமாக இன்னொரு பாய்மரக் கப்பல் நின்று கொண்டிருப்பது அவன் பார்வையில் பட்டது. அதைப் பார்த்ததும் அவன் வேறுவிதமாகச் சந்தேகப்பட்டான். வழி தெரியாமல் சுற்றி வளைத்துத் தீவை வலம் வந்து பழையபடி தங்கள் கப்பல் நின்று கொண்டிருந்த இடத்துக்கே வந்து விட்டோமோ என்று மலைத்தான் அவன்.

ஆனால் அந்தக் கப்பலின் பாய்மரத்து உச்சியில் பறந்து கொண்டிருந்த கொடி அவன் சந்தேகத்தைப் போக்கியது. புலியும், பனைமரமும் ஆகிய இலச்சினைகள் பொறித்த கொடி அது.

இராசசிம்மன் சிறிது அருகில் நெருங்கி அந்தக் கப்பலைப் பார்த்தான். "அந்தக் கப்பல் அங்கே எப்போது வந்தது? ஏன் அப்படி ஒதுக்குப்புறமான இடத்தில் நிற்கிறது?" என்று சிந்தித்தான் அவன்.

"யார் ஐயா அது கரையில் நிற்கிறது?" என்று அதட்டுகிறாற் போன்ற குரலில்

கேட்டுக் கொண்டே கப்பலின் மேல் தளத்திலிருந்து யாரோ இரண்டு மூன்று பேர்கள் இறங்கி வந்தார்கள்.

"வழிப்போக்கன், ஐயா! சும்மா கப்பலை வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றேன்" என்று அவர்களுக்குப் பதில் சொல்லிக்கொண்டே இராச சிம்மன் அங்கிருந்து மெதுவாக நகர முயன்றான். அந்தக் கப்பலில் இருப்பது யாராக இருந்தாலும் அப்போது அவர்கள் பார்வையில் தான் படக்கூடாது என்பது அவன் நினைவு. ஆனால் அவன் நினைத்தபடி நடக்கவில்லை. கப்பலிலிருந்து இறங்கி வந்தவர்கள் அவன் நாலெட்டு தூரம் நடப்பதற்குள் அவனை நெருங்கி விட்டார்கள்.

இராசசிம்மன் நடையை வேகமாக்கிக் கொண்டு முந்திவிட முயன்றான். அவர்கள் அவனை முந்த விடவில்லை. "இந்தா, ஐயா, கொஞ்சம் நில்!"

அவன் நின்றான்! கப்பலிலிருந்து இறங்கி வந்த மூன்று பேர்களில் சற்றுப் பருமனான தோற்றத்தையுடைய ஒருவன் அருகில் வந்து இராசசிம்மனுடைய முகத்தை உற்றுப் பார்த்தான், தன்னோடு வந்த மற்ற இரண்டு பேர்களையும் பார்த்து ஏதோ ஒரு குறிப்புப் படச் சிரித்தான். பின்பு இராசசிம்மனைப் பார்த்துக் கேட்டான்: "ஐயா! நீங்கள் யார்?"

இந்தக் கேள்வியைச் செவியுற்றதும் இராசசிம்மனுடைய உள்ளுணர்வு விழித்துக் கொண்டது. "நான் யாரென்றால்... நான் நான்தான்!"

"அது தெரிகிறது! உங்கள் பெயர்?"

"எனக்கு ஒரு பெயர் இருப்பது உண்மைதான்! ஆனால் அது உங்களுக்குத் தெரிய வேண்டிய அவசியம் என்ன?" இராசசிம்மனுடைய குரலில் கடுமை இருந்ததை அவர்கள் உணர்ந்தனர்.

கப்பலிலிருந்து இறங்கி வந்த மூன்று பேர்களும் அவனுடைய வழியை மறித்துக்கொண்டு நிற்பவர்களைப் போல் குறுக்கே நின்றார்கள். அவர்களில் ஒருவன் அவனுடைய கையிலிருந்த அந்த வலம்புரிச்சங்கைப் பார்த்து விட்டு, "இந்தச் சங்கு உங்களுக்கு எங்கே கிடைத்தது?". என்று கேட்டான்.

அவர்கள் ஏதோ காரணத்துக்காகத் தன்னை வம்பு பேசி வழிமறிக்கிறார்கள் என்பது இராசசிம்மனுக்குத் தெளிவாக விளங்கி விட்டது. யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல், தற்காப்பாக உடைவாள் கூட இன்றிப் பழக்கமற்ற புதிய தீவில் தனியே இரவில் உலாவப் புறப்பட்ட தவறு அப்போதுதான் அவன் மனத்தில் உறைத்தது.

"நான் போக வேண்டும். என் வழியை விடுங்கள்" என்று அவர்களை விலக்கிக் கொண்டு முன்னோக்கிப் புறப்பட்டான் அவன். பின்னால் எக்காளமிட்டுச் சிரிக்கும் வெடிச் சிரிப்பொலி எழுந்தது.

"தென்பாண்டி நாட்டு இளவரசரை இவ்வளவு சுலபமாகப் போக விட்டுவிடுகிற நோக்கம் இல்லை."

எக்காளச் சிரிப்பும், இந்த எச்சரிக்கைக் குரலும் இராசசிம்மன் காதுகளில் நாராசமாய் ஒலித்தன. அவன் ஓட்டமும் நடையுமாக அவர்களிடமிருந்து தப்பும் நோக்கத்துடன் விரைந்தான். திருப்பத்தில் திரும்பி இரும்பு வலை விரித்திருந்த அந்தப் பள்ளத்தை அவன் நெருங்கவும் அந்த மூன்று ஆட்களும் அவனைத் துரத்திக் கொண்டு வேகமாக ஓடி வரவும் சரியாக இருந்தது.

பயத்தில் அதிர்ச்சியடைந்த இராசசிம்மனும் விழுந்தடித்துக் கொண்டு ஓடினான். அடுத்தகணம் அவனுடைய உடலை ஏதோ ஒன்று வேகமாகச் சுருட்டிக் 'கிறு கிறு' வென்று மேலே தூக்கியது. மர இராட்டினம் வேகமாகச் சுழலும் ஓசை பெரிதாக ஒலித்தது.

ஓடி வந்த அவசரத்தில் பள்ளத்தில் விரித்துக் கிடந்த இரும்புக் கம்பி வலைக்குள் அகப்பட்டுக் கொண்டோமென்று விளங்கிக் கொள்ள அவனுக்குச் சிறிது நேரம் பிடித்தது. அதை உணர்ந்து கொண்ட போது அவனுடைய உடல் மிகவும் பத்திரமாக ஒன்றரைப் பனை உயரத்துக்கு மேலே புன்னைமரக் கிளை வரை வெகு வேகமாக இழுத்துக் கொண்டு போகப்பட்டு விட்டது.

கீழே துரத்திக் கொண்டு வந்தவர்கள் அவனைக் குறி வைத்து எறிந்த கூர்மையான வேல் பக்கத்து மரத்தில் பாய்ந்து ஆழப் பதிந்து கொண்டு அப்படியே நின்றது! துரத்திக் கொண்டு வந்தவர்களுக்கு என்ன நடந்தது என்று அனுமானிக்கக்கூட நேரமில்லை. இரும்பு வலை கீழே கிடந்ததும், மின்னல் மின்னுகிற நேரத்துக்குள் இராசசிம்மனை மேலே மர உச்சிக்குத் தூக்கிக் கொண்டு சென்றதும் அவர்களுக்குத் தெரியாது. இராசசிம்மன் எப்படியோ மாயமாகத் தங்களிடமிருந்து தப்பி விட்டானே என்று வியந்த அவர்கள் அந்தப் பக்கத்திலிருந்த தாழம் புதர்களைக் குடைந்து கொண்டிருந்தார்கள்.

அவர்கள் அவனைத் தாழம்புதரில் தேடிக் கொண்டிருந்த அதே சமயத்தில் புன்னை மரத்தின் உச்சிக் கிளையில் வளை குலுங்கும் அழகிய பெண்கரங்கள் அவனை வலையிலிருந்து விடுவித்துக் கொண்டிருந்தன.

"ஐயா! கவலைப்படாதீர்கள். எல்லாம் நான் இங்கிருந்து பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். அதிர்ஷ்டவசமாக நீங்கள் வலையின் குறுக்கே விழுந்து ஓடினீர்கள். இல்லையானால் உங்களை நான் காப்பாற்றியிருக்க முடியாது!" என்றாள் அந்தப் பெண்.

மரக்கிளையின் மங்கலான ஒளியில் அவள் முகத்தைப் பார்த்த இராசசிம்மன், "நீயா?" என்று வியப்பு மேலிட்டுக் கூவினான். அவள் தன் சண்பக மொட்டுப் போன்ற விரல்களால் அவன் வாயைப் பொத்தினாள். 'இரையாதீர்கள். கீழே அந்த வேட்டை நாய்கள் உங்களைத் தேடிக் கொண்டிருக்கின்றன' என்று மெல்ல அவன் காதருகே கூறினாள்.

மரக்கிளையில் உட்கார்ந்து அவனை வலை மூலம் தூக்கிக் காப்பாற்றிய அந்தப் பெண் வேறு யாருமில்லை. அன்று மாலை அவனுக்குச் சங்கு விற்ற பெண்தான் அவள். இரவில் கரைக்கு வரும் முதலைகளைப் பிடிப்பதற்காக அப்படி வலை விரிப்பது வழக்கமென்றும் அன்று அந்த வலை அவனைக் காப்பாற்ற உதவியதற்காகத் தான் பெருமைப்படுவதாகவும் அந்தப் பெண் அவனிடம் கூறினாள்.

"பெண்ணே! உன் பெயரை நான் அறிந்து கொள்ளலாமோ?" என்று அவளுடைய வளைக்கரங்களைத் தன் இரு கைகளாலும் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டு நன்றி சுரக்க, தழுதழுக்கும் குரலில் கேட்டான் இராசசிம்மன்.

செந்தாமரைப்பூக்கள்போன்ற அந்தப் பெண்ணின் புறங்கைகளைத் தென்பாண்டி நாட்டு இளவரசன் சிந்திய ஆனந்தக் கண்ணீர்த் துளிகள் நனைத்தன.

"என் பெயர் 'மதிவதனி'" என்று தலை குனிந்து நாணத்தோடு சொன்னாள் அந்தப் பெண்.

"மதிவதனி! மாலையில் ஈராயிரம் பொற்கழஞ்சுகளை வாங்கிக் கொண்டு இந்த ஒரு வலம்புரிச் சங்கை எனக்குக் கொடுத்தாய்! இப்போதோ எத்தனை ஆயிரம் பொற்கழஞ்சுகள் கொடுத்தாலும் ஈடாகாத என் உயிரையே எனக்கு மீட்டுக் கொடுத்திருக்கிறாய்!"

சிறந்தோர்
அணியும்

பாத அணிகள்



• சௌகரியத்தன்மை
• இயற்கையான மிதி அடி
• அழகு
• நீடித்த உழைப்பு

ஆகிய காரணங்களுக்காக





அரசினர் பாத அணி
நிலையம்,
பெரம்பூர், மதராஸ்

கிடைக்குமிடம்:
தொழில் இலாகா விற்பனை நிலையம்
166 - A மவுண்ட் ரோடு
சென்னை - 2

Vista's MF-4

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

# கால்கேட் டூத் பிரஷ்

---




# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!

"ஐயா! பொற்கழஞ்சுகளுக்காகவே எல்லாக் காரியங்களையும் மனிதர்கள் செய்து விடுவதில்லை. இதயத்துக்காக— மனிதத் தன்மைக்காகச் செய்து தீர வேண்டிய சில செயல்களும் உலகில் இருக்கின்றன!'' மதிவதனியின் குரலில் உருக்கம் நிறைந்திருந்தது.

அவர்கள் புன்னை மரத்தின் அடர்ந்த கிளையிலேயே அமர்ந்து நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். கீழே தாழம்புதர்களில் தேடிக் கொண்டிருந்தவர்களும் ஏமாற்றத்தோடு திரும்பிப் போய் விட்டார்கள்.

"ஐயா! இனி நாம் கீழே இறங்கலாம்'' என்றாள் மதிவதனி.

மதிவதனி அவனுடைய பயம் நிறைந்த பார்வையைக் கண்டு சிரித்தாள்.

அதே சமயம் மரத்தடியில், "மதிவதனீ!......மதிவதனீ! எங்கே யிருக்கிறாய்? மரக்கிளையிலேயே உட்கார்ந்து உறங்கி விட்டாயா?'' என்று கீழே ஒரு ஆண்குரல் இரைந்து கூப்பிட்டது!

## அத்தியாயம் 35
## மகாமண்டலேசுவரர்

இடையாற்றுமங்கலத்தில் கொள்ளை போன செய்தியை அம்பலவன் வேளான் வந்து கூறிய போது எல்லோரும் அதைக் கேட்டு அதிர்ச்சியடைந்தார்கள். ஆனால் இடையாற்று மங்கலம் நம்பியோ அதிர்ச்சியைவிட அதிகமாக விழிப்பும் முன்னெச்சரிக்கையும் பெற்றார். தாம் பொறுப்பும், திறமையும், சூழ்ச்சியும் ஒருங்கே அமைந்த ஒரு மகா மண்டலேசுவரர்தான் என்பதை அந்த விநாடியில் அவர் செய்த காரியத்தால் நிரூபித்து விட்டார்.

அம்பலவன் வேளான் செய்தியைத் தெரிவித்த போது அவர்களெல்லோரும் எந்த இடத்தில் இருந்தார்களோ அந்த இடத்தின் வெளி வாயிற் கதவுகளை உடனே அடைத்துஉட்புறமாகப் பூட்டிக் கொண்டு வருமாறு நாராயணன் சேந்தனை அனுப்பினார் இடையாற்றுமங்கலம் நம்பி. அவருடைய செயல் எல்லாருக்கும் வியப்பை அளித்தது. சிலருக்கு அர்த்தமற்றதாகவும் பட்டது. சிலருக்குப் பயமாகவும் இருந்தது. நம்பியின் கட்டளைப்படி உடனே கதவைப் பூட்டிக் கொண்டு வந்து விட்டான் சேந்தன்.

மகாமண்டலேசுவரர் என்ன சொல்லப் போகிறாரோ என்று எல்லாரும் அவருடைய முகத்தையே பார்த்தார்கள். அந்த முகத்திலும், கண்களிலும் ஆழம் காண முடியாத அமைதி தெரிந்தது.

மகாராணிவானவன்மாதேவி, தளபதி வல்லாளதேவன், நாராயணன் சேந்தன், கரவந்தபுரத்திலிருந்து வந்த தூதன், இடையாற்று மங்கலத்தில் கொள்ளை போன செய்தியைக் கூற வந்த அம்பலவன் வேளான் முதலிய முக்கியமான ஆட்களே அப்போது அந்த இடத்தில் இருந்தனர். அவர்கள் ஒவ்வொருவர் முகத்தையும் நின்று நிதானித்துத் தனித் தனியே ஏறிட்டுப் பார்த்தார் இடையாற்றுமங்கலம் நம்பி. மேலோட்டமாகப் பார்க்கின்ற சாதாரணப் பார்வை அன்று அது! முகத்தை, கண்களை, அவை இரண்டின் மூலமாக உள்ளத்தைப் பார்க்கின்ற அழுத்தமான பார்வை அது! மழை பெய்வதற்கு முன் பூமியில் ஏற்படுகின்ற ஒருவகைப் புழுக்கம் போல் பெரிய பேச்சுக்களை எதிர்பார்த்து நிற்கும் சிறிய அமைதி அங்கே நிலவியது. ஆனால் அந்த அமைதியின் கால எல்லை சில விநாடிகள்தான். அதைக் கலைத்துக் கொண்டு மகாமண்டலேசுவரரின் கனீரென்ற குரல் எழுந்தது: "மகாராணியின் முன்னிலையில் இவர்களுக்கெல்லாம்- இவர்களுக்கு மட்டுமென்ன? எனக்கும், தங்களுக்கும் கூட எச்சரித்து அறிவுறுத்த வேண்டிய முக்கியமான செய்தி ஒன்று உண்டு.''

இதைச் சொல்லி விட்டு நம்பி சிறிது நிறுத்திக் கொண்டு எல்லோருடைய முகங்களையும் பார்த்தார். பின் மீண்டும் தொடர்ந்தார்: "தேசத்தைக் காப்பாற்றுவதற்கு முன்னால் இரகசியங்களைக் காப்பாற்றுவதற்கு நாம் தெரிந்து கொள்ள வேண்டும். நமக்குள் தோல்விகள், பலவீனங்கள் இருக்கலாம். ஆனால் அவற்றை நம்முடைய எதிரிகள் அறிந்து கொள்ளும்படியாக விட்டுவிடக் கூடாது. இப்போது நான் வேண்டிக் கொள்வதெல்லாம் இதுதான். இடையாற்றுமங்கலத்தில் அரசுரிமைப் பொருள்கள், களவுபோன செய்தி நம்மைத் தவிர மற்றவர் செவிகளில் பரவ விடாமல் பாதுகாக்கப்பட வேண்டும். கரவந்தபுரத்திலிருந்து வந்த செய்தியும் அப்படியே. களவைக் கண்டு பிடிக்கவும், பகைவர் படையெடுப்பைச் சமாளிக்கவும், வேண்டிய ஏற்பாடுகளை நாம் செய்ய வேண்டும். ஆனால் நாம் செய்யும் எல்லா ஏற்பாடுகளும் நமக்குள் இருக்க வேண்டும். இப்போது நாம் இருக்கும் இந்தக் கட்டடத்தின் வாயிற்

கதவுகளை நான் அடைக்கச் சொல்லி விட்டேன். பிறரிடம் செய்தியைச் சொல்லிவிட மனத்தில் ஏற்படும் ஆவலையோ, வாய்த்துடிப்பையோ, நான் அடைக்க முடியாது. நீங்கள் எல்லோரும் பொறுப்புள்ளவர்களாக நடந்து கொள்ளுங்கள்''

"மகாமண்டலேசுவரருடைய இந்த வேண்டுகோள் நம்முடைய நன்மைக்காகவே என்பதை நீங்கள் எல்லோரும் இதற்குள் விளங்கிக் கொண்டிருப்பீர்கள். வயதும், அனுபவமும் உள்ள அவர் கட்டளைகளை என் கட்டளைகளாகவே நினைத்துப் போற்ற வேண்டியது உங்கள் கடமை'' என்று அதையடுத்து மகாராணி வானவன்மாதேவியார் கூறினார். எல்லோரும் சிலைபோல் அடக்கமாக நின்று கொண்டிருந்தார்கள். மகாமண்டலேசுவரரை எதிர்த்து மடக்கி என்னென்னவோ குறுக்குக் கேள்விகளெல்லாம் கேட்க வேண்டுமென்று துடிதுடித்துக் கொண்டிருந்த தளபதி வல்லாளதேவனுக்குக்கூட அப்போது பேச நா எழவில்லை.

எப்போதும், எவர் முன்னிலையிலும், சிரிப்பும் குறும்புமாகத் தன் பேச்சுக்களால் பாதி-தன் தோற்றத்தால் பாதி-என்று நகைச்சுவையலைகளைக் கிளப்பிக் கொண்டிருக்கும் நாராயணன் சேந்தன் இருக்குமிடம் தெரியாமல் நின்றுகொண்டிருந்தான். எதிரே இருப்பவர்களின் வாயையும், புலன் உணர்வுகளையும் கட்டி விடுகிற ஆற்றல் உலகத்தில் மிகச் சிலருடைய கண் பார்வைக்கே உண்டு. அப்படிப்பட்ட கண்களைப் பெற்றவர்கள் வாயில் வீர மொழிகளும், கையில் வாளும் இல்லாமலே கண்களால் காரியத்தைச் சாதித்துக் கொள்வார்கள். கண்கள் என்ற ஒரே புலனுணர்வால் மட்டுமே உலகத்தை அளந்து எடைபோட்டு நிறுத்தி விடும் மகா சாமர்த்தியக்காரர்கள் அவர்கள். அந்தச்சாமர்த்தியத்தின் சாயல் தென்பாண்டி நாட்டு மகாமண்டலேசுவரரிடம் இருந்தது.

**" நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்**
**கண்ணல்ல தில்லை பிற ''**

என்றுமகாமண்டலேசுவரரைப் போன்றவர்களை நினைத்துத்தான் திருவள்ளுவப் பெருந்தகையார் அழகாகப் பாடி வைத்தார் போலும்.

மழைக் காலத்து மங்கிய நிலவு போல் மகாராணி வானவன்மாதேவியின் முகத்தில் கவலைகள் தேங்கி நின்றன. அந்த முகத்தில் ஏற்கனவே நிரந்தரமாகத் தேங்கி விட்ட கவலை ஒன்று உண்டு. அது கைம்மைக் கவலை. கணவனை இழந்த கவலை. கண்டு விரலால் கீறிய கறுப்புக் கோட்டை மேலும் கட்டை விரலால் கீறிப் பெரிதாக்கினாற் போல் அந்தப் பழைய கவலை புதிய கவலைகளால் விரிவடைந்திருந்தது. ஏதோ ஒரு சோகக் கனவில் ஆழ்ந்திருப்பது போல் மோட்டு வளையை வெறித்துப் பார்த்துக் கொண்டு வீற்றிருந்த மகாராணியைத் தம் பேச்சுக் குரலால் கவனம் திரும்பும்படி செய்தார் இடையாற்றுமங்கலம் நம்பி.

"மகாராணி! இது பலவகையிலும் சோதனைகள் நம்மைச் சூழ்கின்ற காலம். இந்த நாட்டின் நன்மைக்கும், பாதுகாப்புக்கும், ஏற்றஎதையும் செய்கின்ற அதிகாரங்களை முன்பே நீங்கள் எனக்குக் கொடுத்திருக்கிறீர்கள். இப்போதுள்ள சூழ்நிலையில் அவற்றைப் பூரணமாகப் பயன்படுத்த வேண்டிய சமயம் என்னை நோக்கி வந்திருக்கிறது.''

" மகாமண்டலேசுவரருக்கு எந்த உரிமையையும் எப்போதும் நான் மறுத்ததில்லையே?'' வானவன்மாதேவியிடமிருந்து சுருக்கமாகவும் விநயமாகவும் மறுமொழி பிறந்தது.

" தங்கள் அன்புள்ளம் மறுப்பறியாததென்று நான் அறிவேன். இருந்தாலும் நிலைமையைக் கூறிவிட வேண்டியது என் கடமை.'' இந்தச் சொற்களைச் சொல்லும்போது, புன்னகை-அல்ல: புன்னகை செய்வது போன்ற சாயல் மகாமண்டலேசுவரரின் முகத்தில் நிலவி நின்றது.

மகாராணி மறுபடியும்அவர் முகத்தை நிமிர்ந்து பார்த்தார். தயக்கத்தோடு கேட்டார்: "மகாமண்டலேசுவரரே! இராசசிம்மனை இடையாற்றுமங்கலத்திலிருந்து உடனே அழைத்துவர ஏற்பாடு செய்வதாகக் கூறினீர்களே...?''

வானவன்மா தேவியின் இந்தக் கேள்வி அவரைச் சிறிது அதிர்ச்சிக்குள்ளாக்கியிருக்க வேண்டும். அவர் தயங்கினார். மிடுக்கு நிறைந்த அவருடைய நிமிர்ந்த பார்வையில் சற்றே சோர்வு நிழலாடி மறைந்தது.

" மகாராணி!...நான் அதைப் பற்றித் தங்களிடம் தனிமையில் சிறிது நேரம் பேச வேண்டும். புதிதாக வந்த செய்திகள் சிறிது குழப்பத்தை உண்டாக்கி விட்டன!...''

"இந்தச் செய்திகளுக்கும் நீங்கள் இராசசிம்மனை அழைத்து வருவதற்கும் என்ன சம்பந்தமோ?''

" இப்போது இந்த இடத்தில் இந்தச் சூழலில் தங்களிடம் அதைப் பேச இயலாதவனாக இருக்கிறேன். தயவுசெய்து என்னைப் பொறுத்தருள வேண்டும். நாம் தனிமையில் மட்டும்தான் பேச முடிந்த செய்தி அது!''

மகாராணி பதில் பேசவில்லை.

"சேந்தா! கதவு மூடியிருக்க வேண்டிய அவசியம்இனிமேல் இல்லை. கதவைத் திறந்து விடு."

மகாமண்டலேசுவரரின் ஆணைப்படி மூடிப் பூட்டிய கதவுகளைச் சேந்தன் அவசர அவசரமாகத் திறந்துவிட்டான்.

"மகாராணீ! இதோ நம்மைச் சுற்றி நிற்கும் இவர்கள் ஒவ்வொருவருக்கும் பொறுப்பைப் பேசி ஒப்படைத்து அனுப்பி விட்டு நான் மறுபடியும் இங்கே வருகிறேன். குமார பாண்டியரைப் பற்றி அப்போது நாம் பேசலாம்."

வானவன்மாதேவி மகாமண்டலேசுவரருடைய பேச்சைக் கேட்டுத் தலையசைத்தார். உணர்ச்சியும், விருப்பமும், நம்பிக்கையின் மலர்ச்சியும் இல்லாத வெற்றுத் தலையசைப்பாக அது இருந்தது.

அங்கிருந்தவர்களில் மகாராணி யாரைத் தவிர மற்றவர்கள் பின் தொடர அரண்மனையில் தாம் தங்கியிருந்த விருந்தினர் மாளிகைக்குப் புறப்பட்டார் மகாமண்டலேசுவரர்.

அந்தப்புரத்திலும், கன்னி மாடத்திலும் இருந்த அரண்மனைப் பெண்கள் கூட்டமாகப் பலகணித் துவாரங்களின் வழியாகவும், மேல்மாடங்களில் நின்று கொண்டும் இந்தக் காட்சியை வேடிக்கை பார்த்தனர். விடிந்ததும், விடியாததுமாக மகாமண்டலேசுவரர், தளபதி முதலிய பெரிய பெரிய ஆட்களெல்லாம் அந்தப்புரத்துக்குத் தேடி வந்து அவசரமாக மகாராணியைச் சந்தித்து விட்டுத் திரும்பவேண்டுமென்றால் விஷயம் ஏதோ பெரியதாகத்தான் இருக்க வேண்டும் என்று அவர்களுக்குத் தோன்றியது. தளபதியின் தங்கை பகவதியும், அதங்கோட்டாசிரியரின் மகள் விலாசினியும் கூட அந்தக் காட்சியைப் பரபரப்புடன் பார்த்தார்கள்.

இவர்களுக்கு ஏற்பட்ட பரபரப்பைப் போல் அல்லாமல், முன்பே சில இரகசியங்கள் தெரிந்திருந்த காரணத்தால் வண்ண மகள் புவனமோகினிக்கு அதிகமான பரபரப்பும், பீதியும் ஏற்பட்டிருந்தன. தமையன் அரண்மனையிலிருந்து எங்கேயாவது வெளியேறிச் சென்று விடுவதற்கு முன் அவனை ஒரு முறை சந்திக்கவேண்டும்போல் இருந்தது தளபதியின் தங்கை பகவதிக்கு.

இப்படியாக, அதிகாலையில் அந்தப்புரத்தில் மகாராணியின் தனி மாளிகையில் நடந்த கூட்டத்தில், 'என்ன பேச்சுக்கள் நடந்தன?' என்ற செய்தி எங்கும் பரவாவிடினும் ஒரு பரபரப்பு, மர்மமான பீதி அரண்மனையில் பரவி விட்டிருந்தன. முக்கியமானவர்கள், முக்கியமில்லாதவர்கள், காவல் வீரர்கள், சாதாரணப்பெண்கள் எல்லாரும் அரண்மனைக்குள் இதைப் பற்றியே பேசிக் கொண்டார்கள். காதும் காதும் வைத்தாற் போல் வாய்களும், காதுகளும் இந்தச் செய்தியைப் பரப்பிவிட்டன.

எல்லோரையும் அழைத்துக்கொண்டு விருந்து மாளிகைக்குச் சென்ற இடையாற்றுமங்கலம் நம்பி இரண்டொரு நாழிகைக்குப் பின் ஒவ்வொருவரையும் ஓரோர் காரியத்துக்காக வெளியே அனுப்பினார். மகாமண்டலேசுவரருடைய ஆணை பெற்று அந்த மாளிகையிலிருந்து வெளியேறிய ஒவ்வொருவர் முகத்திலும் ஒவ்வொரு விதமான உணர்ச்சியின் சாயல் படிந்திருந்தது. சிரிப்பு, சீற்றம், கடமை, பணிவு,-



இன்னும் எத்தனை எத்தனையோ உணர்ச்சிகளைக் காண முடிந்தது. அவர்கள் அனுப்பப்பட்ட நோக்கங்களும், சென்ற திசைகளும் போலவே அவர்களுடைய நெஞ்சத்து எண்ணங்களும் ஒன்றுக்கொன்று வேறுபட்டன.

மகா மண்டலேசுவரருடைய கட்டளைப்படி எல்லாரும் அவரவர்கள் அனுப்பிய இடத்துக்கு உடனே புறப்பட்டு விட்டனர். ஆனால் தளபதி வல்லாளதேவன் மட்டும் உடனே புறப்படவில்லை. மகாமண்டலேசுவரர் தன்னை அனுப்பிய வேலை அவசரமாயினும் அவசரமாக அவன் கிளம்பவில்லை. அந்தப்புரத்திலிருந்த தன் தங்கை பகவதியையும், அரண்மனையில் மறைந்திருந்த ஆபத்துதவிகள் தலைவனையும் அந்தரங்கமாகச் சந்தித்து ஏதோ பேசியபின்பே அவன் கிளம்பினான். (தொடரும்)

5,00,000 கதிர்கள்

# பருத்தி நூல்கள்

நெ. 80 வரை நூல்கள்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்., மதுரை

**மில்கள்: மதுரை, தூத்துக்குடி, அம்பாசமுத்திரம்**

●

**கைத்தறி இயந்திரத் தறி. பின்னல் தறிகளுக்கான சகலவிதமான நூல்கள்**

●

விசேஷ ரகங்கள்:

**கயிறுகள், விழுதுகள். கித்தான்கள். நாடாக்கள் முதலியவைகளுக்கான விசேஷ நூல்கள்-தையல் நூல்-முறுக்கேற்றிய திரித்த சரடுகள முதலியன**

●

மானேஜர்கள்:

## ஏ. & எப். ஹார்வி லிமிடெட்

பாண்டியன் பில்டிங்

போன்: 420 (4 லைன்) மதுரை தந்தி: "ஹார்வி"

# ஜாக்கிரதை
# ஜாக்கிரதை
# ஜாக்கிரதை

'டெட்டால்' வாங்கும்பொழுது ஸீலிட்ட பெட்டியில் இல்லாத மற்றவைகளை வாங்காதீர்கள்.

சிறிய அளவு 'டெட்டால்' தேவைப்படுபவர்களிடம் போலிச் சரக்குகளும் மட்டரக கிருமி நாசினிகளும் விற்கப்படுகின்றன.

உண்மையான 'டெட்டால்' மூன்று அளவுகளிலே முறையே 2, 4, 16 அவுன்ஸ் பாட்டில்களில் உங்களுக்குக் கிடைக்கும். இப்பாட்டில்கள் எல்லாம் ஸீலிட்ட அட்டைப்பெட்டிகளில் இருக்கின்றன.

நீங்கள் அபாயமற்றிருக்க, ஒரிஜினல் பாக்கில் உள்ள 'டெட்டாலை' வாங்குங்கள். எப்பொழுதும் உங்கள் வீட்டில் ஒரு பாட்டில் 'டெட்டால்' வைத்திருங்கள்.

பொது மக்கள் நன்மைக்காக பிரசுரிக்கப்பட்டது

அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
(இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டது)





பத்ரி வாசல் தாழ்வாரத்தில் வந்து நிற்கும் பொழுது வழக்கம் போல் தன் மனைவி நாராயணியும் அங்கு வருவாள் என்று எதிர் பார்த்தான். அன்று ஏனோ அவளைக் காணோம். ஆவலுடன் அவன் திரும்பிப் பார்க்கையில் உள்ளேயிருந்து ஒரு பையன் கடக்கடக் காப்பியை டம்ளரிலிருந்து தபராவுக்கும் தபராவிலிருந்து டம்ளருக்கும் ஆற்றிக் கொண்டு தன்னை நோக்கி வருவதைப் பார்த்தான். அவன் அந்த வீட்டுச் சமையல்கார அம்மாளின் மகன் கண்ணன். மனைவி வருவாள் என்ற எண்ணத்திலிருந்த பத்ரிக்குக் கண்ணனைப் பார்த்ததும் சற்று ஏமாற்றமாகத்தானிருந்தது. "ஏண்டா கண்ணா! நீ எங்கே இவ்வளவு அதிகாலையில் வந்தாய்?" என்று கேட்டான்.

கண்ணன் பார்ப்பதற்குத் துரு துரு வென்று அழகாயிருப்பான். கறுகறுப்பும் சிரித்த முகமும் உடையவன். அவனைப் பார்த்தால் யாருக்குமே அவனிடம் பிரியமுண்டாகும்.

பத்ரிக்கும் அவனைப் பிடித்துத்தான் இருந்தது. ஆனால் அவனது உபசரணையும் மனைவியின் உபசரணையும் ஒன்றாகி விடுமா?

# விருந்தினர் வருகை!

நாமகிரி



கண்ணன் உற்சாகத்துடன், "நான் இங்கேயே வேலைக்கு வந்து விட்டேன், ஸார்! மாமி என்னையும் வேலையில் சேர்த்துக் கொண்டிருக்கிறார். ஊரிலிருந்து விருந்தாளிகள் வரப் போகிறார்கள் என்று மாமி என்னையும் இன்னும் சில பேர்களையும் வேலையில் சேர்த்துக் கொண்டிருக்கிறார். முக்கியமாக எனக்கு உங்களைக் கூட இருந்து கவனித்துக் கொள்ளும் வேலைதான்!" என்று மழைபொழிந்தாற் போல் பேசினான். அவனது கண்களில் மகிழ்ச்சி ஒளி வீசியது.

பத்ரியின் உள்ளம் பூரிப்படைந்தது. 'அம்மா வரப் போவதை இந்தப் 'படுசட்டி' எப்படியோ தெரிந்து கொண்டிருக்கிறான்! அம்மா எதிரில் என் கூடவே தான் இருந்தால் அவனுக்கு எப்படி இருக்குமோ என்று 'இந்தப் பயலை எனக்குப் போட்டிருக்கிறாள் போலிருக்கிறது' என்று எண்ணமிட்டான். பிறகு மெதுவாக நடந்து கொண்டே தோட்டத்துப் பக்கம் சென்றான். கூடவே கண்ணனும் போனான்.

"கண்ணா! மாமி எங்கே காணோம்?"

"மாமி காரில் தண்ணீர்த்துறை மார்க்கெட்டுக்குப் போயிருக்கிறாள்."

பத்ரி ஒரு வினாடி அயர்ந்து போனான். "கூட யார் போயிருக்கிறார்கள்?" என்று அவசரமாகக் கேட்டான்.



திருச்சி வாகீச பக்தஜன சபைச் சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தினர் தமிழ்ப்பேராசிரியர் திரு வெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களைப் பாராட்டிக் கௌரவித்தனர். இவ்விழாவில் உறையூர் 'வீணை வித்தகி' டி. பாலாம்பாள் அவர்கள் வீணைக் கச்சேரி செய்து சபையோரை மகிழ்வித்தார்.

"எங்கே அம்மா போயிருக்கிறாள்!"

"சமையல் யார் செய்கிறார்கள்?"

"சமையல் அம்மா வரும் வரையில் நான் செய்வேன்! பிறகு அம்மா செய்வாள்" என்று சொல்லிக் கொண்டே கண்ணன் ஏதோ நினைவு வந்தவன் போல் காலி தபராவுடன் புறக்கடை வாசல் வழியாகச் சமையலறைக்குள் ஓடி விட்டான்.

பத்ரி அப்பொழுது மாட்டுக் கொட்டில் பக்கம் வந்து கொண்டிருந்தான். அங்கே புதிய பசு மாடும் கன்றும் கட்டப்பட்டிருந்தன. "ஓ! அதிகப்படி பாலுக்கு ஏற்பாடா!" என்று மனத்துக்குள் எண்ணினான்.

பத்ரியின் தாயார் தன் இரண்டாம் மகளின் மூன்றாம் பிரசவத்துக்குப் பலவித சௌகரியங்களை முன்னிட்டு, தன் சிறிய குழந்தைகளுடனும் மகளுடைய குழந்தைகளுடனும் பத்ரியின் வீட்டில் வந்து நாலைந்து மாதங்கள் வரை இருக்கப் போவதாக நிச்சயம் செய்து அவனுக்குக் கடிதம் எழுதியிருந்தாள். பத்ரிக்கு அதைப் பற்றி மனைவியிடம் சொல்லத் தைரியமில்லை. அவளாகவே தெரிந்து கொண்டால் அந்த விவகாரமே வேறு, தானாகச் சொன்னால் தங்கள் அமைதிக்குப் பங்கம் வரும் என்று எண்ணினான்.

வீட்டில் நடைபெற்று வரும் மாறுதல்களைக் கவனித்தால், 'மனைவிக்கு விஷயம் தெரிந்து தான் இருக்கிறது. அவளுக்கு அதைத் தன்னிடம் சொல்லப் பிரியமில்லை' என்று நினைத்தான். புறக்கடை வாயிற்படியை அடைந்ததும் அங்கே வீட்டு வேலைக்காரி வாலியும் ஒரு 'புதுப் பெண்ணும்' இருந்தனர். பத்ரி அவளைப் பற்றி விசாரிக்கும் முன்னரே வாலி தானாகவே, "ஐயா! இந்தப் பெண்ணும் நம் வீட்டில் வேலை செய்ய வந்திருக்கு!" என்று கூறினாள்.

பத்ரி புறக்கடையைத் தாழ்வாரம் வழியாகக் கடந்து உள்ளே சென்றான். அங்கே புதிதாக ஒரு பெரிய மேஜையும் நாற்காலிகளும் ஒரு சோபாவும் போடப்பட்டிருந்தன. 'நம் அம்மாவுக்கு இவைகள் தேவை இல்லையே?' என்று நினைத்தான். அதற்குள் சமையல் உள்ளேயிருந்த கண்ணன் ஓரே தாவாகத் தாவி வந்து, "ஸார்! இவைகூடப் புதியவை. புது மாமிகளுக்கு வேண்டியிருக்குமென்று வாங்கிப் போட்டிருக்கு" என்றான்.

பத்ரி உடுப்பு அறைக்குள் நுழைந்தான். அங்கேதான் காலையில் அவன் மனைவி நாராயணி அவனுக்குப் பத்திரிகை படித்துச் சொல்லுவாள்; இன்று அவளைக்காணோம்;

"கண்ணா!"

கண்ணன் தலைதெறிக்க ஓடி வந்தான்.

"பத்திரிகை படி; பார்க்கலாம்!"

கண்ணன் அவசரமாகக் கீழே விழுந்திருந்த பத்திரிகையை எடுத்து, படிப்பதற்குப் பதில் சரியாக மடித்து வைத்துக் கொண்டு பயந்த படியே நின்றான்.

"ஏன் கண்ணா, படி பார்ப்போம்!"

"ஸார்! எனக்கு..." கண்ணனால் பேசமுடியவில்லை. வெட்கம் அவனை ஆட்கொண்டது.

"ஓ, உனக்கு ஆங்கிலம் தெரியாதா?", என்றான் பத்ரி.

கண்ணன் விட்டுக் கொடுக்காமல், "ஸார்! கொஞ்சம் கொஞ்சம் தெரியும்" என்றான்.

அதற்குள் வாசலில் கார் வந்து நிற்கவே நாராயணியின் பேச்சொலியில் வீடே கலகலத்தது. "என்ன? கால் மணி சாவகாசமாக நான் இல்லாமல் போனதில் தடுமாறி விட்டீர்களா? இல்லையே?" என்றும், "ஏண்டா, கண்ணா! பேப்பர் படிக்கத் தெரியவில்லையா? ஓ!" என்று கண்ணனைக் கேலி செய்து கொண்டும் அவள் பத்ரியின் எதிரில் வந்து நின்று சிரித்தாள்.

பத்ரி அவளை அன்போடும் சற்று ஆத்திரத்தோடும் கவனித்து விட்டுத் தன் வேலையில் ஆழ்ந்தான். நாராயணி ஏதோ ரொம்ப அவசரத்தில் இருந்தாள். "இதோ பத்திரிகை படிக்கிறேன். ஆனால் இன்று விஷயத்தை மாத்திரம் சொல்லி விடுகிறேன். உலக மக்கள் உலகை வெறுத்து, சந்திரலோகம் போகப் பிரியப்படுகின்றனர். இரண்டாவது, உலகில் பொருளாதார நெருக்கடி அதிகமாகி விட்டது. முடிவாக, நமது பிரதம மந்திரி நேரு இப்பொழுது ஹைதராபாத்துக்கு வந்திருக்கிறார். போதுமா?"

"தண்ணீர்த் துறையில் பொருளாதார நெருக்கடி ஒன்றுமில்லையா?" என்று கேட்டு வைத்தான் பத்ரி.

"அங்கு இல்லை. ஆனால் மற்ற இடத்தில் சற்று கண்டு, எப்பொழுதும் ஒரு மாதிரி சமாளித்துக்கொள்ள ஆகவேண்டும்?" என்று சொல்லி அவசரமாக வெளியே சென்றாள்.

'நம் அம்மா வருவது இவளுக்குத் தெரிந்து தான் இருக்கிறது' என்று தீர்மானமாக

'ஹாக்கி'யை விரும்புவோர் சிலரே...





ஆனால் எல்லோரும் விரும்புவது




Parry's பாரிஸ் மிட்டாய்களே

ஏனெனில் அவை ருசியுள்ளவை, ஆரோக்கியமானவை, சுத்தமானவை

தயாரிப்போர்: பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், மதராஸ்

PAS 320

# ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ் ஜலதோஷத்தை நிறுத்துக

ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத் திணறல், இருமல், தும்மல் மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றிச் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம் வாபஸ்.

# முகப் பருக்கள் நீங்கி விடுகிறது - 3 நாளில் அதன் மூலகாரணம் வெல்லப்படுகிறது

நிக்ஸோடர்ம் (Nixoderm) முதல் முகவில் உபயோகிக்கத் தொடங்கியதுமே முகப்பருக்கள் எல்லாம் மாயமாய் மறையத் தொடங்குகின்றன. இன்றிரவே நிக்ஸோடர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். விரைவில் உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழப்பாகவும், மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், பிளவைகள், தேமல்கள், கரப்பான், படை, கட்டிகள் இவைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் கொல்லும் ஒரு புதிய முறை. இன்றே உங்கள் கெமிஸ்டுடமிருந்து நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை அழித்து உங்கள் சருமத்தை சுத்தமாகவும், மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்ய உத்தரவாதம். அன்றேல் வெற்றுப் பெட்டியை அனுப்பினால், பணம் வாபஸ்.

**Nixoderm**
நிக்ஸோடர்ம்
சரும உபாதைகளுக்கு

# தீபாவளி சலுகை!

ஸ்விட்சர்லாந்திலிருந்து இறக்குமதியான இந்த ஆன்டிமாக்னெட்டிக் லீவர் கெடிகாரங்களை வாங்குங்கள். ஒவ்வொன்றும் ஐந்து வருஷ உத்தரவாதமுள்ளது.



இனாம்! ஏதாவது ஒரு கெடிகார ஆர்டருக்கு ஒரு பேனா செட்டும் ஒரே பாக்கிங்கில் ஏதாவது இரண்டு கெடிகார ஆர்டருக்கு ஒரு பாக்கெட் கடிகாரமும் இனாமாகப் பெறுங்கள். பாக்கிங் & தபால் செலவு ரூ. 3 தனி

சேர்க்கட சலுகை தீபாவளி வரையிலும்தான்




டஸ்ட் புருப். ஷோக்டஸ் லீவர்

| | |
|---|---|
| க்ரோம் ஸ்டீல்பேக் ஜூவல்ட் | ரூ. 43 |
| ரோ. கோ. ஸ்டீல்பேக் ஜூவல்ட் | ரூ. 43 |
| க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் | ரூ. 62 |
| ரோ. கோ. ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் | ரூ. 63 |
| க்ரோம் ஸ்டீல்பேக் 17 ஜூவல்ஸ் | ரூ. 69 |




ஷாக்புருப். ரேடியம் டயல்

| | |
|---|---|
| க்ரோம் ஸ்டீல்பேக் ஜூவல்ட் | ரூ. 47 |
| க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் | ரூ. 65 |
| ரோ. கோ. ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் | ரூ. 72 |
| க்ரோம் ஸ்டீல்பேக் 17 ஜூவல்ஸ் | ரூ. 79 |
| ரோ. கோ. ஸ்டீல்பேக் 17 ஜூவல்ஸ் | ரூ. 81 |
| க்ரோம் ஸ்டீல்பேக் 21 ஜூவல்ஸ் | ரூ. 81 |




ஷாக்புருப். ரேடியம் டயல்

| | |
|---|---|
| க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் | ரூ. 70 |
| ரோ. கோ. ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் | ரூ. 72 |
| க்ரோம் ஸ்டீல்பேக் 17 ஜூவல்ஸ் | ரூ. 77 |
| ரோ. கோ. ஸ்டீல்பேக் 17 ஜூவல்ஸ் | ரூ. 79 |
| க்ரோம் வாட்டர் புருப் இல்லாதது ஜூவல்ட் | ரூ. 60 |

**TIME MASTER**
**(INDIA) (KM)**
**163, NARAYAN DHRU ST., BOMBAY - 3**

HVB

நம்பினான் பத்ரி: அவன் குளித்து விட்டு வருவதற்குள் வீட்டின் எல்லா இடங்களிலும் புதியதும் விலையுயர்ந்ததுமான திரைச் சீலைகள் தொங்க விடப்பட்டு வர்ணப் பாத்திரங்களில் ஆங்காங்கு பூங்கொத்துகள் வைக்கப்பட்டிருந்தன. பல அழகான படங்கள் வேறு சுவரில் மாட்டப்பட்டிருந்தன. பத்ரிக்கு மறுபடியும் தன் தாயாரின் நினைவு வந்தது. 'தன் தாயாரோ தங்கையோ அவர்களுக்கு இருக்கும் சிக்கலில் இந்த அலங்காரங்களையா ரசிக்கப் போகிறார்கள்! இந்தப் பேதைப்பெண் எதற்கு இப்படியெல்லாம் சிரமப்படுகிறாள்?' என்று எண்ணமிட்டான். தவிர, 'குழந்தைகள் திரைச் சீலைகளைப் பிடித்து இழுக்கும், கிழிக்கும், அழுக்கு செய்யும். பூச்செடிகளை உருட்டும். நாற்காலிகளைத் தள்ளிக்கொண்டு ரகளை செய்யும். பிறகு கேட்பானேன், அமர்க்களத்தை!'' என்றும் அவனுக்குக் கவலை உண்டாயிற்று. கூடத்தில் ஒரு ஆடும் மரக் குதிரை வைக்கப்பட்டிருந்தது. ஆகா! இது எவ்வளவு அருமையான எண்ணம்! குழந்தைகளிடம் என்ன கனிவு!' என்றும் அவனுக்கு மனத்தில் பளிச்சிட்டது.

அதற்குள் அவனுக்குப் பின்னாலேயே வந்த நாராயணி, ''ஓகோ! இதைப் பார்த்ததும் இதன் மேல் ஏறி உட்கார்ந்து ஆடும் வயது இல்லையே என்ற வருத்தமோ! அதுதான் யோசனையோ!'' என்று சொல்லி இடி இடியெனச் சிரித்தாள்.

பத்ரியும் நாராயணியும் எப்பொழுதும் கூடவே உணவருந்துவார்கள். அதன் பிறகு நாராயணி அவனுக்குத் தேவையான அளவு பாக்கு சுண்ணாம்பு வெற்றிலை சேர்த்த பீடா வைக் கொடுத்து உபசரிப்பாள். பிறகு தானாகவே காரை எடுத்து வாசலில் நிறுத்தி அவனை ஏற்றிக் காரியாலயம் அனுப்புவாள்.

பத்ரிக்கு இன்று பீடா வரவில்லை. அவன் மனைவியைத் தேடிக் கொண்டு அவளது அறைக்குள் சென்றான். அங்கே ஒரு மூட்டை துணி வைக்கப்பட்டிருந்தது. நாராயணி இரும்பு அலமாரியை ஒழித்து இடமாக்கிக் கொண்டிருந்தாள்.

தன் தாயாருக்காக அவள் செய்து வரும் ஏற்பாடுகள் அவனை முழுதும் ஆட்கொண்டு விட்டன என்றே சொல்லலாம்.

பத்ரியைக் கண்டதும், ''எனக்கு நீங்கள் ஒரே ஒரு உதவி செய்ய முடியுமா? செய்வீர்களா?'' என்று தாழ்மையுடன் கேட்டுக் கொண்டாள் நாராயணி.

பத்ரியால் அந்தத் தாழ்மையைத் தாங்க முடியவில்லை. ''என்ன? என்ன வேண்டும், சீக்கிரமாகச் சொல்லு. ஒன்றில்லை. ஆயிரம் கூடச் செய்ய முடியும்'' என்று கூறினான்.

## எண்பதாண்டான பண்டிதர்

கடலங்குடி நடேச சாஸ்திரியாரின் சதாபிஷேகம் சென்ற மாதம் 11-ம் தேதி சென்னை தியாகராயநகரில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

கடலங்குடி சாஸ்திரிகள் வடமொழியில் ஆழ்ந்த புலமை மிக்க பண்டிதர். அந்தப் பாண்டித்தியம் தமிழ் மக்களுக்கும் பயன்படும்படி சென்ற நாற்பது, ஐம்பதாண்டுகளாகப் பணியாற்றி வந்திருக்கிறார், வடமொழியில் மிக மிகக் கஷ்டமான நூல்கள் என்று கருதப்பட்டவற்றையெல்லாம் அவர் தமிழில் மொழி பெயர்த்துப் புத்தக உருவாக வெளியிட்டிருக்கிறார்.



ஸ்ரீமத் பாகவதத்தை அவர் மொழி பெயர்த்து வெளியிட்டது அவர் தொண்டுக்கெல்லாம் சிகரம் வைத்தது போல் விளங்குகிறது. இதைத் தவிர பல ஜோதிஷ நூல்கள் வேறு மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார். இந்த அரிய சேவைகளைப் பாராட்டி, அன்று மாலை சிவ விஷ்ணு ஆலயத்தில் நடைபெற்ற கூட்டத்தில் ஸ்ரீமான்கள் ராஜாஜி, கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள், கே. பாலசுப்பிரமண்ய அய்யர், அனந்தராம தீட்சிதர் முதலியவர்கள் பேசினார்கள். முடிவில் ஸ்ரீமான் கடலங்குடி நடேச சாஸ்திரிகள் தமது சொந்த முயற்சியில் தாம் எப்படி முன்னுக்கு வந்தார் என்பதைக் கூறி, அங்கு கூடியிருந்த இளைஞர்களுக்கெல்லாம் புது ஊக்கமும் உற்சாகமும் நல்கினார். எண்பதாண்டு நிறைந்த சாஸ்திரிகள், இன்னும் பல்லாண்டு வாழ்ந்து தமிழ்க் குலத்துக்கு அரிய சேவை புரிய வேண்டும் என்று தமிழுலகம் வேண்டுகிறது.



சென்னை பிரதம இன்ஜினியர் காரியாலயத்தைச் சேர்ந்த திரு ஜி. சந்திரசேகர அய்யர் அவர்களின் புதல்வர் திரு வைத்தியநாதனுக்கும், திரு வி. எஸ். பாலசுப்ரமண்ய அய்யரின் புதல்வி சௌ. காந்திமதிக்கும் சென்னையில் செப்டம்பர் 10-ந்தேதி வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

oooooooooooooooooooooooooooooooooo

"என் ஏற்பாட்டில் ஒரு பற்றாக்குறை விழுந்து விட்டது" என்று தயங்கிக் கொண்டு பேசினள் நாராயணி.

பத்ரி அவளைத் தட்டிக் கொடுத்து, "பயப்படாதே சொல்லு. சீக்கிரமாக" என்றான் அன்புடன்.

நாராயணிக்கு இன்னமும் சற்றுத் தயக்கம் தான். அவனது கைவிரல்களை ஒவ்வொன்றாக நான்கை மடக்கி விட்டுக் கொண்டே காதோடு, "ஒன்று, ஸைபர், ஸைபர், ஸைபர் வேண்டும்" என்றாள்.

பத்ரி உடனே ஒரு செக்கு ஆயிரம் ரூபாய்க்கு எழுதிக் கொடுத்து விட்டான். அவனுக்குத் திருமணச் சீராக மாமனார் ஒரு காரும் ஒரு வீடுமே வாங்கிக் கொடுத்திருக்கிறார். அப்படியிருக்க அவள் தன்னைக் கெஞ்சுவதை அவன் எப்படிப் பொறுத்துக்கொண்டிருக்க முடியும்?

நாராயணி வழக்கம் போல் புருஷனைக் காரில் ஏற்றிக் காரியாலயத்துக்கு அனுப்பி வைத்தாள்.

மாலையில் அவன் திரும்பி வருகையில் வழக்கம் போல் நாராயணி அவனை எதிர் கொள்ளவில்லை. கண்ணன் தான் வரவேற்றான். 'இனிமேல் சில மாதங்களுக்கு இவன் தான் நமக்குக் கதி போலும்' என்று பத்ரி மனத்துக்குள் பொருமிக் கொண்டான்.

"கண்ணு! மாமி எங்கே?"

"மறுபடியும் ஏதோ வேண்டுமென்று, டாக்ஸியில் கடைத்தெருவுக்குப் போனார்கள். வரும் நேரமாகி விட்டது" என்று அவனுக்குப் பதில் கிடைத்தது.

நாராயணி 'ஷாப்பிங்' முடித்துத் திரும்புவதற்குள் பத்ரி 'கிளப்'புக்குச் சென்று விட்டான். அவன் இரவு எட்டு மணிக்கு வீடு திரும்புகையில் எங்கும் ஜகஜ்ஜோதியாக விளக்குகள் ஏற்றப்பட்டு உயர்ந்த ரக அகர்பத்தியின் வாசனை காற்றில் மிதக்க நாராயணி வழக்கத்தைவிட அதிக அலங்காரத்துடன் காணப்பட்டாள். எங்கு பார்க்கினும் வழக்கத்தைவிட அதிகமான பணியாட்கள் நின்றுகொண்டு பத்ரியின் சுதந்திரத்துக்குத் தடையாக இருந்தனர். போதும் போதாததற்குச் சில நண்பர் குழாம் வந்து போயிற்று.

யாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போல் நாராயணி அன்று ஒரு திரைப்படத்துக்கு டிக்கெட்டுகள் வாங்கி வைத்திருந்தாள். பத்ரிக்குத் திரைப்படம் செல்வதே பிடிக்காது. ஆனாலும் மனைவியின் விருப்பத்துக்குத் தடை சொல்ல அவன் விரும்பவில்லை. 'தன் தாயார் வந்தபின் இவ்வித அவகாசமிராது' என்று தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டான். அன்றைக்கென்று 'படம்' நீண்டு ஓடியது. அவர்கள் திரும்பி வீட்டுக்கு வரும் பொழுது நடுநிசியாகி விட்டது. மறு நாள் பொழுது வெகு சீக்கிரம் விடியப் போகிறது. இதற்கு மேல் அவர்களால் தங்கள் மனத்தின் ரகசியத்தை ஒருவருடன் ஒருவர் பகிர்ந்து கொள்ளாமல் இருக்க முடியவில்லை. அந்தப் பளுவினால் அவர்களுக்கு இருதயமே வெடித்து விடும் போல் தோன்றியது.

"என்ன !" என்று நிசப்தத்தைத் தகர்த்தெறிந்தாள் நாராயணி. அவளது விழிகளில் மகிழ்ச்சி ஒளிவிட்டது.

"என்ன?" என்று பதிலுக்குக் கேட்டுவிட்டுப் பத்ரி 'பக்'கெனச் சிரித்து விட்டான். அவன் உள்ளமும் பூரித்திருந்தது.

"அதோ நேராக இருக்கும் அறைக்குள் நாளையிலிருந்து நீங்கள் திடீரென நுழையக் கூடாது. அது என் அக்காவின் அறை. தெரியுமா?" என்றாள். அவளது இதயத்தின் சுமை நீங்கி விட்டது.

பத்ரி படுக்கையிலிருந்து துள்ளி உட்கார்ந்தான். அவன் இவ்வளவு நேரம் நினைத்திருந்ததெல்லாம் தவறு? கல்கத்தாவிலிருந்து வரும் நாராயணியின் தமக்கைக்காகவா இந்த ஏற்பாடுகளெல்லாம் நடக்கின்றன?

"நாராயணி! என் அம்மா, ரஞ்சனி குழந்தைகளுக்கு எந்த அறைகளை ஒழித்து விட்டிருக்கிறாய்? நாளைக்கு அவர்களும் வருகிறார்களே!" பத்ரி இப்பொழுது தைரியமாகப் பேசி விட்டான். அவனது மனச் சுமையும் நீங்கியது.

இதைக்கேட்ட நாராயணி படுத்திருந்தபடியே அசைவற்றுப் போனாள். பிறகு மெதுவாகத் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "ஓ! பக்கத்து அறைகள் எல்லாமே தயாராகத் தான் இருக்கின்றன" என்றாள். இப்பொழுது அவள் முகம் உற்சாகமற்றுக் காணப்பட்டது.

பத்ரி நிலைமையைச் சமாளிக்க முயன்றான். "உன் அக்காள் வரும் 'கல்கத்தா மெயிலை'விட, எங்கள் அம்மா வரும் 'பெங்களூர் மெயில்' முன்னதாகவே வருகிறது. அம்மாவே அக்காளையும் கவனித்துக் கொள்ளுவாள். நீ கவலைப்படாதே. இப்பொழுது நாம் தூங்கினால்தான் காலையில் அவர்களை உபசரிப்பதற்கு நமக்குத் தெம்பிருக்கும்" என்றான்.

இதன் பின்னர் பத்ரி நன்றாகத் தூங்கியிருக்கலாம். ஆனால் நாராயணி அன்றிரவை எப்படிக் கழித்தாள் என்பது அடுத்த நாள் அவளைச் சந்தித்திருந்தால் தெரிந்திருக்கும்!

# தீபாவளி 'பட்ஜெட்'

சுந்தரம்: வா, வா! சேகர்! ஏது? எங்கே இப்படி?

சேகர்: சும்மாத்தான். உன்னைப் பார்த்துப் போகலாம் என்று வந்தேன்.

சுந்தரம்: ஓ! ரொம்ப சந்தோஷம்! கமலா! சேகருக்குக் காப்பி கொண்டு வா! என்ன, தீபாவளி யெல்லாம் வருகிறதே? வேஷ்டி, புடவை, சொக்காய் எல்லாம் எடுத்து விட்டாயா? இந்த வருஷம் 'பட்ஜெட்' எப்படிப் போட்டிருக்கிறாய்?

சேகர்: பட்ஜெட்டாவது, மண்ணாங்கட்டியாவது. இந்த வருஷம் நான் ரொம்பச் சிக்கனமாகத்தான் எல்லாம் செய்யணும். செலவும் அதிகமாக இருக்கிறது. அதற்காகத்தான் உன்னைக் கேட்டால் சரியான யோசனை சொல்வாய் என்று வந்தேன். உன்னைக் கடைக்கு அழைத்துக் கொண்டு போகலாம் என்று எண்ணினேன். நீ என்ன எடுத்திருக்கிறாய்? எல்லாம் வாங்கியாகி விட்டதா?

இந்த வருஷம் நம்ம தீபாவளி 'பட்ஜெட்' துணிமணி வியாபாரம் எல்லாம் 'ஹோம்' டிபார்ட்மெண்ட் கிட்டே விட்டு விட்டேன். நான் எதிர்பார்த்ததை விட எல்லாம் சல்லிசாக முடிந்து விட்டது! வருஷா வருஷம் நானே போய்ப் புடவை, வேஷ்டி எல்லாம் வாங்கி வருவேன். அது 'ஹோம்' டிபார்ட்மெண்ட்டில், 'அப்ரூவல்' இருக்காது. கடைசியில் இருநூறு முந்நூறு என்று கடைகளில் கடனோடு வந்து, அந்தக் கடனைத் தீர்க்க வருஷம் பூராவும் பிடிக்கும். இந்த வருஷம் என் கையிலிருந்த பணத்தை அப்படியே கமலாவிடம் கொடுத்து விட்டு, இவ்வளவுதான் முடியும் என்று சொல்லி விட்டேன். 'ரிசல்ட்' என்ன தெரியுமோ? எங்கள் வீட்டில் இந்த வருஷம் 'கதர் தீபாவளி'யாகக் கொண்டாடுகிறோம்!

சேகர்: கதரா? கதரில் முரட்டுத்துணி தானே கிடைக்கும்?

சுந்தரம்: நானும் முதலில் அப்படித்தான் நினைத்தேன். கடைசியில் பட்டுப் புடவை, வேஷ்டி அங்கவஸ்திரம் எல்லாம் கமலா வாங்கி வந்ததைப் பார்த்தால் அவற்றைக் கதர் என்றே நம்ப முடியவில்லை. நூல் துணிகள் கூட என் சொக்காய்க்குக் கொண்டு வந்தாள். அருமையாக இருக்கின்றன. குழந்தைகளுக்கு, சீட்டி அச்சு ரகங்கள் பிரமாதமாகக் கண்ணைப் பறிக்கின்றன. கொண்டு வரச் சொல்கிறேன் பாரேன்.... கமலா! தீபாவளிக்கு நீ எடுத்து வந்திருக்கும் கதர் துணிகள் புடவைகள் எல்லாவற்றையும் கொண்டு வந்து சேகருக்குக் காண்பி. காப்பி ஆறிவிடப் போகிறது, சாப்பிடு.



சேகர்: (கதர் வகைகளைப் பார்த்து விட்டு) நிஜமாகவா? இதெல்லாம் கதரா? நம்பவே முடியவில்லையே! இப்படி யெல்லாம் கதரில் இனுசு இனுசாக நல்ல ரகங்கள் வருகின்றன என்று எனக்கு இத்தனை நாள் தெரியாதே! ஆனால் விலை கொஞ்சம் அதிகம்தானிருக்கும்?

சுந்தரம்: நானும் அப்படித்தான் முதலில் நினைத்தேன். ஆனால் கடைசியில் கணக்குப் பார்த்தால், நான் போன வருஷங்களில் எல்லாம் வாங்கியதைவிடச் சல்லிசாகவே முடிந்திருக்கிறது. கதர்ப்பட்டு ரகங்களுக்கு ரூபாய்க்கு மூன்றணா 'ரிபேட்' கொடுக்கிறார்களே! துணி ரகங்களுக்கு மூன்றரை அணா 'ரிபேட்'. அதனால், பாரு, நூறு ரூபாய் பட்டுப் புடவை கதரில் எண்பது ரூபாய்க்கு வருகிறது! பார்த்தாயா! ஜரிகை வேஷ்டி, அங்கவஸ்திரம் எல்லாம்!



சேகர்: ஜோராகத்தானிருக்கிறது; இதெல்லாம் எங்கே கிடைக்கிறது?

சுந்தரம்: இப்போதுதான் சென்னை அரசாங்க காதி விற்பனை நிலையங்கள் ஆங்காங்கு வைத்திருக்கிறார்களே, நமக்காக! சென்னை நகரத்திலேயே ஆறு சர்க்கார் கதர் டிப்போக்கள், தெ. 86. பிராட்வே; 60, வாலாஜா ரோடு (பாரகன் பக்கத்தில்), திருவல்லிக்கேணி (3, பைக்ராப்டஸ் ரோடு), தியாகராய நகர் (22, தியாகராய ரோடு), மைலாப்பூர் (82, ராயப்பேட்டை ஹைரோடு), புரசைவாக்கம் (6, தாணா தெரு)—இங்கெல்லாம் இருக்கின்றன. இன்னும் ஜில்லாக்களில், கோவை, மதுரை, கும்பகோணம், சேலம், காஞ்சீபுரம், வேலூர், திருநெல்வேலி, உதகமண்டலம், கோடைக்கானல், திருச்சி, காரைக்குடி, நாகர்கோயில், கடலூர் இந்த இடங்களில் சென்னை அரசாங்கக் காதி விற்பனை நிலையம் ஜனங்கள் சௌகரியத்துக்காக அரசாங்கத்தார் திறந்து வைத்திருக்கிறார்களே?

சேகர்: அப்படியானால் இப்பொழுதே நம் ஊரில் உள்ள அந்த சர்க்கார் கதர் டிப்போவுக்குப் போய்ப் பார்ப்போம், வா!

சுந்தரம்: பேஷாக வருகிறேன்! ஆனால் வந்தால் அங்கு உள்ள கண்ணைப் பறிக்கும் கதர் இனுசுகளைப் பார்த்தால் இன்னும் வாங்கத் தோன்றும்.

சேகர்: அதனால் என்ன? வாங்கினால் போகிறது! கிளம்பு சீக்கிரம்!

சுந்தரம்: இதோ வந்துவிட்டேன்! ஒரே நிமிஷம்!

—சென்னை அரசாங்க காதி இலாகா

என் கதை

# ஆகாச வாணம்

ரமணியையும் உஷாவையும்தான் உங்களுக்குத் தெரியுமே. சதா துறுதுறு என்று இருப்பவர்கள். எந்த விஷயத்தைப் பற்றியும் அறிந்து கொள்ளுவதில் அவர்களுக்கு அலாதி ஆவல். தீபாவளிக்கு அவர்கள் அப்பா ஏராளமான வாணம், வெடி, மத்தாப்பு, கலசம் எல்லாம் வாங்கிக் கொடுத்திருந்தார். ரமணிக்கும் உஷாவுக்கும் பெருமை தாங்கவில்லை. வாணம், வெடி, பட்டாசு எல்லாவற்றையும் வரிசையாக அடுக்கி வைத்து அழகு பார்த்துக் கொண்டிருந்தனர். மறுநாள் அவைகளைக் கொளுத்தியதும் காணப்போகும் காட்சியைக் கற்பனை செய்து அதில் லயித்துப் போயிருந்தவர்களைக் கலகலவென்ற சிரிப்பொலி திடுக்கிட வைத்தது. சுற்றுமுற்றும் பார்த்தார்கள். யாரையும் காணவில்லை. தங்க 'ரேக்' காகிதம் சுற்றிய கலசம் மறுபடியும் கலகலவென்று சிரித்தது.

"ரமணி! எங்களையெல்லாம் நாளைக்குக் கொளுத்தப் போகிறாய். உன்னைக் குதூகலப்படுத்த நாங்களும் விதம்விதமான வர்ண ஜாலங்களை வானவீதியிலே அள்ளிக் கொட்டி ஆர்ப்பரிக்கப் போகிறோம். ஆனால் எங்களைப் பற்றி நீ தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்று கேட்டது.

வாணம் தங்களுடன் பேசுவதைக் கண்ட ரமணிக்கும் உஷாவுக்கும் உற்சாகம் தாங்கவில்லை. உடனே கேள்விமேல் கேள்வியாகத் தொடுக்க ஆரம்பித்தார்கள்; பூ மத்தாப்பு, சீனவெடி, ஆகாசவாணம், அதிர்வேட்டு, ஆட்டம் பாம், விஷ்ணு சக்கரம், ஊசிப்பட்டாசு, கம்பி மத்தாப்பு எல்லாமே இவர்களுடன் பேச ஆசைப்பட்டன. ஒவ்வொருவராகப் பேசும்படி கேட்டுக் கொண்டாள் உஷா.

வயதிலே மூத்த சீனவெடி படபடவென்று முதலில் பேசியது. "நான் சீன தேசத்தவன். உலகிலேயே முதன் முதலில் வாணம், வெடி வகைகளைக் கண்டு பிடித்து உபயோகித்தவர்கள் சீனர்கள்தான். இன்றும்கூட அநேக இடங்களில் எங்களைச் சீனவெடி என்ற செல்லப் பெயராலேயே அழைக்கிறார்கள்" என்றது.

ரமணிக்குச் சீனவெடியின் தற்பெருமை பிடிக்கவில்லை. "அப்படி ஒன்றும் பெருமைப்பட்டுக் கொள்ளாதே. எங்கள் நாட்டிலும் ஆதிகாலத்திலிருந்தே வாணம் வெடி வகைகளை உபயோகித்து வந்திருக்கிறோமாக்கும். பார்க்கப் போனால் நீகூடச் சீனவெடி இல்லை. சிவகாசி வெடிதான் தெரியுமா?" என்று இடைமறித்தான் ரமணி.

"அடடே! அதற்குள் கோபித்துக் கொண்டு விட்டாயே. அன்றைய நாடுகளான நாம்தான் கலாசாரத்திலே மேம்பட்டவர்களாயிற்றே. அது போகட்டும், நான் பிறந்த கதையைச் சொல்லுகிறேன் கேள். நாம் இப்போது உணவு சமைக்கவும், மாமிசங்களைப் பக்குவம் செய்யவும் சாதாரண உப்பைப் பயன் படுத்துவதுபோல் பண்டைக்காலத்தில் ஆதிமனிதன் குகைவாசியாக இருந்த போது சமையலுக்கு வெடியுப்பைத்தான் பயன் படுத்தி வந்தான்.

"ஒருநாள்தான் உண்ணும் உணவை நெருப்பிலே வாட்டிப் பக்குவம் செய்து கொண்டிருந்தபோது. உணவுக்குப் பயன்படும் வெடியுப்பு தணலிலே தவறி விழுந்து படபடத்து ஒளிப்பொறிகளை உண்டாக்கியதைக் கண்டு வியப்படைந்தான். மனிதனின் சிந்தையிலே அப்போதுதான் நான் உருவானேன். இந்த நிகழ்ச்சியை எண்ணி எண்ணிச் சிந்தித்த அவன், கரியிலே வெடியுப்பைக் கலந்து தீ வைத்தால் விசித்திரமான ஒலியோடு ஒளிபொருந்திய ஜுவாலை ஏற்படும் என்ற முடிவுக்கு வந்தான். இப்படி வெடியுப்பையும், கரித்தூளையும் கலந்து வைத்திருந்த மூங்கில் குழாய் ஒன்றில் எதிர்பாராத விதமாக ஒரு நாள், தீப்பொறி பறந்து விழவே 'உஸ்' என்ற சீறலுடன் அந்தக் கலவை ஜுவாலை விட்டுப் பொங்கிப் பொறியைப் பூப்பூவாகக் கக்கிச் சிதறியது. முதல் வாணத்தை மனிதன் அப்போதுதான் கண்டான்.

"ஒரு துண்டுக் காகிதத்தைக் கொளுத்திக் கண்ணாடி ஜாடிக்குள் போட்டு மூடினால் என்ன ஆகிறது? எரியும் காகிதம் சற்று நேரத்தில் அணைந்து விடுகிறது. இதன் காரணம் உனக்குத் தெரியும். வாணங்களின் மருந்துக் கலவையோ குழாய்க்குள் அடைத்து மூடி வைக்கப்பட்டிருக்கிறது. காற்றிலுள்ள பிராணவாயுவுடன் அதனால் தொடர்பு கொள்ள முடியாது. அப்படி யிருந்தும் வர்ணங்களைக் கொளுத்தினால் அவை சீறிக் கொண்டு வர்ணப் பொறிகளை வாரி இறைக்கின்றனவே. இது எப்படி என்று நீ சிந்தித்துப் பார்த்ததுண்டா?"

"இதை ரமணிக்கும், உஷாவுக்கும் நான் விளக்குகிறேன்" என்று பேச ஆரம்பித்தது ஆகாச வாணம்: "உஷ்ணப்படுத்தினால் ஏராளமான பிராண

# கௌசிகன்



வாயுவை வெளிப்படுத்தக் கூடிய ஒரு பொருள் என்னுள்ளே இருக்கும் கலவையில் இருக்கிறது. இதைப் பொட்டிலுப்பு என்றும் சிலர் சொல்லுவார்கள். வாண மருந்துகளுக்குப் பிராணவாயு விநியோகம் செய்யும் ''பொட்டாசியம் நைட்ரேட்'' என்று சொல்லப்படும் வெடியுப்பு ஆசியாக் கண்டம் முழுவதிலும் ஏராளமாகப் பூமியிலிருந்து கிடைக்கிறது.

''கரித்தூளையும் வெடியுப்பையும் கலந்து கொளுத்தினால் ஏற்படும் காட்சியைக் கண்டு களித்த மனிதன், தீப்பட்டதும் எரியக்கூடிய மூன்றாவது பொருளான கந்தகத்தைக் கண்டுபிடித்தான். இப்போது வெடி மருந்து உதயமாயிற்று'' என்றது ஆகாசவாணம் தன் சீறும் குரலில்.

இடிபோன்ற தன் குரலைக் கனைத்துச் சீர்ப்படுத்திக் கொண்டு பேசலாயிற்று அதிர்வெடி. ''துப்பாக்கி, பீரங்கி போன்ற யுத்த அரங்க ஆயுதங்களுக்கான வெடிமருந்தைக் கண்டு பிடித்தவர் ஜெர்மானியப் பாதிரியான 'பெர்த்தால்டு ஸ்கூவார்ட்ஸ்' என்பவர். பன்னிரண்டாம் நூற்றாண்டுவரை உலகில் பீரங்கி, துப்பாக்கி போன்ற ஆயுதங்கள் கிடையாது.''

அதிர்வெடியின் பேச்சு ஆகாச வாணத்துக்கு ஆத்திரத்தைக் கொடுத்தது. ''துப்பாக்கியைக் கண்டுபிடித்திருக்கலாம். வெடி மருந்தை உற்பத்தி செய்து அதற்குக் 'கன் பவுடர்' என்று தங்கள் மொழியில் பெயரும் கொடுத்திருக்கலாம். ஆனால் அவர் புதுமையாக ஒன்றும் செய்து விடவில்லை. ஆசியாக் கண்டத்தில் கொண்டாட்ட காலங்களில் குதூகலமாகத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவிக்கப் பயன்படுத்தி வந்த வாண மருந்துக் கலவையை ஒரு குழாயில் போட்டுக் கெட்டித்து அதற்குத் தீ வைப்பதின் மூலம் அது பயங்கரமான வேகத்தோடு வெளிப்பட்டு சர்வ நாசத்தை விளைவிக்கும் என்பதைக் கண்டுபிடித்தார். மனிதக் குலத்தின் அழிவுக்கு அடிகோலிய மகானுபாவன் அவர்தான்'' என்றது காரசாரமாக.

''நமக்குள் விவகாரம் எதற்கு? விதவிதமான வர்ணப் பூக்களை வாரி இறைக்கும் விந்தை வாணங்கள் எப்போது தோன்றின என்பதை ரமணிக்கும் உஷாவுக்கும் சொல்லுவோம்'' என்றது அமைதியாகப் புதை வாணம்.

''ஆசியாவிலே தோன்றிய வாண வகைகள் மேன்மேலும் வளரலாயின. மிக நுண்ணிய இரும்புத்தூளை மருந்துக் கலவையோடு சேர்த்து எரிப்பதினால் நீர் ஊற்றுப்போல ஒளிப் பொறிகள் உண்டாவதைக் கண்டுபிடித்தார்கள் சீனர்கள்.

''காகிதத்திலே இந்த வாணக் கலவையை வைத்து இறுக்கிச் சுற்றி அதனுடன் இணைத்த மருந்துத் திரியில் தீயிட்டுக் கொளுத்தினால் அடைபட்டுக் கிடக்கும் மருந்து, காகிதச் சுருளைக் கிழித்துக் கொண்டு வெளிப்படும் போது, ஒலியையும் ஒளியையும் உண்டாக்கும் என்றும் கண்டுபிடித்தனர் சீனர்கள். இதுவே 'பட்டாசு' என்று பெயர் பெற்றது.

''இன்று நீங்கள் மத்தாப்பு, வாணங்களில் காணும் நீலம், சிவப்பு, பச்சை, மஞ்சள், ஊதா முதலிய வர்ண ஜாலங்கள் பதினெட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் தோன்றலாயின. பிரான்ஸ் தேசத்து விஞ்ஞானியான 'பெர்த்தோலட்' என்பவர் 'பொட்டாசியம் குளோரேட்' என்ற உப்பைக் கண்டுபிடித்தார். அதிலிருந்து பலவித உலோக உப்புக்களின் தோற்றம் உதயமாயிற்று. இந்த உலோக உப்புக்களைச் சூடாக்கினால் தன்னுடைய உலோக குணத்துக்கு ஏற்ற வர்ணங்களை அவை வெளிப்படுத்தும் என்பதையும் கண்டான் மனிதன். பேரியம் என்ற உலோக உப்பு பச்சை நிறத்தையும், ஸ்ட்ரான்ஷியம் என்ற உப்பு சிவப்பு நிறத்தையும், சோடியம் (சாப்பாட்டு உப்பு) மஞ்சள் நிறத்தையும், தாமிரம் (காப்பர்) நீல நிறத்தையும் கொப்பளிக்கும். மக்னீஷியம் என்ற உலோகமோ தானே எரிந்து கண்ணைப் பறிக்கும் நிலவொளியைக் கக்கும் சிறப்பு வாய்ந்தது.''

உடனே விஷ்ணுச் சக்கரம் 'விர் விர்' என்று ஒளிப் பூக்களை உதிர்த்துக் கொண்டே பேசலாயிற்று. ''இந்தியாவிலே திருவிழாக்களிலும் பண்டிகைகளிலும் கொண்டாட்ட காலங்களிலும் வாண வேடிக்கைகள் நடத்துவார்கள். அதிர் வேட்டுக்கள் முழங்கும். ஆகாச வாணங்கள் ஆர்ப்பரிக்கும். அவுட்டுக்கள் பகட்டாக வானத்திலே வர்ணப் பூக்களை வாரி இறைத்துச் சிரிக்கும். நவராத்திரியின்போது 'மைசூர் நகர'த்தில் வாண வேடிக்கைகள் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

''சீனாவிலும் நம் நாட்டைப் போலவேதான் வாண வேடிக்கைகள் நடத்துவார்கள். இங்கு தீபாவளியைப் போல் சீனாவில் வருஷத்தின் முதல் பௌர்ணமியின்போது தீப விழா கொண்டாடுகிறார்கள். சந்திரகிரஹணத்தின் போதும், சவ அடக்க ஊர்வலத்தின்போதும் கூடச் சைனா தேசத்திலே வாண வேடிக்கைகள் நடத்துவார்கள்'' என்றது விஷ்ணுசக்கரம்.

# எச்சரிக்கை!

## உங்கள் ஜலதோஷம் அபாயகரமாகக் கூடும்!

**வியாதி ஆரம்பமாகு முன்னரே,
ஜலதோஷ அவஸ்தைகளை இந்த நல்ல,
சக்திவாய்ந்த ஆயின்மென்ட்டால் ஒழியுங்கள்!**

உங்கள் சளித்தொந்திரவுகளை லகுவில் ஒழிக்க வழியிருக்கும்போது, வியாதி ஏற்பட ஏன் விடவேண்டும்? படுக்கும் முன், விக்ஸ்வேபோரப்பை மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். உடனேயே உபாதை இருக்கும் இடத்திலேயே ஆஸ்வாஸம் ஏற்படுவதை உணர்வீர்கள்! நீங்கள் நிம்மதியாக தூங்கும் சமயம், விக்ஸ் வேபோரப் சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது! மறுநாட்காலையிலேயே நீங்கள் சுகம் பெறுகிறீர்கள்!

*ஜலதோஷத்திலிருந்து 2 விதங்களில் நிம்மதி தருகிறது!*



**1** மூக்கின் வழியே வேலை செய்கிறது. விக்ஸ் வேபோரப் சக்திவாய்ந்த ஔஷத ஆவிகளை வெளிவிடுகிறது. நீங்கள் சுவாசிக்கும்போழுது மூக்கிலும் தொண்டையிலும் உள்ள சளி உபாதைகளை அகற்றுகிறது



**2** சருமத்தின் மூலமும் வேலை செய்கிறது. விக்ஸ் வேபோரப்பின் நிம்மதி தரும் உஷ்ணம் மார்க்கட்டை உடைத் தெறிகிறது.

மார்பு, தொண்டை, முதுகில் தேய்த்தாலே போதும்.




விக்ஸ் வேபோரப்

327 Tam

"விக்ஸ் வேபோரப்" டிரேட் மார்க்

**இன்றே விக்ஸ்வேபோரப்பை உபயோகித்து பாருங்கள்!**

***புதிய*** **கைக்கடக்கமான பரீட்சார்த்த சைஸ் டின் 40 ந.பைசா தான்**



# மூன்று நண்பர்கள்

## 12. ரகசியச் செய்தி

மணி குறிப்பாகச் சொன்ன அந்தச் செய்தியைப் பற்றிய சிந்தனையிலே சேகர் மூழ்கி யிருந்தார். ரங்கசாமி மணியைத் தன் காரில் ஏற்றிக் கொண்டு கிளம்பத் தயாரானான். கார் செல்லுவதையே பார்த்துக் கொண்டிருந்த சாதாரண உடையிலிருந்த துப்பறியும் போலீஸ் அதிகாரி சேகரின் பக்கம் திரும்பி, "அந்தப் பையனின் தைரியத்தையும் திறமையையும் நான் எண்ணி வியப்படைகிறேன். அந்தப் பையனை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

சேகர் இலேசாகச் சிரித்துக் கொண்டே, "அவனுக்கு நான் சொந்தமாமா" என்றார். போலீஸ் அதிகாரி வியப்புடன், "உண்மையாகவா? எத்தகைய ஒற்றுமை? ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றார். பிறகு தம் சகாக்களுக்கு மேலே நடக்க வேண்டிய காரியங்களுக்கு உத்தரவளிக்க வேகமாக அவ்விடத்தை விட்டு நகர்ந்தார். நெருப்பணைக்கும் படையினர், தேர்வடம் போல் பின்னிப் பிணைந்து கிடந்த ரப்பர் குழாய்களைச் சுருட்டி ஒழுங்கு படுத்துவதில் சிலரும், இடிபாடுகளை ஆராய்ந்து கனிந்து கொண்டிருக்கும் கங்குகளைக் கிளறிவிட்டு அணைப்பதில் வேறு சிலரும் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர்.

மணி சொல்லி விட்டுச் சென்ற விஷயத்தை நிலவறைக்குள் சென்று ஆராயத் தவித்தது சேகரின் உள்ளம். யாரும் தன்னைக் கவனிக்காத சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். மெல்ல மெல்லக் கீழ்வானம் வெளுக்க ஆரம்பித்திருந்தது.

சரியான சமயத்தில் யாரும் தன் மீது கவனம் செலுத்தாதபோது சட்டென்று நிலவறைக்குள் புகுந்து மறைந்தார் சேகர். நிலவறைக்குள், இருளில், இடிபாடுகளில் தடுமாறித் தள்ளாடியபடி முன்னேறிக் கொண்டிருந்தார். அவர் நினைவெல்லாம் மணி சொல்லி விட்டுப் போன வார்த்தைகளையே மனனம் செய்து கொண்டிருந்தது. 'நிலவறைக்குள்ளே மூன்றாவது கூடத்தில் புழுதிபடிந்த தரையிலே ஏதோ ஒரு செய்தி எழுதப்பட்டிருக்கிறது.' இதுதான் மணி சேகரிடம் அவசரம் அவசரமாகச் சொல்லிச் சென்ற செய்தி.

மணியின் தைரியத்தையும் திறமையையும் வியந்தார் சேகர். 'மேலே கட்டடம் பயங்கரமாகத் தீப்பிடித்து எரிந்து கொண்டிருக்கும் போது அதன் கீழே இருளில் அவன் பயமின்றி ஆராய்ந்திருக்கிறானே?'

மணி குறிப்பிட்டபடி இரண்டாவது கூடத்தை அடைந்ததும் சேகர் தம்மிடமிருந்த நெருப்புக் குச்சியைக் கிழித்து ஒளி உண்டாக்கித் தரையை ஆராய்ந்தார். புழுதி படிந்த தரையிலே எதையோ இழுத்துச் சென்ற அடையாளம் தெரிந்தது. அது மணி சந்தித்துக் கட்டவிழ்த்துக் காப்பாற்றிய மனிதனை மூன்றாவது கூடத்திலிருந்து முதல் கூடத்துக்கு இழுத்துக் கொண்டு போன அடையாளமாக இருக்க வேண்டும். அல்லது அந்த மனிதனாக ஊர்ந்து சென்றதினால் புழுதி படிந்த தரையில் அப்படி அந்தக் கோடு ஏற்பட்டிருக்க வேண்டும்.

சேகர் மூன்றாவது கூடத்துக்கு விரைந்தார். நெருப்புக்குச்சியைக் கிழித்து நிதானமாகத் தரை எங்கும் ஆராய்ந்தார். மணி குறிப்பிட்ட செய்தி அங்குதான் எங்கோ இருக்கவேண்டும். தேடினார். பல நெருப்புக் குச்சிகள் தங்களைக் கரியாக்கிக் கொண்டது தான் மிச்சம். மணி சொன்னபடி தரையில் தகவல் எதுவும் அகப்படவில்லை. நம்பிக்கை இழந்து சேகர் திரும்பும் போது சட்டென்று ஒரு மூலையில் அவர் கவனம் சென்றது. பரபரப்புடன் அங்கு ஓடினார். புழுதி படிந்த தரையில் சின்னக் குழந்தை கிறுக்குவது போல் ஏதோ கோடுகள் காணப்பட்டன. இங்கும் அங்கும் பல கோணல்



களில் நின்று அந்தக் கோடுகள் ஏதாவது வாக்கியமாக உருவாகின்றனவா? என்று ஆராய்ந்தார் உழைப்பு வீண் போக வில்லை. அவர் முகத்தில் மகிழ்ச்சி பிறந்தது.

நிலவறைக்குள் மணி சந்தித்த அந்த மனிதர்தான் ஒரு செய்தியை அப்படிப் புழுதியில் எழுதி யிருந்தார் மணி அவர் கட்டுக்களை அவிழ்த்து விடுவதற்கு முன்பே அதை அவர் எழுதியிருக்க வேண்டும். ஏனென்றால் அது விரல்களால் எழுதியதாகத் தோன்ற வில்லை அப்படியானால்? சேகரின் புருவம் நெரிந்தது

கை கால்கள் கட்டப் பட்ட நிலையில் தனது மூக்கின் நுனியினால் புழுதி படிந்த தரையில் அவர் இத்தகைய குறிகளை உண்டாக்கி இருக்க வேண்டும் அதனால் தான் எழுத்துக்கள் இப்படி ஒழுங்கினமாகக் கோவையின்றி இருக்கின்றன என்ற முடிவுக்கு வந்த சேகர் தமது மூக்கின் நுனியைத் தடவிக் கொண்டார். பாவம்! மூக்கின் நுனியால் எழுத அவர் என்ன அவஸ்தைப் பட்டிருக்க வேண்டும்? எப்படியும் தம்மைத் தேடிச் சேகர் வருவார் என்று தான் அத்தனை சிரமப்பட்டு இந்தச் செய்தியை அவர் எழுதி யிருக்கிறார்.

சேகர் பரபரப்புடன் அந்தக் கோடுகளைக் கோவையாக்கி வார்த்தைகளாகப் புரிந்து கொள்ளுவதில் ஈடு படலானார். அது கோடுகளையும் புள்ளிகளையும் கொண்ட ஒரு சங்கேத பாஷையில் எழுதப் பட்டிருந்தது. அந்த சங்கேதம் சேகருக்குத் தெரியும். தரையில் எழுதப் பட்டிருந்தது இதுதான்:

"கோராவும் அவர்களில் ஒருவன்"

'கோரா' என்றால் யார் என்று புரியவில்லை சேகருக்கு. அதைப் பற்றி மூளையைக் குழப்பிக் கொள்ளவும் அவர் தயாராக இல்லை. அந்தச் செய்தியை நன்றாக மனனப்படுத்திக் கொண்டு நிலவறையை விட்டு வெளியேறத் தயாரானார்

சட்டென்று அவருக்கு ஒரு எண்ணம் தோன்றியது. 'சதிகாரர்கள் இந்த நிலவறையைத் தங்கள் ரகசியப் பதுங்குமிடமாக ஏற்படுத்திக் கொண்டிருக்கும் போது இங்கு இன்னும் ஏதாவது மர்மம் இருக்க வேண்டும். தங்கள் ரகசிய ஒளிவிடமான இதை அறிந்த யாரையும் அவர்கள் உயிரோடு விட்டு வைப்பதில்லை. மணி தற்செயலாக இதைப் பற்றி அறிய நேர்ந்த போது அவனைத் துப்பாக்கியாலும் கத்தியை வீசியும் கொல்லப்பார்த்தார்கள். அவன் சொல்லும் அந்த 'டைம்பாம்' உண்மையாக இருக்குமானால், இன்னும் பயங்கரமான முறையில் அவனை ஒழிக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்று தான் சொல்ல வேண்டும். பட்டுவுக்கு மயக்க மருந்து கொடுத்து நடு வீதியில் இரக்கமின்றிக் கிடத்திச் சென்றார்கள் ரங்கசாமியின் திறமையினால் அவர் மீது கார் ஏறாமல் பிழைத்தான் கிட்டுவின் கதி என்ன என்றே தெரியவில்லை. பின் தொடரும் என்னைக் காரோடு மோதி ஒழிக்க இரண்டு தடவைகள் முயன்றார்கள். இந்த நிலவறையைப் பற்றித் தெரிந்தவர்களை யாரையும் அவர்கள் உயிருடன் விட்டு வைப்பதில்லை ஆகவே இதில் இன்னும் ஏதோ விசேஷம் இருக்கிறது' என்ற முடிவுடன் நிலவறையினுள் மேலும் ஆராயலானார். சேகர்

பல வளைவுகளையும் திருப்பங்களையும் கூடங்களையும் சுற்றிப் பார்த்தும் எதிர் பார்த்தபடி எவ்விதமான புதுமையும் கிடைக்கவில்லை சேகருக்கு. வெகு நேரம் அங்கு சுற்றியதினால் புழுக்கம் தாங்காமல் வியர்வை வெள்ளமாக வழியலாயிற்று. அயர்வுடன் ஒரு சுவரில் சாய்ந்த சேகரின் முதுகில் ஏதோ ஒரு கைப்பிடி - இரும்புப் பெட்டிகளுக்கு இருப்பதுபோன்ற ஒருகைப் பிடி-குத்தியது. வியப்புடன் சேகர் அதைப் பிடித்து இழுத்தார். அசையவில்லை. திருகினார் நகர்ந்து கொடுத்தது. ஆனால் அதன் அருகே எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. முழுமூச்சுடன் திருகினார். எங்கோ சற்றுத் தூரத்தில் பெரிய பாறை நகருவது போன்ற ஒலியும் அதனால் பொற பொற வென்று மணல் உதிரும் சத்தமும் கேட்டன. சேகரின் இருதயம் வேகமாகத் துடிக்கலாயிற்று இந்தக் கைப்பிடியின் விசையினால் எங்கோ கதவு திறக்கிறது என்பதைச் சூட்சும அறிவுடைய அவரால் அறிந்து கொள்ள அதிக நேரமாகவில்லை. ஆனால் அந்தக் கதவு எங்கே என்று காண வேண்டுமே? அதற்கான வெளிச்சம் அந்தப் பாதாள அறையில் இல்லை. கைப்பிடியை விடவும் மனமில்லை. பையிலுள்ள தீப் பெட்டியை இடக்கையால் எடுத்து வாயில் கடித்துக் கொண்டு அதிலிருந்து குச்சியை எடுத்து ஒரு கையாலேயே கிழித்து ஒளி உண்டாக்கிப் பார்த்தார் வியப்பினால் அவர் விழிகள் விரிந்தன. எதிரிலுள்ள சுவரில் தரையோடு தரையாக ஒரு பெரிய பாறை இடம் பெயர்ந்து நகர்ந்திருந்தது. நிலவறைக்குள் மற்றொரு நிலவறையா? (தொடரும்)





# கையிலே மலர்ந்த ஒரு கலை




ரொம்பக் காலத்துக்கு முன்னுலே இந்தப் பூலோகத்திலே, பெயர் சொல்லக் கூடாத ஒரு தேசத்திலே, ஒரு பெண் இருந்தாள். ஒரு நாள் அவள் சமையல் செய்து கொண்டிருந்தாள். அப்போது அடுப்பு சரியாக எரியவில்லை. ஊதி ஊதிப் பார்த்தாள். தொண்டையும் கண்ணும்தான் வலித்தன. எரிச்சலுடன் ஊதுகுழலைக் கீழே போட்டு விட்டுப் போய் நாற்காலியில் உட்கார்ந்தாள்; யோசித்தாள். நீண்ட நேரம் சிந்தித்த பிறகு அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. அவளுடைய முகம் மலர்ந்தது. "அது தான் சரி!" என்று மகிழ்ச்சியுடன் சொல்லிக் கொண்டே எழுந்தாள். அன்று ஏதோ ஒரு வகையாய்ச் சமையலை முடித்தாள்.

அன்று மாலை தன் கணவன் வந்தபிறகு அவனிடம் தன் யோசனையைக் கூறினாள். அவன் அதைக் கேட்டு விட்டு, "நீ எப்படிச் சொல்லுகிறாயோ, அப்படியே செய்வோம்" என்றான். பாவம்! மனைவியிடம் இதைத் தவிர வேறு எதையுமே சொல்லியறியாதவன்!

மறுநாள் அவர்கள் வீட்டைக் காலி செய்து விட்டு ஒரு ஹோட்டலுக்குப் போனார்கள். பெயர் சொல்லக்கூடாத மற்றொரு தேசத்திலிருந்து வந்த ஓர் ஆசாமியால் வைக்கப்பட்ட ஹோட்டல் அது. அங்கு இருக்க இடம் கிடைத்தது. சாப்பிட, இயந்திரம் மூலம் செய்யப்பட்ட ருசியான உணவும் கிடைத்தது. எல்லாம் ரொம்ப ரொம்ப மலிவான செலவில். அவர்கள் திருப்தியாய்ச் சாப்பிட்டார்கள். நிம்மதியாக உறங்கினார்கள்; தொடர்ந்து இது நடந்தது. மாசக் கடைசியில் கணக்குப் பார்த்தார்கள். முன்பு ஆன செலவில் பாதிகூட இப்போது ஆகவில்லை; அவள் மிக்க மகிழ்ச்சியடைந்தாள்.

அவளைப் பார்த்து அவளுடைய தோழிகளும் அக்கம் பக்கத்தார்களும் அவளைப் பின்பற்றினார்கள். ஹோட்டல்கள் பெருகின. நாளடைவில் அந்த நாட்டில் உள்ளவர்கள் எல்லோருமே ஹோட்டல்களில் குடியேறி விட்டார்கள். பெண்கள் சமையலையே மறந்து விட்டார்கள். வேலையற்று இருந்த பெண்களுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை; நினைத்தபோதெல்லாம் சினிமாவுக்கும் நாடகத்துக்கும் போனார்கள். சிலர் தெருவுக்கு ஒரு மாதர் சங்கம் அமைத்தார்கள். வேறு சிலர் சமூக சேவை செய்யப் போவதாகப் பையைத் தூக்கிக் கொண்டு கிளம்பினார்கள். இதற்கெல்லாம் வசதியில்லாத சிலர், ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக் கொள்வதில் நேரத்தைப் போக்கினார்கள்.

ஆண்டுகள் பல கழிந்தன. ஒரு நாள் ஒருத்தி தலை வலிப்பதாய்க் கூறினாள். மற்றொருத்தி தன் கணவனுக்குக் கால் வலிப்பதாய்க் கூறினாள். நாளடைவில் அந்த நாட்டில் பலர் படுத்த படுக்கையானார்கள். அவர்கள் மருந்துப் புட்டிகளைக் கையில் பிடித்துக் கொண்டு ஆஸ்பத்திரிகளில் 'க்யூ'வில் நின்றார்கள். நாடு முழுவதுமே 'க்யூ' வரிசையில் நின்றது.

ஹோட்டல் முதலாளிகள் மாடிமேல் மாடியாய்க் கட்டிப் பணத்தைப் பெருக்கினார்கள்; அவர்கள் புதுப் புது முறைகளைக் கையாண்டு நாக்குக்கு ருசியாக உணவைத் தயாரித்து மக்களுக்கு அளித்தார்கள். நாட்டில் அவர்களுடைய செல்வாக்கு அதிகமாயிற்று. அதிகாரம் அவர்கள் கைக்கு மாறியது. ஒரு ஹோட்டல் முதலாளி ராஜாவானார். மற்றொருவர் பிரதம மந்திரியானார். போலீஸாரைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் ஹோட்டல்காரர்களாக இருந்தார்கள்.

காலம் வேகமாக ஓடியது. நோய் நொடிகளையும் அதனால் ஏற்படும் செலவுகளையும் சமாளிக்க முடியாமல் மக்கள் திண்டாடினார்கள். அரசாங்கம் எதிலுமே கவலை கொள்ளவில்லை. நாட்டிலே மகிழ்ச்சி, வளமை மறைந்தன. அப்போது அவர்களிடையே ஒரு மகான் தோன்றினார். அவர் கூறினார்: "எல்லாவற்றுக்கும் காரணம் நாம் சமையலை விட்டதுதான். ஹோட்டல்களுக்கு அடிமையாகக் கூடாது. வீட்டில் மகிழ்ச்சியும் மக்களிடையே உடல் நலமும் பெருக வேண்டுமானால் சமையலுக்குப் புத்துயிர் அளிக்க வேண்டும். சொந்தச் சமையலுக்கு ஈடு ஏது?" என்றார் அவர்.

சிலர் அதைக் கேட்டு விட்டு, "நீங்கள் சொல்லுவது சரிதான்; ஆனால் அதற்குச் செலவு அதிகமாகிறதே!" என்றார்கள்.

"அதைப் பார்த்தால் முடியுமா? உடல் நலத்துக்காகவும், நாட்டு நன்மைக்காகவும், குடும்ப நன்மைக்காகவும், மருந்துப் புட்டியை ஒழிப்பதற்காகவும் நாம் அற்பத் தியாகம் செய்துதானாக வேண்டும்" என்றார் மகான்.

இந்த யோசனையைச் சொல்லி விட்டு அவரும் ஹோட்டலுக்குப் போய்விடவில்லை; ஒரு வீடு பிடித்து, அங்கு குடிபுகுந்தார்; மறந்து போயிருந்த சமையல் கலையைப் பலர் மூலம் ஆராய்ந்து கற்றார். ஒரு அடுப்பு கட்டினார். மனைவி மக்களுடன் சமைத்து ஆனந்தமாய்ச் சாப்பிட்டார். இரண்டு பேர்களை அழைத்துஅவர்களுக்கும்சாப்பாடுபோட்டார்.

நாட்டில், 'சமையற்கலைப் புத்துயிர் இயக்கம்' தோன்றியது. பெண்மணிகளே கொடி பிடித்து, முன்னணியில் நின்று அந்த இயக்கத்தை நடத்தினார்கள்.

ஹோட்டல்கள் மூடப்பட்டன. வீடுகளிலிருந்து புகை கிளம்பியது. ஒவ்வொருவரும் சமைத்துச் சாப்பிட்டு விட்டு, நிலவிலே உட்கார்ந்து குழந்தை குட்டிகளுடனும் ஆனந்தமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

எல்லா மருந்துப் புட்டிகளும் பொருட்காட்சிச்சாலையில் ஒன்றாக மலைபோல் குவித்து வைக்கப்பட்டன. நாடு வளமடைந்தது.

ஹோட்டல் முதலாளிகளிடமிருந்து விடுதலை கிடைத்தது.

இந்தக் கதை எங்கேயோ நடந்ததாக நினைத்துவிட வேண்டாம். நம் நாட்டில்தான் நிகழ்ந்தது. ஆனால் ஒரு சின்ன வேற்றுமை. சமையலை மறந்து போகக் கூடிய அவ்வளவு மோசமான நிலைமைக்கு நாம் வரவில்லை. ஆனால் அதைவிட முக்கியமான மற்றொரு கலையாகிய நூல்நூற்பை, நெசவை நாம் மறந்தோம். அதன் மூலம் பொருளாதாரத் துறையிலும் நாம் அன்னிய நாட்டுக்கு அடிமையானோம். காந்தி வந்தார். நம் கண்களைத் திறந்தார். ராட்டினத்தைத் தேடிப்பிடித்து அதற்குப் புத்துயிர் கொடுத்தார். அதன் மூலம் இந்தியக் கைத்தொழில்கள் எல்லாவற்றுக்குமே அவர் புத்துயிர் கொடுத்தார். நாட்டுக்கும் புது வாழ்வு அளித்தார்.

"ராட்டினம் என்பது சூரியனைப் போல; அதைச் சுற்றியே மற்றக் கைத்தொழில்கள் இயங்குகின்றன" என்றார் அவர்.

இப்படி, தொழில்களுக்குள்ளே ராட்டினத்துக்கு அதிக மதிப்பும் உயர்வும் கொடுத்ததுமல்லாமல், அதிலிருந்து கிடைக்கும் பொருளாகிய கதரை ஓர் அரிய கலைப்பொருளாகவும் அவர் கருதிப் போற்றினார்.

"கதரிலே என்ன கலை இருக்க முடியும்?" என்று பலர் நினைக்கலாம்.

ஒரு ரோஜா மலரைப் பார்க்கிறோம். அது எவ்வளவோ அழகாய் இருக்கிறது; வாசனையாய் இருக்கிறது. ஆனால், விரலால் ஓர் இதழைக் கொஞ்சம் அழுத்திப் பிடியுங்கள். இதழ் கசங்கிப் போகும்; உதிர்ந்து விடும். மாலையானதும் வாடிப் போகும். ஆனால் காகிதப் பூ? இயந்திரம் மூலம் ஜப்பானில் செய்யப்பட்ட காகிதப் பூ? அதைத் தைரியமாகக் கையாளலாம். வாடவே வாடாது; கசங்காது. பார்க்கவும் நன்றாகத்தான் இருக்கிறது. அப்படியிருந்தும் அதை யாரும் விரும்பவில்லையே! செடியிலே பூத்த ரோஜா மலரைத்தானே நாம் விரும்புகிறோம்.

இதற்குக் காரணம் என்ன?

காகிதப் பூவில் உயிர் இல்லை.

உயிர்க் களை ததும்புவதுதான் கலையாக ஆக முடியும்.

ரோஜா மலரைப் போன்றதுதான் கதர்.

காகிதப் பூங்கொத்தைப் போன்றதுதான் ஆலைத் துணி.

ஆலைத் துணியிலே உயிர் இல்லை, படைப்புத் திறன் இல்லை, இன்பம் இல்லை.

இதோ இந்தக் கதர்ச் சட்டையையும் வேட்டியையும், துவைத்துவிட்டு இப்போதுதான் போட்டுக் கொண்டேன். என் மனத்துக்குச் சொல்ல முடியாத ஒருவகை இன்பம் ஏற்படுகிறது. யாரோ அன்புடன் என்னைத் தொட்டுத் தடவிக் கொடுப்பது போல இருக்கிறது.

மனிதனுடைய கை அதிலே பட்டிருக்கிறது. ஒவ்வொரு நூல் இழையையும் அவன் தொட்டிருக்கிறான். அவனுடைய கண்ணீர் அதிலே விழுந்திருக்கிறது; அவனுடைய சிரிப்பின் ஒலி அதிலே கேட்கிறது. ஆம்! கதரில் உயிர் இருக்கிறது என்பதில் சந்தேகம் என்ன?

எந்த மனிதனுடைய கைகள் மாமல்லபுரத்துச் சிற்பங்களையும் அஜந்தா ஓவியங்களையும் படைத்தனவோ, அதே மனித குலத்தின் கைகள்தான் இதையும் இன்று செய்கிறது. செடியிலே விளைந்த ஒரு சாதாரணப் பொருளை மனிதனுடைய கை, ஓர் உயர்ந்த கலைப் பொருளாகச் செய்கிறது. மனிதக் கையிலே பிறந்த மலர் கதர்.

இயந்திரப் படைப்பிலே இந்தக் கலையம்சத்தை நாம் காண முடியாது. உயிரற்ற வறட்சிமிக்க, வெறுப்பையூட்டும் படைப்பு! ஆனால், எண்ணிக்கை மாத்திரம் அதிகம்.

ஆயிரம் வேட்டியா? பதினாயிரம் புடவையா? ஒரு கோடி மேல்வேட்டியா? இரவும் பகலுமாக ஓடி, ஆடி, அலறிக் குவித்துவிடும். மூளை கிடையாது. தனக்கு மூளை இல்லாததைப் போல மனிதனுக்கு உள்ள மூளையையும் இல்லாததாய்ச் செய்ய முயல்கிறது. நாம் ஏமாந்துவிடக் கூடாது. கதருக்கு ஆதரவு கொடுப்பதன் மூலம் ஆயிரக்கணக்கான மக்களுக்கு வாழ்வு அளிக்கிறோம் என்பதுடன், ஓர் அற்புதமான கலையையும் பாதுகாக்கிறோம் என்பதையும் உணர வேண்டும்.

இது சம்பந்தமாகக் காந்தி முன்பு ஒருமுறை கூறியது நினைவுக்கு வருகிறது. அப்போது அவர் தமிழ்நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்து வந்தார். ஓர் அன்பர் அவரிடம் சென்று, "கதரின் விலை அதிகமாக இருக்கிறதே. அது ஆலைத் துணியுடன் போட்டியிட முடியுமா?" என்று கேட்டார்.

உடனே காந்தி, "ஏழை மக்கள்மீது கொண்ட அன்பிலிருந்து பிறந்தது கதர். லட்சக்கணக்கான மக்கள் காலந்தள்ளுவதற்கு அது உதவியாக இருக்கிறது. அது போட்டியிட்டுப் பிழைக்க முடியாது. மக்களின் அன்பு மூலமே அது வளர முடியும்" என்றார்.

"அன்பும் பக்தியும் கொஞ்ச காலம்வரை இருக்கலாம். ரொம்பக் காலம் வரை இருக்குமா? பக்தியின் மூலம் மாத்திரம் ஒன்று உயிர் பிழைக்க முடியுமா?" என்று மற்றோர் அறிஞர் கேட்டார்.

காந்திஜி இதற்கு அளித்த பதில் அற்புதமானது. அவர் கூறியதாவது: "ஏன் முடியாது? இந்தத் தென்னிந்தியாவைப் பாருங்கள்! எத்தனை மாபெரும் கோவில்களை நீங்கள் கட்டியிருக்கிறீர்கள்! ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டவை அவை. அப்படியிருந்தும் இன்னும் உறுதியாக இருக்கின்றன. இதன் மூலம் மக்களுக்குப் பணம், காசு ஏதாவது கிடைக்கிறதா? இல்லை. அப்படியிருந்தும் அவை இன்னும் ஏராளமான செலவில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. ஏன்? இதற்குக் காரணம் என்ன? மக்களின் நெஞ்சிலே உள்ள பக்திதான். அப்படியிருக்கும்போது பக்தியின் மூலம் மாத்திரம் பொருள்களை நீண்ட காலம் காப்பாற்ற முடியாதென்று ஏன் சொல்லுகிறீர்கள்?"

காந்திஜி நம்மிடமிருந்து எதிர்பார்த்த அந்த பக்தியைச் செலுத்தி, அன்னை நல்கி, இந்த உயர்ந்த கலையைக் காப்போம்.

வரும் தீபாவளித் திருநாளன்று கதரையே வாங்குவோம் என்று விரதம் எடுப்போம்.

# பொங்கிவரும் பெருநிலவு



# பொங்கிவரும் பெருநிலவு

## பூர்வ கதை

ராஜன் நர்ஸிங்ஹோமை நடத்தி வந்த டாக்டர் ராமலிங்கம் தன் மகன் டாக்டர் நடராஜனை எப்.ஆர்.ஸி.எஸ். பட்டம் பெற லண்டனுக்கு அனுப்புகிறார். தன் அத்தை மகள் விமலாவுடைய கண்களிலே தேங்கி நின்ற இரண்டு கண்ணீர்த் துளிகளைப் பரிவுடன் துடைக்கிறான் நடராஜன். விமானத்தில் ஏறிக் கொண்டுலண்டனுக்குப்பயணமாகிறான்.

டாக்டர் ராமலிங்கத்தினிடம் விமலாவுக்குத் திருமணம் செய்து வைத்துக் காப்பாற்ற வேண்டும் என்று வாக்குறுதி பெற்றுக் கொண்டு விமலாவின் தகப்பனார் நிம்மதியாகக் கண்ணை மூடுகிறார்.

* * *

மணிசேகரன் என்ற அனாதைச் சிறுவனை டாக்டர் ராமலிங்கம் வளர்த்து வந்தார். பதினைந்து வயதில் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறிய அவன் பத்து வருஷங்களுக்குப் பிறகு திரும்பி வந்து விமலாவைக் கண்டு காதல் கொள்கிறான்.

அவளுக்கும் நடராஜனுக்கும் திருமணம் நிச்சயமாகிப் போன விஷயம் என்று அறிந்ததும் தன் காதலைத் துறந்து அவள் நல்வாழ்வுக்குப் பாடுபடுவதாக உறுதி கொள்கிறான். டைரக்டர் குமாரனிடம் மணிசேகரன் வேலைக்கு அமருகிறான்.

லண்டனிலிருந்து திரும்பிய பிறகு விமலாவையும் மணியையும் பற்றிச் சந்தேகப்படுகிறான் நடராஜன். விமலாவைத் துன்புறுத்திக் கீழே தள்ளுகிறான். அதைக் கவனித்த மணி 'சந்தோஷ சாகரத்தில் இன்பத் தோணியில் உன்னை ஏற்றிச் செல்கிறேன். இந்த நீசனுடன் உனக்கு வாழ்வு வேண்டாம்' என்கிறான். அவன் சொல்வதையெல்லாம் கேட்க விரும்பாமல் காதைப் பொத்திக் கொண்டு, 'என் நல்வாழ்வுக்குப் பாடுபடுவதாக நீங்கள் மார்தட்டியபடி நடந்துகொள்ளுங்கள்' என்கிறாள் விமலா.

* * *

லண்டனில் இருந்தபோது ராஜன் நர்ஸிங்ஹோமுக்குப் புதிதாக வந்திருந்த நர்ஸ் நிர்மலாவைக் கண்டதும் தேவலோகத்துச் சிற்பி செதுக்கிய சிலை உயிர் பெற்று வந்ததாகக் கருதுகிறான் டாக்டர் நடராஜன். 'உன்னுடைய விழிச் சுழலில் சிக்கித் தவிக்கிறேன்' என்கிறான். தான் ஒரு விதவை என்பதைச் சொல்லி அவனுடைய மனத்தைத் தெளிவுபடுத்துகிறாள் நிர்மலா.

திருமண நாள் நிச்சயமாகி ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. அந்தச் சூழ்நிலையில் மணிக்கும் நடராஜனுக்கும் ஏற்பட்ட சச்சரவில் குறுக்கே புகுந்த டாக்டர் ராமலிங்கத்தைக் கோபத்தில் தள்ளி விடுகிறான் நடராஜன். ஏற்கனவே இருதய நோயினால் பாதிக்கப்பட்டிருந்த ராமலிங்கம் கீழே விழுந்து இறந்து போகிறார். கல்யாணம் நின்று போய் விடுகிறது.

* * *

செண்பகபுரம் கிராமத்தில் மல்லிகாவுடைய தகப்பன் கண்ணப்பன் மனைவியிடம் சண்டை போட்டுக் கொண்டு போய் விடுகிறான். தனது நண்பன் பெரியண்ணனுடைய ஆசைநாயகியிடம் அவன் குடி போதையில் தகாத முறையில் நடந்து கொண்டதாயும், அதனால் கோபமடைந்து பெரியண்ணன் அவனைக் கொன்று விட்டான் என்றும் ஊரில் பேசிக் கொண்டார்கள். இன்னும் பலரும் பலவிதமாகச் சொன்னார்கள்.



## கி.ராஜேந்திரன்

தகப்பனைப் பிரிந்த மல்லிகா ஏழு வருஷங்கள் துன்ப மயமான வாழ்க்கை நடத்திய பிறகு திரைப் படப் பிடிப்புக்காக அந்தக் கிராமத்துக்கு வந்த காமிரா மேன் சேகரிடம் காதல் கொள்கிறாள். அவள் வீட்டிலே பெரியண்ணனும் கண்ணப்பனும் சேர்ந்து எடுத்துக்கொண்ட புகைப் படத்தைப் பார்த்து விட்டுப் பத்திரமாக எடுத்து வைத்துக் கொள்கிறான் சேகர்.

இவர்களுடைய காதல் நாடகத்தைக் கிராம மக்கள் ரசிக்கவில்லை. சேகருக்கு எதிராகத் திரண்டு எழுகிறார்கள். பெற்றோரின் சம்மதம் பெற்றுத் திரும்பி வருவதாகச் சொல்லிப் போய் விடுகிறான் சேகர். அவனிடமிருந்து எந்தவிதமான தகவலும் இல்லாமல் போகவே, மல்லிகா தன் தங்கையுடன் சென்னைக்கு வருகிறாள்.

நாதன் நாட்டிய நாடக நிலையத்தில் அவளைச் சேர்த்து விட்டுத் திருமணப் பேச்சைத் தட்டிக் கழிக்கிறான் சேகர். நிலையத்தின் அதிபர் நாதன் மூலமாகச் சேகருக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்று அறிந்து திடுக்கிடுகிறாள் மல்லிகா.

அவள் நடித்த நாடகத்தைக் காண வந்த மணிசேகரன் அவளை டைரக்டர் சுகுமாரனிடம் புகழ்ந்து கூறிப் புகைப் படத்தையும் காட்டுகிறான். உடனே அவளைக் காணத் துடிக்கிறார் சுகுமாரன்.

சுகுமாரனுக்கும் தனக்கும் இடையே ஒரு பிணைப்பு இருப்பதை உணர்கிறாள் மல்லிகா. தன் தந்தையாகவே பாவித்து வருகிறாள். அவள் நடித்த முதல் படம் அமோகமான வெற்றியடைகிறது.

மாமல்லபுரத்திலிருந்து கதிர்வேலு என்பவனை மல்லிகாவும் சுகுமாரனும் அழைத்து வருகிறார்கள். சுகுமாரனிடம் தனிமையில் இருக்கும்போது தான் கடைசியாக ஈடுபட்டிருந்த கள்ளக் கடத்தல் வியாபாரத்தில் ஏமாந்ததாகச் சொல்கிறான் கதிர்வேலன்.

'கவலைப்படாதே. இலங்கையில் தமிழ்ப் படத்தை வெளியிடும் நோக்கத்தோடு போய் விலையுயர்ந்த வைரக் கற்களைக் கொண்டு வரலாம்' என்கிறார் சுகுமாரன்.

மல்லிகாவுக்குத் திடீரென்று உடம்பு சரியில்லை. டாக்டர் நடராஜனைக் கூப்பிடுகிறார் சுகுமாரன். நடராஜனும் நர்ஸ் நிர்மலாவும் விரைகிறார்கள். நடராஜன் மல்லிகாவின் மலர் முகத்தையும் கதிர்வேலு நிர்மலாவின் மதிமுகத்தையும் கண்டு காதல் கொள்கிறார்கள்.

கதிர்வேலனைப் போலீஸார் தேடிக் கொண்டு வருகிறார்கள். அப்போது அவனைக் காணாமல் நிர்மலா திகைக்கிறாள். 'பகவானே! அவரைக் காப்பாற்று' என்று பிரார்த்திக்கிறாள்.

நிர்மலாவைக் காண நள்ளிரவில் நர்ஸிங்ஹோமுக்கு வருகிறான் கதிர்வேலன். சுகுமாரன் மல்லிகா இருவர் வீட்டைச் சுற்றிலும் போலீஸ் நடமாட்டம் இருப்பதால், சுகுமாரனுக்கான செய்திகளை நிர்மலாவிடம் சொல்கிறான். 'கள்ளனைப் போல் இரவில் வந்து ஒன்றையும் கவராமல் செல்கிறீர்களே?' என்று கேட்டுச் சிரிக்கிறாள் நிர்மலா. 'உன்னுடைய உள்ளத்தைக் கூடவா நான் கவரவில்லை?' என்று கேட்கிறான் கதிர்வேலன்.



'தான் விதவை' என்பதை அறிந்து அவர் மனம் மாறினால்?' என்ற எண்ணம் நிர்மலாவை நடுங்கச் செய்கிறது.

**ம**ல்லிகாவைக் கண்டது முதல் நடராஜன் விமலாவிடம் பேசுவது கூட இல்லை. கல்யாணத்துக்கு மறுபடியும் நாள் பார்க்கிறாள் அவன் தாயார், பொன்னம்மாள். வருங்கால மருமகளுக்கு அலங்கரித்து மகிழ்கிறாள்.

இப்போதைக்கு நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை என்கிறான் நடராஜன். அணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றுகிறாள் விமலா.

மல்லிகாவுக்கும், மணிக்கும், தனக்கும் இலங்கை போக பாஸ்போர்ட்டுகள் வாங்கும்படி சொல்கிறார் சுகுமாரன். 'ஸ்டுடியோ தொழிலாளர்கள் குமுறுகிறார்கள். நான் உங்களுடன் வந்தால் அனர்த்தம் விளையும்' என்கிறான் மணி. பின்னர் அவர் கோபத்துக்குப் பயந்து ஒப்புக் கொள்கிறான். பாஸ்போர்ட்டுகள் கையில் வந்ததும், 'இங்கேயே இருந்து கலாட்டா ஒன்றுமில்லாமல் பார்த்துக் கொள்' என்கிறார் சுகுமாரன். மணி ஒன்றும் புரியாமல் திரும்புகிறான்.

அவன் பாஸ்போர்ட்டைச் சாமர்த்தியமாக மாற்றி அமைத்து மணிசேகரன் என்ற பெயரில் கதிர்வேலு பிரயாணம் செய்ய ஏற்பாடு செய்கிறார் சுகுமாரன்.

இலங்கை போவதற்கு முன்னால் உங்களைப் பார்க்க விரும்புகிறேன் என்று டெலிபோனில் மல்லிகா சொன்னதும் பார்க்கப் போகிறான் நடராஜன். அவள் ஆடிக் கொண்டிருக்கிறாள். விம்மச் செய்த பெருமூச்சுகளுக்கிடையே விமலா அங்கு வந்து நடராஜனை விட்டுக் கொடுக்குமாறு கெஞ்சியதாகச் சொல்கிறாள்.

அதை அவமானமாகக் கருதிய நடராஜன் கோபமடைந்து விமலாவை இந்தக் காரியத்தில் தூண்டிவிட்டதாக மணியை ஏசுகிறான். 'மனித உடல்களை அறுத்து அறுத்து உன் உள்ளம் இரும்பாகி விட்டது. உனக்காக முன்பின் தெரியாத ஒருத்தியின் காலில் விழுந்து கெஞ்சும்படி செய்து விட்டாயே!' என்று திருப்பித் தாக்குகிறான் மணி.

வெட்கப்பட்டுத் திரும்பிய நடராஜனிடம் 'நான் கெஞ்சவில்லை, காலில் விழவும் இல்லை. என் வருங்காலக் கணவனை அவ்வளவு கேவலமாக மதிக்கவில்லை. மல்லிகாவை அவ்வளவு உயர்வாகவும் எண்ணவில்லை' என்கிறாள் விமலா. காதலர்களுடைய சிரிப்பிலே கோபதாபங்கள் மறைந்து போகின்றன.

**கொ**ழும்பு விமான நிலையத்தில் கூட்டத்தோடு கூட்டமாக, சுகுமாரன் கள்ளத்தனமாகக் கொண்டுவந்த ரூபாய் நோட்டுகள் கைமாறுகின்றன. அந்த லட்ச ரூபாய்க்கும் வைரங்களைக் கேட்டபோது குணநாயகா, 'நீ கொடுத்த பெட்டியில் பணம் இல்லை. பணத்தை எடு' என்கிறான். சண்டை நடக்கிறது. அடி வாங்கிக் கொண்டு வைரங்களைக் கொடுக்கிறான் குணநாயகா. திரைப்படத்துக்கு அமோகமான வரவேற்பு கிடைக்கிறது இலங்கையில்.

சந்தோஷமாகத் திரும்பிய அவர்கள் ஊட்டிக்குப் போய் மல்லிகாவுக்கு ஓய்வு கொடுக்க நினைக்கிறார்கள். அதற்கு முன்னால் நிர்மலாவைக் கண்டு விடைபெற்றுக் கொள்வதற்கு வந்த கதிர்வேலன், போலீஸாரிடமிருந்து தப்பி ஓட வேண்டியிருக்கிறது.

உதகமண்டலத்தில் உல்லாசத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கிறான் சேகர். மல்லிகா செண்பகபுரத்தில் அடைந்த அவதூறுக்கு அவள் சேகருக்கு எழுதிய கடிதங்கள் சாட்சி கூறின. அங்கு நடந்த கொலை போலீஸாரின் முற்றுப் பெறாத வழக்குகளில் ஒன்றாக இருந்து வந்தது. கண்ணப்பனும் பெரியண்ணனும் சேர்ந்து எடுத்துக் கொண்ட புகைப்படமும் இருந்தது. இவற்றை வைத்துக் கொண்டு பணம் கேட்கிறான்.

மல்லிகா காதலை வெளிப்படுத்துகிறாள். சேகர் அதில் பசியவில்லை. 'நடிப்பு' என்று ஏசுகிறான். கள்ளக்கடத்தல் வியாபாரத்திலும் சூதாட்டங்களிலும் தான் முன்னுக்கு வந்ததை மனம் விட்டுச் சொல்கிறார் சுகுமாரன். 'சேகர் மீண்டும் மீண்டும் பணம் கேட்டுக் கொண்டே இருப்பான், அவனைக் கொன்றுவிடு' என்கிறார், கதிர்வேலனைப் பார்த்து. 'ஒருநாளும் மாட்டேன்' என்கிறான் கதிர்வேலன். வேறு யோசனை தோன்றுகிறது. புகைப்படத்தையும் கடிதங்களையும் திருடி வரச் சென்னைக்குப் புறப்படுகிறான் கதிர்வேலு.

காரியத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு ஊட்டியில் இருந்த சுகுமாரனுக்கு போன் செய்யச் சென்னையில் அவர் வீட்டுக்குப் போகிறான். பழி வாங்க அவனுக்காகக் காத்திருந்த குணநாயகா காரைக் கிளப்பிக் கொண்டு அவன்மீது பாய்கிறான்.

விபத்தில் உயிர் பிழைத்தபோதிலும் கரங்களை இழந்து அவதிப்படுகிறான், கதிர்வேலன். நிர்மலாவும் தானும் சேர்ந்து எப்படி வாழ்க்கை நடத்துவது என்று எண்ணிப் பார்த்தபோது அவன் வேதனை அதிகமாகிறது. அந்த வேதனையில் கண்டபடி ஏசிக் கத்திக்கொண்டிருக்கிறான் எல்லோரையும்.

தான் விதவை என்பதை அறிந்ததால் தான் கதிர்வேலன் இப்படிமனமுடைந்து போனார் என்று நிர்மலா எண்ணுகிறாள்.

நடராஜன் அவர்கள் இருவரையும் சமாதானப்படுத்தி அவர்கள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்கிறான்.

திருநீர்மலையில் திருமணம் நடக்கிறது. கீழே இறங்கியதும் போலீஸார் கதிர் வேலனைப் பிடித்துச் செல்கிறார்கள். 'சீக்கிரம் திரும்பிவிடுவேன். கவலைப்படாதே' என்று நிர்மலாவுக்கு ஆறுதல் கூறிப் பிரிகிறான் கதிர்வேலன்.

## முதல் அத்தியாயம்

# அணையாத சுடர்

முன்னிருட்டுக் காலம். ஆறரை மணிக்குமேல் விளக்குப் போட்டாலொழிய ஒரே கும்மிருட்டு. உடலைச் சற்றுத் தளர விட்டால் வெட வெடக்கச் செய்யும் குளிர்.

விமலா சமையலை முடித்து விட்டு, அடுப்புத் தணலை விட்டு வைத்து ஜுவாலையை மட்டும் அணைத்தாள். தணலின் கணகணப்பில் அத்தான் வரும் போது எல்லாமே சூடாக இருக்கும்.

ஒரு அவசரக் கேஸைக் கவனிக்க வெளியே சென்றிருந்தான் நடராஜன். வாசல் கதவைத் திறந்து கொண்டு அத்தான் வருகிறாரா என்று எட்டிப் பார்த்தாள் விமலா. அடுப்பின் அடியில் இருந்துவிட்டு வந்தவளுக்குக் குளிர் அதிகமாகத் தெரிந்தது. சுற்றிலும் ஒரு பனிப் படலம் கவிந்திருந்தது.

புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக்கொண்டு வெளியே வந்தாள்.

வானத்துக்குக் குங்குமத் திலகம் இட்டது போல் நிலா உதயமாகிக் கொண்டிருந்தது. விமலா பார்த்துக் கொண்டே இருக்கையில் சந்திரன் பருத்துக் கொண்டே போனான்.

தன்னுடைய கடந்தகால வாழ்க்கை நிகழ்ச்சிகளெல்லாம் வட்ட வடிவ சந்திரனில் நிலவைக் குழைத்து ஓவியமாகத் தீட்டியிருப்பதாகத் தோன்றியது அவளுக்கு.

தன் பின்னலைப் பிடித்துக் கொண்டு அத்தான் குதிரை ஓட்டியது முதல், லண்டனுக்குப் போகும்போது அவன் மடியில் மயங்கி விட்டதாகப் பாசாங்கு செய்து இன்பம் துய்த்தது வரையில் ஒவ்வொரு காட்சியாக முழு மதியத்தில் கண்டாள். அதற்குப் பிறகு லண்டனிலிருந்து அத்தான் எழுதிய கடிதங்கள், அவற்றுள் ஒரு வரி விடாமல் தான் மனப்பாடம் செய்திருந்த ஒரு கடிதம் அங்கே தோன்றியது.

அழகுத் தெய்வத்தின் அவதாரமாகிய என் அருமை விமலாவைக் கனவிலே காண்கிறேன்... 'பொங்கிவரும் பெரு நிலவு போன்ற ஒளி முகமும்' என்ற வரியைப் படிக்கும்போது உன் முகம்தான் அப்படியே என் கண் முன்னால் வந்து நிற்கிறது.....நான் மறுபடியும் உன்னை நேரில் சந்திக்கும்போது இந்தப் பாடலை நல்ல மெட்டில் அமைத்து எனக்குப் பாடிக் காட்ட வேண்டும்...

அத்தான் எழுதிய கடிதத்தின் ஒரு சில வரிகள் இவை. இப்படி எழுதியதையெல்லாம் அவர் மறந்து விட்டாரா? என்னைக் கேட்கவே இல்லையே? கேட்டால்தானே பாடலாம்?

தன்னை அறியாமலே தன் வாய் அந்தப் பாடலை முணுமுணுப்பதை உணர்ந்தாள் விமலா. ஆனால் இது என்ன விநோதம்? அத்தானுக்குப் பாடிக் காட்டுவதற்காகத் தான் அமைத்த குதூகலமான மெட்டில் பாடவில்லை. ஏதோ ஆழங்காண முடியாத ஒரு துன்ப ரேகை அந்தப் பாட்டிலே இழைந்து ஓடியது. கண்களில் கண்ணீரைக் கறக்க வைக்கும் ஒரு தீனக் குரலிலே அந்தப் பாடல் வெளிப்பட்டது.

நடராஜன் வீட்டை நெருங்கியதும் மோட்டாரை நிறுத்தி விட்டான். விளக்குகளை அணைத்து விட்டான். ஓசைப் படாமல் வந்த வேகத்திலேயே கார் நகர்ந்து ஷெட்டுக்குள் புகுந்து நின்றது.

வாசல்புறம் வந்த அவனைப் பாரதியின் பாடலும் விமலாவின் சோகக் குரலும் வரவேற்றன.

மங்கியதோர் நிலவினிலே
கனவிலிது கண்டேன்
வயது பதினாறிருக்கும்
இளவயது மங்கை
பொங்கி வரும் பெரு நிலவு
போன்ற வொளி முகமும்
புன்னகையின் புது நிலவும்
போற்றவரும் தோற்றம்
துங்கமணி மின் போலும்
வடிவத்தாள் வந்து
தூங்காதே எழுந்தென்னைப்
பாரென்று சொன்னாள்
அங்கதனிற் கண் விழித்தேன்
அடடாவோ! அடடா!
அழகென்னுந் தெய்வந்தான்
அதுவென்றே யுணர்ந்தேன்.

அந்த வரலேற்பை ஏற்றுக் கொள்ளத் துணிவில்லாமல் தூரத்திலேயே நின்றான் நடராஜன்.'

'அத்தானுக்காக அரும் பாடு பட்டுத் தான் அமைத்த குதூகலமான பாணியில் ஏன் பாட வரவில்லை எனக்கு? ஏன் இப்படித் துக்கம் தொண்டையை அடைக்கப் பாடுகிறேன்?'

'அடடாவோ! அடடா!' என்று அவள் பாடியபோது அதில் ஆச்சரியத்தைக் காண முடியவில்லை. நடராஜனால் அந்த இடத்தைக் காது கொடுத்துக் கேட்க முடிய



வில்லை. இரு வார்த்தைகளும் அவனுடைய இருதயத்தைச் சுற்றிக் கொண்டு கசக்கி உதிரத்தைப் பிழிந்தெடுத்தன.

'பாடலிலிருப்பது போலவே எல்லாம் கனவாக முடிந்து விடுமா? அத்தான் என்னைக் கண்டு காதல் கொண்டது கனவில் மட்டுந்தானா? நிஜ வாழ்க்கையில் விமலா தன்னந்தனியாளாக யாருமற்ற அனாதையாகக் காலத்தைக் கடத்த வேண்டியதுதானா?'

பாட்டு முடியும்தருவாயில் விமலாவை நெருங்கி நெருங்கி வந்தான் நடராஜன். அவன் மிக அருகில் வந்த பிறகுதான் பாடலில் ஊன்றிப் போயிருந்த அவள் தன் அருகில் யாரோ வந்து நிற்பதை உணர்ந்து கொண்டாள்.

திரும்பிப் பார்க்க யத்தனித்த அவளை "அசையாதே!" என்று கடுமையான உத்தரவு போட்டான் நடராஜன்.

ஒன்றும் புரியாமலும் செய்வதறியாமலும் அப்படியே நின்றாள் விமலா.

"நகர்ந்துவிடாதே விமலா! அப்படியே இரு" என்றான் நடராஜன்.

மெல்ல நடந்து அவள் முன்னால் வந்து நின்றான். நிலவொளியிலே அவளுடைய சந்தண நிறமுள்ள முகம் பாலின் வெண்மையாக மாறியிருந்தது. அவளுடைய அகன்ற கண்கள் மேலும் பெரிதாகத் தோற்றமளித்தன. விழிகளில் நிலவுக்கிரணம் ஒன்று நர்த்தனமாடியது. அதரங்கள் கருமையாகத் தோன்றின.

நெற்றியில் விழுந்து புரண்டு களங்கப்படுத்திய ஒரு கூந்தல் சுருளை அவனுடைய ஒரு விரல் விலக்கித் தள்ளியது.

கரும் பட்டுப் போன்ற அவளுடைய கூந்தலில் பட்டுப் பளபளத்த நிலவு அவனை மந்திரத்தில் கட்டுண்டவனாக நிற்கச் செய்தது.

"விமலா! நீ இருக்கும் இடத்தை விட்டுக் கொஞ்சங்கூட நகராதே! நிலவொளியில் நீ நிற்கிறாய். அற்புதமாகத்



தோற்றம் அளிக்கிறாய்'' என்றான் நடராஜன்.

பலப்பல நாட்களுக்குப் பிறகு இவ்வார்த்தைகளைக் கேட்டதும் தன் அழகைப் புகழ்ந்து பேசிக்கொண்டேயிருக்கமாட்டாரா என்று ஏங்கியது' அவள் உள்ளம்.

அத்தான் அனுபவித்து ஆனந்தப்பட்டுக் கூறும் வார்த்தைகளுக்குத் தக்கவாறு பதில் சொல்லத் தெரியாமல் விழித்தாள் விமலா.

''அத்தான்! சிறிது தூரம் நடந்துவிட்டு வரலாமா?'' என்று கேட்டாள். கேட்டவுடனேயே உதட்டைக் கடித்துக் கொண்டாள். 'அடி அசடே! அன்பாக இரண்டு வார்த்தைகள்



# கதர் வார விழா



1. கடம்பத்தூர் வட்டாரம் செங்கற்பட்டு ஜில்லா இரண்டாவது ஐந்தாண்டு திட்ட வார விழாவின் போது தலைமை தாங்கிய அமைச்சர் பக்தவத்சலம் நடவும் போட்டியில் வெற்றிபெற்ற கிராமத் தாய்மார்களுக்கும் உழவுப் போட்டியில் வெற்றிபெற்ற விவசாயிகளுக்கும் பரிசுகள் வழங்கிப் பாராட்டினார். 2. கதர் வார விழா கொண்டாட்டம் கடம்பத்தூர் வட்டாரத்தில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. 3. கடம்பத்தூர் வட்டாரத்தில் இரண்டாவது ஐந்தாண்டு திட்ட வார விழாவுக்குக் கொடியேற்றப்படுகிறது. திருவள்ளூர் ஸ்ரீ ஏகாம்பர முதலியார் எம். எல். ஏ. அவர்கள் தேசியக் கொடியை ஏற்றிப் பறக்க விடுகிறார்.

---

அவர் பேசினால் பதில் சொல்லத் தெரியாமல் உலாவ அழைக்கிறாயே? அவர் இன்னும் சாப்பிடக்கூட இல்லை! இப்படி மடத்தனமாக நடந்து கொண்டால் காதல் எப்படி வளரும்? வெறுப்புத்தான் வளரும்.'

"ஒரே குளிராக இருக்கிறதே, விமலா! பரவாயில்லையா?"

"பனியிலும் குளிரிலும் நடக்க எனக்கு ரொம்பப் பிடிக்கும், அத்தான்!" என்றாள் விமலா. கூடவே, 'பயித்தியமே! அத்தான் நாசூக்காகச் சொன்னதைப் புரிந்து கொண்டு உள்ளே போகாமல் மறுபடியும் உளறுகிறாயே?' என்று தன்னைத் தானே நொந்து கொண்டாள்.

"ஆமாம், கூடவே தலைவலியும் சுரமும் வந்தாலும் ரொம்பப் பிடிக்கும். இல்லையா? அத்தான் டாக்டர்தானே என்ற தைரியம்! வா, போகலாம்" என்று சிரித்தபடியே அழைத்தான் நடராஜன்.

தோட்டத்தைத் தாண்டிச் சாலையோடு நடந்துசென்றார்கள்.

"அக்காளைச் சமீபத்தில் பார்த்து விட்டு வந்தீர்களா, அத்தான்?" என்று ஆவலுடன் கேட்டாள் விமலா.

"அக்காளா? 'அது யார் அது அக்காள்?" என்று கேட்டான் நடராஜன் மிகுந்த வியப்புடன்.

"தெரியவில்லை? மல்லிகா அக்காளைத்தான்சொல்கிறேன்."

நடராஜன் முகம் சட்டென்று சுருங்கிக் கறுத்தது. முகத்தை அவளிடமிருந்து மறைத்து வேறு பக்கமாகத் திரும்பி, "பார்க்கவில்லை" என்றான்.

"பாவம்! அக்காளை இப்படியா அலட்சியம் செய்வார்கள்? போய்ப் பார்த்து வாருங்கள், அத்தான்!" என்றாள் விமலா.

வெகுளிப் பெண் விமலாவின் களங்கமற்ற பேச்சா? அல்லது தன்னை ஆழம் பார்க்கப் பொடி வைத்துப் பேசும்பேச்சா? ஆத்திரத்தில் வம்புக்கிழுக்கும் வார்த்தைகளா? அல்லது விளையாட்டா? நடராஜனுக்கு ஒன்றுமே அர்த்தமாகவில்லை.

"என்ன அத்தான், பதில் பேச மாட்டேன் என்கிறீர்கள்? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும், அத்தான்! உங்களையும் என்னையும் சேர்த்துப் பிணைக்கும் பாச வலையை அறுத்துக் கொண்டிருக்கும் அவளைப் போய் என்ன பார்வை வேண்டிக் கிடக்கிறது என்றுதானே? அதனாலேயே அவளைப் பார்க்கப் பயப்படுகிறீர்கள், இல்லையா? நானும் அப்படித்தான் அத்தான் முதலில் நினைத்தேன். உங்களைப் பிடித்து ஆட்டுவிக்கும் மாய மோகினியாக அவளைக் கருதினேன். ஆனால் இப்போது என் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு விட்டேன். அக்காள் ரொம்ப ரொம்ப நல்லவள் அத்தான்!"

பெண் மனத்தை, இதுவரை அவன் அறியாத ஒரு புதிய கோணத்தில் பார்த்தான் நடராஜன். அவளை வியப்பில்

ஆழ்த்திய அந்தப் புது மனப்பான்மையைப் பேசவிட்டுத் தான் மௌனமாக இருந்து கொண்டான்.

"தவறெல்லாம் என்னுடையதுதான். தாலி கட்டும் முன்னதாகவே உங்களை என்னுடைய ஏகபோக உரிமைப் பொருளாகக் கருதியது என் குற்றம். கொஞ்ச நாட்களாக அவளுடன் நெருங்கிப் பழகி வருகிறேன். அவளுடைய தங்கமான குணமும் தெரிய வருகிறது. நேற்று, 'உனக்கும் உன் அத்தானுக்கும் குறுக்கே வரமாட்டேன். நான் வேறு ஒருவரைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்' என்று சொல்லி அவள் அழுது விட்டாள்!"

"அதற்கு அழுவானேன்?" என்றுகேட்டான் நடராஜன் ஆவலைப் பொறுக்க மாட்டாமல். தன்னிடம் சொல்லாத விஷயங்களையும் விமலாவிடம் சொல்லியிருப்பது மல்லிகா மீது கோபத்தையும் விமலாவிடம் பொறாமையையுமே உண்டாக்கி விட்டது அவனுக்கு.

"நானும் அதைத்தான் கேட்டேன், அத்தான்! 'இதற்குப் போய் அழுவானேன்?' என்றேன். அதன் பிறகுதான் தன் கதை முழுவதையும் என்னிடம் சொல்லி ஆறுதல் தேடினாள். முதன் முதலாக அவளுடைய இதய மொட்டு வெடித்து மலர்ந்து காதல் மணத்தைப் பரப்பிய போது அதிலே அளவற்ற நம்பிக்கை வைத்தாள். சேகருக்கு ஏற்கனவே கல்யாணம் ஆகிவிட்டது என்று அறிந்துகொண்டதும் காதல் என்ற சொல்லுக்கே அர்த்தமில்லை என்று தோன்றிற்றும் அவளுக்கு.

"காதலில் அவள் இழந்த நம்பிக்கை மீண்டும் புத்துயிர் பெற்றதாம், உங்களைப் பார்த்ததும். இங்கேயும் ஏறக்குறைய அதே முறையில்தான் அவளுக்கு ஏமாற்றம். மனைவி என்றொருத்தி இல்லாவிட்டாலும் மனைவியின் ஸ்தானத்தை அடைய ஒருத்தி காத்திருந்தாள். தன் மனத்தில் இனி மேல் காதலுக்கே இடமளிக்கப் போவதில்லை என்று தீர்மானமாகச் சொல்லி விட்டாள்."

"பின்னர் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன் என்று சொன்னாயே?"

"ஆமாம்,அத்தான்! சேகரைத்தான்."

"அப்படியென்றால் அவனுடைய மனைவியும் குழந்தைகளும்?"

"அவன் மனைவி சம்மதம் தெரிவித்து விட்டாளாம், அத்தான்!"

"சம்மதம் தெரிவித்தாளா? சம்மதம் தெரிவிக்கும்படி செய்யப்பட்டாளா?"

"அதுதான் எனக்கும் தெரியவில்லை. அவளைப்பற்றி நினைத்துப் பார்த்தாலே சங்கடமாக இருக்கிறது. மனிதர்கள் ஏன் இப்படியெல்லாம் நடந்து கொள்கிறார்கள்? ராமபிரானைப் போல் ஒவ்வொருவரும் இருக்கக் கூடாதா?"

"எல்லோரும் ராமபிரானைப் போல இருந்துவிட்டால் வாழ்க்கையே அலுத்துப் போய் விடும் விமலா!"

"நீங்கள் கூட அப்படித்தானே?"

"இல்லவே இல்லை, விமலா. உன்னை மணந்து கொள்ள வேண்டியது என் கடமை. ராமபிரானைப் போல என் அப்பா கொடுத்த வாக்கை நிச்சயம் நிறைவேற்றுவேன், கவலைப்படாதே!"

"கடமைக்காக என்னை நீங்கள் கல்யாணம் செய்து கொள்ளவே வேண்டாம், அத்தான்! அதற்கு ஒரு நாளும் நான் சம்மதிக்கமாட்டேன்" என்றாள் விமலா. அவளுடைய கண்களில் கண்ணீர் துளித்தது. ஏறிட்டுப் பார்த்தான் நடராஜனை.

"உன் கண்களைப் பார்க்கும் போதெல்லாம் அவற்றில் சுடர்விடும் இரண்டு தீபங்களும் என் கடமையை நினைவுறுத்திக்கொண்டே இருக்கின்றன, விமலா!"

"நீங்கள் ஏற்றி வைத்த தீபங்கள் தானே அவை? நீங்களே எப்போது வேண்டுமானாலும் அணைத்து விடலாம்."

"உன்னுடைய கண்களில் பெருக்கெடுக்கும் கண்ணீராலேயே அந்தத் தீபச்சுடர்களை அணைக்க முடியாதபோது என்றால் எப்படி முடியப் போகிறது?" என்றான் நடராஜன். (தொடரும்)




ஒரு படத்தைப் பார்த்து விட்டு விமரிசனம் எழுதுவதாயிருந்தால், இது சில வாரங்களாவது சேர்ந்தாற்போல் ஓடக்கூடிய படமா, அல்லது எடுத்த 'எடுப்பிலேயே விழுந்து அடித்துக் கொண்டு ஓரேயடியாக ஓடியே போய்விடும் படமா என்று நான் யோசிப்பதுண்டு. புறமுதுகிட்டு ஓடும் படத்தைப் பிடித்து இழுத்து வந்து விமரிசனம் எழுதுவது வீரமாகாது என்பது என் அபிப்பிராயம்! அத்தகைய சந்தர்ப்பத்தில், சில படங்களுக்கு விமரிசனமே எழுத வேண்டிய அவசியம் இல்லாமற் போய் விடுவதும் உண்டு.

வாடியா பிரதர்ஸ் தயாரிப்பான "ஜிம்போ"வை ஸ்டுடியோவில் பார்த்ததும், இந்தப் படத்தை நம் ரஸிகர்கள் எப்படி வரவேற்கிறார்கள் என்று பார்க்கத் தோன்றியது எனக்கு. ஆகவே உடனே அந்தப் படத்துக்கு விமரிசனம் எழுதவில்லை. பொறுத்திருந்து ரஸிகர்களின் தீர்ப்பைப் பார்த்து விட்டுப் பிறகு எழுதலாம் என்று நினைத்தேன்.

"ஜிம்போ" ஆங்கிலத்தில் பல பகுதிகளாக வெளிவந்து மிகவும் பிரசித்தியடைந்து விட்ட "டார்ஜான்" படங்களின் போக்கைக் கொண்ட படம். வனப் பிரதேச வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட "டார்ஜான்" கதையைப் பற்றித் தெரியாதவர்கள் யாராவது இருந்தால் அவர்கள் சினிமாவைப் பற்றியே தெரியாதவர்களாயிருப்பார்கள் என்றுதுணிந்து கூறி விடலாம்.

வன விலங்குகளுடன் வாழும் மனிதனைப் பற்றி அறிவதிலே யாருக்கும் எப்பொழுதும் ஓர் ஆர்வம் உண்டு. இந்தத் துறையில் தமிழில்கூடச் சில 'இமிடேஷன்' படங்கள் வந்து 'பணால்' ஆகியிருக்கின்றன. சமீபத்தில் வெளிவந்த "செங்கோட்டைச் சிங்கம்" அந்த ரகத்தைச் சேர்ந்தது. வன விலங்குகளையும் வன வாழ்க்கையையும் படமாக்குவதற்கு வெறும் ஆர்வம்மட்டும் இருந்தால் போதாது. மிகவும் சிரமம் எடுத்துக் கொள்வதுடன், ஏராளமான பணச் செலவுக்கும் தயாராயிருக்கவேண்டும். தந்திரக் காட்சிகளுக்கும், வெளிக் காட்சிகளுக்கும் நிறைய இடம் கொடுக்க வேண்டும். ஸ்டுடியோ காம்பவுண்டுக்குள்ளிருந்தபடியே சந்திரலோகத்தையும், சப்த சாகரங்களையும் காட்டிவிட முயலும் நம் படாதிபதிகள் இந்த மாதிரியான படங்களின் விஷயத்தில் சிறிது சிரமம் எடுத்துக் கொண்டுதான் ஆகவேண்டும். காட்சிகளின் விறுவிறுப்புக்காகத்தான் இந்தப் படங்களுக்கு ஒரு மவுசு இருக்கிறது.

சிறந்த படங்களைத் தயாரித்துப் பிரசித்திபெற்று விளங்கும் வாடியா பிரதர்ஸ் இந்தப் படத்தை ஹிந்தியில் தயாரித்துத் தமிழில் 'டப்' செய்திருக்கிறார்கள்.

பிரசித்தி பெற்ற சினிமா துணைகலை நிபுணரான பாபுபாய் மிஸ்திரி இந்தப் படத்தின்

சிறப்புக்குப் பெரும் அளவில் பொறுப பேற்றிருக்கிறார். ''ஸ்ரீராம பக்த ஹனுமான்'' படத்துக்கு உயிர் கொடுத்தவர் இவர்தான். அதுவும் வாடியா பிரதர்ஸ் தயாரிப்புத்தான்.

படத்தின் பிரதான பாத்திரங்களான ஜிம்போவும் லீலாவும் மிகவும் பொருத்தமான ஜோடிகளாகக் கிடைத்து விட்டனர். புது முகம் ஆஸாத். ஜிம்போவாக நடிக்கிறார். சித்ரா, லீலாவாக நடிக்கிறார்.

ஜிம்போ மிகவும் அதிர்ஷ்டக்காரன். 'ஜிம்போ, தாத்தா, லீலா' என்னும் வார்த்தைகளைத் தவிர வேறு பேச்சுப் பேசும் அவசியமே படம் முடிகிற வரையில் அவனுக்கு ஏற்படவில்லை!

ஆஸாத் தம் பாத்திரத்தை நன்றாய் உணர்ந்து நடித்திருக்கிறார். சித்ராவும் நன்றாய் நடித்திருக்கிறார்.

புரொபஸர் சக்கரவர்த்தி இளம் மனைவியுடனும் மகனாகிய சிறுவன் விக்கிரமனுடனும் பதினைந்து ஆண்டு காலம் வனப்பிரதேசத்தில் வசித்துக் கொண்டு ஆராய்ச்சி நடத்திக் கண்டுபிடித்த ரகசியத்தை ஒரு தாயத்தில் வைத்து, மகன் கழுத்தில் கட்டி விடுகிறார். பிறகு இந்த விஷயத்தைப் பற்றி அண்ணனுக்குக் கடிதம் எழுதி விட்டு, ஊருக்குப் பலூனில் புறப்படும் தருணத்தில் புலியிடம் சிக்கி மாண்டு விடுகிறார். பலூன் சிறுவனோடு பறந்து விடுகிறது. மகனையும் கணவனையும் ஒரே சமயத்தில் இழந்த அவளுக்குப் பைத்தியம் பிடித்து விடுகிறது. வானத்தில் சென்ற பலூன் வெடித்து, சிறுவன் காட்டில் விழுந்து விடுகிறான். அவன்தான் பிற்காலத்தில் ''ஜிம்போ''வாகிறான்.



திரைக்கதையின் சுவையை அதிகப்படுத்த வனப்பிரதேசத்து ராணி ஒருத்தி வந்து லீலாவுடன் ஜிம்போவைக் காதலிப்பதில் விடாமல் போட்டியிடுகிறாள்.

இந்தப் படத்தின் கதையைப் பற்றியோ, கதாபாத்திரங்களைப் பற்றியோ யாரும் அதிகமாக அக்கறை காட்ட மாட்டார்கள். காட்சி ஜோடனைகளுக்காகத்தான் இந்தப் படம். தயாரிப்பாளர்கள் அந்த விஷயத்தை நன்கு மனத்தில் பதிய வைத்துக் கொண்டு படத் தயாரிப்பில் முனைந்திருக்கின்றனர் என்பதற்குப் பல கோணங்களிலிருந்து மிகவும் சமத்காரமாக எடுக்கப்பட்டிருக்கும் வனப் பிரதேசக் காட்சிகளே சான்று பகருகின்றன. ஜிம்போவும் லீலாவும் சந்திக்கும் கட்டங்கள் மிகவும் நன்றாயிருக்கின்றன. காமிராக் கருவியும் அந்த இடங்களில் திறமையுடன் கையாளப் பட்டிருக்கிறது. மேற்படி காட்சிகளுக்காகவே படத்தைப் பார்க்கலாம். முழுமதி மோகன நிலவைப் பொழியும் ஓர் இன்பம் நிறைந்த காட்சி அதியற்புதமாகக் காட்டப்படுகிறது. அந்த வெண்மதி விரித்த தண்ணிலவை வீணாக்காமல் எழிலரசி லீலாவும், வனவேந்தன் ஜிம்போவும் பொங்கும் அன்புடன் சந்திக்கின்றனர். அந்தக் காட்சி பிரமாதமா யிருக்கிறது

வனராஜபுரி ராணியின் அரண்மனை அற்புதமா யிருக்கிறது.

ஜிம்போவைக் கண்டுபிடிக்க வந்த நகரத்து மக்கள் கூட்டம் செல்லும் பாதை பிரமாதமா யிருக்கிறது. புலி, சிங்கம் முதலிய மிருகங்களை மேல்நாட்டுப் படங்கள் மாதிரியே, மெய் சிலிர்க்கும் வண்ணம் படத்தில் சேர்த்திருப்பதைப் பாராட்ட வேண்டியதுதான்.

இந்தப் படத்தில் வேதனையா யிருக்கும் அம்சம்: பாட்டு.

தொந்தரவு கொடுக்கும் அம்சம்: தமிழாக்கம். பாத்திரங்கள் பேசும் தமிழ் நடை பொருத்தமாயில்லை.

ஒரு காமெடியன் வந்து என்ன வெல்லாமோ பாடிக் கோமாளிக் குதி போட்டுப் பிராணனை வாங்குகிறார். அதே மாதிரி அர்த்தமும் அவசியமும் இல்லாத நடனங்கள் வேறு நிறையப் புகுத்தப்பட்டிருக்கின்றன. இந்தப் படத்தில் வரும் கொடிய வன விலங்குகளை விட மேற்படி காட்சிகளைப் பார்ப்பது தான் பயமாயிருக்கிறது!

திறமையான படப் பிடிப்புக்காகவும் சிங்கம், புலி, யானைகளுக்காகவும் ஒரு தடவை ''ஜிம்போ''வைப் பார்க்கலாம்.

கண்கவரும்
வனப்பிற்கு...




ரெமி ஸ்னே
&
பவுடர்

AVRA 586

இலங்கையில் கிடைக்குமிடம்: **AVRA Ltd., Colombo**

ரேடியோ ஸிலோன் :—41.72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30லிருந்து 6-45 வரை




## 78. புல்தடுக்கி (2)

உடம்புவாசி - சரீரக்கூறு - பிரகிருதி என்னும் இயல்பினுலேயே மெலிந்த சரீரம் பெற்றவனாயினும் ஓரளவாவது இதையும் சரிக்கட்டி உடலைப் பருமனாக்கி விட முயற்சி செய்யலாம்; முயற்சியும் முழுதும் வீணாகாது என்ற விஷயத்தை விளக்கியாயிற்று. அப்படிக்கில்லாமல் சிலருக்கு உடல் மெலிவதும் உண்டு. 'அதற்குக் காரணங்கள் என்ன? சிகிச்சை என்ன' என்பதைத் தெரிவிக்கிறேன்.

"இந்தப் பிள்ளையைப் பாருங்கோ! எனக்கு என்று வந்து பிறந்திருக்கிறான்!" என்று சொல்லி வருவாள் தாயார்.

"என்னடா கண்ணு, உன் பெயர்? என்னம்மா இவனுக்கு உடம்பு?" என்று கேட்டால் போதும், "நீங்கதான் என்ன உடம்பு என்று சொல்ல வேணும்! நன்ருகத்தான் சாப்பிடுகிறான். பள்ளிக் கூடம் போகிறான். படிக்கிறான். விளையாடுகிறான். துருதுருவென்றுகூட இருக்கிறான். ஆனல் இந்த உடம்பு ஏனோ இப்படி நாளுக்கு நாள் கயிறு மாதிரி போய்க்கொண்டிருக்கிறது" என்று ஒரு பாரதம் சொல்லத் தொடங்கிவிடுவாள்.

"சரியானபடி ஊட்டமான ஆகாரங்களை நீங்கள் கொடுத்தால் தானே உடம்பில் சதை போடும்!" என்ருேமோ போச்சு. "அவன் எங்கே சாப்பிடுகிறான்?" என்று தான் கொடுக்கும் ஆகாரங்கள் முதலியவைகளை ஒரு பட்டியல் எழுதினது போலத் தெரிவிப்பாள்.

சற்று முன்பு 'நன்ருகத்தான் சாப்பிடுகிறான்' என்று சொன்னதை மறந்து, 'சாப்பிடுவதே இல்லை. ஏதோ சாதத்தைக் கொரிக்கிறான்' என்று மாற்றி முன்னுக்குப் பின் முரணுகத் தெரிவிப்பாள்.

இதைத்தான் தாயின் உள்ளம் என்பது. யானைக்குட்டி போல் தன் மகன் இருந்தாலும் திருப்திப்பட மாட்டாள். "தின்பதையும் தின்று விட்டுச் சங்கடத்தையும் காட்டுகிறானே!" என்பாள். இவ்விதக் குழந்தைகளை-சிறுவர்களைச் சிறிது கவனித்துப் பார்க்க வேணும்.

இந்தக் குழந்தைக்கும் இதற்கு மூத்த குழந்தைக்கும் அடுத்த குழந்தைக்கும் வயதுல என்ன வித்தியாசம் என்பதை முதலில் தெளிய வேண்டும். மிகவும் குறுகியதாயிருப்பின் 'இந்தக் குழந்தை 'சவலை'க் குழந்தை. அதனுல் இந்த உடல் நிலை' என்று தெரிந்து கொள்ளலாம்.

'சவலை'க் குழந்தைகள் :

தாய்ப் பாலை மட்டும் நம்பி வளரும் பிராயத்திலுள்ள குழந்தை. அல்லது கணிசமான அளவுக்குத் தாய்ப் பாலையும், ஏதோ ஒரு வேளை பசுவின் பால் அல்லது கஞ்சி போன்றதையும் ஏற்று வளரும் பிராயம். இந்நிலையிலுள்ள போது தாய் மறுபடியும் சூலுற நேரிடுகிறது. அப்போது மேற்சொன்ன குழந்தைக்குத் தாய்ப் பால் கிடைக்காமல் போகலாம்; அல்லது போதுமான அளவு கிடைக்காமற் போகலாம்; அல்லது கிடைத்தும் தாய்ப்பாலில் குண பேதம் ஏற்படவும் நேரிடலாம். இதைச் சரிக்கட்டிக் கொண்டு சமாளிக்கச் சக்தியற்றதாயிருக்கும் அந்தக் குழந்தையின் ஜீரண கோசம். வளரும் பிராயமல்லவா? வளர்வதற்கு உதவும் தரத்திலுள்ள ஆகாரம் கிடைப்பதில்லை. அப்படிக் கிடைக்கும் ஆகாரமும் ஹிதமற்றதாயுமிருக்கும். போதவும் போதாது.

ஆகவே, அக்குழந்தை இயற்கையால் உந்தப்பட்டுக் கண்டதையெல்லாம் தின்னத் தொடங்குகிறது. கண்ட பொழுதெல்லாம் தின்னப் பறக்கிறது. நலிவற்ற நிலையிலுள்ள ஜீரணகோசத்துடன் இருப்பதால் தின்பதைச் சரிவர ஜெரித்துக் கொள்ளவோ, ஜெரித்ததன் சத்துப்பொருளைக் கிரகிக்கவோ செய்யாமல், ஜெரித்தும் ஜெரிக்காமலும் இருக்கும். மலப் போக்கு சில சமயம் பேதியாகவும் தினம் பலதரமும் போகத் தொடங்குகிறது. வயிறு குழு வயிறு. நெஞ்சு, மார்பு விலாப்புறங்கள் வெறும் எலும்புக் கூடு. சுருந்த முகம் — கண் டிரப்பைகள் புடைத்து வீங்கி-வாயில் அளவுக்கு மீறிய பற்கள்-வாய் ஓரங்களில் நிரந்தரமான புண், தலையில் மயிர்கள் அடர்த்தியாக இல்லாமல் குப்பை மேட்டில் கோரைப் புல் முளைத்த மாதிரி இங்கொன்றும் அங்கொன்றுமாய்த் தலையையே மறைக்காது.

இரதாணி என்னும் இந்நோய்வாய்ப் பட்ட குழந்தையின் நிலை கண்டு அன்னையின் மனம் துயர்ப்படும். அந்நிலையில் அவள் வயிற்றிலுள்ள குழந்தையின் வளர்ச்சியும், அதன் ஆரோக்கியமும், பிற்காலத்தில் அதன் அதிருஷ்டமும் பாதிக்கப்படும். தாயின் உடல்நிலை என்னவாகும் என்று சொல்ல வேண்டுமா?

"இதற்குத்தான் குடும்பக் கட்டுப்பாடு வேண்டும்!" என்கிறீர்களா?

இல்லை. வேண்டியது மனக்கட்டுப்பாடு; கட்டுத் திட்டங்களுக்குட்பட்ட குடும்பச் சூழ்நிலை. இவைதான் வேண்டியது. ஒரு சொல்லில் தெரிவிப்பதானால் வீட்டில் ஒரு கிழம் வேண்டும். அந்தக் கிழத்தின் சொல்லுக்கு மற்றவர் ஒரு மதிப்பும் கொடுக்க வேண்டும்.

அது வேறு விஷயம், இப்போது முன் சொன்ன 'சவலை'க் குழந்தையைக் கவனிப்போம்.

சேடையில் நடவுநட்ட சம்பாப் பயிர். நிலத்தை உழுது பண் செய்ததில் குற்றம் குறை கிடையாது. தழை எரு போட்டு மிதித்து அழுகியபின் — பரம்படித்து நடவு நட்டது. இளம் பயிருக்கு நீர் கட்டி விட்டாயிற்று. நாற்று நட்ட பத்து நாட்களுக்கெல்லாம் தண்ணீருக்குப் பஞ்சம். இரண்டு வாரம், மூன்று வாரம் என்று இரண்டு மூன்று மாத காலம் தண்ணீருக்குத் தவித்துப்போன சேடைப் பயிர். நட்ட பயிர் செத்துப் போகாமல் இருக்கும் அளவுக்கு உயிர் வாழப் போதுமான புஞ்சை மழையாக அவ்வப்போது தூற்றல் இருந்தது. நடுவபது யடைந்த பயிர் நாற்று நட்ட நிலையைவிட ஒரு அங்குலந்தான் வளர்ந்திருந்தது. அதற்குப் பிறகு அந்தப் பயிர் எப்படி வளர்ந்திருக்கும்? என்னவிளையும்? விளைய வேண்டிய பயிர் முளையிலேயே மாதத்தில் இரண்டு நாட்கள் ஏகாதசி விரதமும் 28 - நாட்கள் பட்டினியும் கிடந்ததே! சவலைக் குழந்தை வளர்ந்த பிறகும் இதேமாதிரிதான் நோஞ்சலாக இருக்கும். ஆகாராதிகளிலும், பருவங்களின் நிலையிலும் சிறிது மாற்றமிருந்தாலும் அதைச் சகித்துக் கொள்ளும் சக்தியற்றதாய் எளிதிலேயே பலவித நோய் வாய்ப்படும் 'தொட்டால் சிணுங்கி'களாயிருக்கும். இந்தப் புல்தடுக்கிகளுக்குச் சிகிச்சை செய்வது எப்படி?

சவலை நிலையிலுள்ளபோது சிகிச்சிப்பது ஒருவகை. அதிலிருந்து விடுபட, சிறுவனுயுள்ளபோது சிகிச்சிப்பது ஒரு வகை. பிற்காலத்தில் வளர்ந்து பெரியவனை பிறகு சிகிச்சிப்பது ஒரு வகை. அடிப்படைத் தத்துவத்தில் ஒரேவித மானாலும் வயது ஆகாரம் முதலியவைகளின் வேறுபாடுகளுக்கேற்பச் சிகிச்சையிலும் சிற்சில வேற்றுமைகள் இருக்கத்தானே வேண்டும்?

"சவலைக் குழந்தைக்குக் கவலைப்படுவானேன்? வெள்ளாட்டுப் பாலைக் கொடுக்கத் தொடங்கினால் ஆயிற்று. மருந்தாகவும் ஆகாரமாகவும் உதவும். தொங்கும் தொந்துக்குமாயும் சக்கையும் தண்ணியுமாயும், படிப்படியாய்ச் சாப்பிடுவதும் மரக்கால் மரக்காலாய் மலங் கழிவதுமாய் இருக்கும் நிலை ஓரிரண்டு நாளில் மாறிவிடும். குழந்தை தினவெடுக்கும் நாக்குக்காகக் கண்டதையும் சாப்பிடப் பறக்காது. வயிறு ஒரு கொத்தவால் சாவடி யாகாது. நன்றாய்ப் பசித்துச் சாப்பிடும். சாப்பிட்டதை நன்றாய் ஜெரித்துக் கொள்ளும் — ஜெரித்ததிலிருந்து உடல் வளர்ச்சிக்கு அவசியமான சத்துப் பொருளைக் கிரஹித்துக் கொள்ளும். உடல் வளரும். சூணு வயிறு குறையும். தாராளமாய்ச் சிறுநீர் இறங்கும். முகத்தில் தெளிவு ஏற்படும். சதைப் பிடித்து மார்புக் கூட்டின் எலும்புகள் மறையும். ஒவ்வொன்றாக எல்லாச் சுகவீனங்களும் மாறும்.

'க்ஷீராசி' என்னும் தாய்ப்பால் அல்லது பசுவின் பாலையே ஏற்று வளரும் பிராயத்திலுள்ள குழந்தைகளுக்கு இதுவே போதுமானதாகும்.

'க்ஷீரான்னாசி' என்னும் இரண்டாவது இனத்தைச் சேர்ந்த குழந்தைகள் ஓரளவு தாய்ப் பாலையும், அல்லது பசுவின் பாலையும் ஓரளவு அன்னத்தையும் ஏற்று வளரும் பிராயத்தினர் ஆவர். இவர்களுக்குப் பசுவின் பாலுக்குப் பதில் வெள்ளாட்டுப் பாலைக் கொடுப்பதும், அன்னத்துடன் கூட முஸ்தாதக்ரம் என்னும் மோரைக் கலந்து கொடுப்பதும் நல்லது. இவ் விருவகைக் குழந்தைகளும் தாய்ப் பாலையும் ஏற்பவரானால் தாய்க்கும் மருந்து கொடுப்பது அவசியம். இத் தாய் தாய்மையை எதிர்பார்த்திருப்பவரானால் யாதொரு மருந்தும் கொடுக்க வேண்டாம். கொடுக்கவும் இயலாது. அந்நிலையில் குழந்தைக்குத் தாய்ப் பாலை அறவே நிறுத்திவிட்டு, வெள்ளாட்டுப் பாலைக் கொடுப்பது நல்லது. அவ்வாறின்றி, தாய்க்கும் மருந்து கொடுக்கலாமென்ற நிலையாயின் தாயாருக்கு ஒரு பல் பூண்டு போட்டுக் காய்ச்சிய பாலை இரவில் மட்டும் குடிக்கும்படி வாரத்தில் 2, 3 நாட்கள் கொடுத்து வந்தால் போதும்.

அன்னாசி என்னும் பிராயத்தில் குழந்தைகள் சாதத்தை மட்டும் சாப்பிட்டு வளர்பவர். இவர்களுக்கானால் சிறிது அஷ்ட சூர்ணம் என்னும் ஹிங்க்வாஷ்டக சூர்ணத்தை முதல் கவளம் சாதத்துடன் ஒரு துளி நெய்யுடன் கொடுத்து, பிறகு பாக்கியுள்ள ஆகாராதிகளைச் சாப்பிடச் சொல்வது. முஸ்தாதக்ரம் என்ற மோரையும் சேர்த்துச் சாப்பிடச் செய்வது ஆகியவை போதும்.

குழந்தைப் பிராயம் தாண்டிச் சிறுவனாகி விட்டாலோ.... பெரியவர்களுக்குள்ள மருந்துகளில் அளவை மட்டும் குறைத்துச் சாப்பிட்டால் போதும்.

## வத்னியால் குளுமையுடன் விளங்குங்கள்



### என மதுபாலா கூறுகிறார்

இந்த உஷ்ண காலத்தில், நீங்கள் சோர்வடைந்தவுடன் வத்னி சோப்பால் அலம்பிக்கொள்ளுங்கள், நீங்கள் தென்புடன் திகழ்வீர்கள்—இது சுதேசி சோப்.

கீர்த்திவாய்ந்த சினிமா நக்ஷத்திரம் மதுபாலா உபயோகிப்பதும்; சிபார்சு செய்வதும், புஷ்பங்களின் புதுமை நிறைந்த வத்னி சோப்பே.




கடைசி செதில் வரை புதுமையும் நறுமணமும் உள்ளது.

மற்றும் வத்னி பேபி


100% சுதேசி

சோப்புகளில் புகழ்பெற்ற பெயர்.




தலைதீபாவளிக்குத் தன் மாமனாரிடமிருந்து வந்த அழைப்பிதழைக் கண்டதும் போவதா, வேண்டாமா என்ற பிரச்னை தான் ரகுராமனுக்கு மேலோங்கி நின்றது. இந்த ஒரு அழைப்பிதழ் மட்டுமல்ல. எத்தனையோ கடிதங்கள் அவனை வருந்தி அழைத்து நாள் தவறாமல் கடந்த ஒரு மாதகாலமாக அவன் இருக்குமிடம் தேடி முற்றுகை விட்டுக் கொண்டேயிருக்கின்றன. அவன் மாமனாரே நேரில் இருமுறை வந்து அழைத்து விட்டுப் போனார். போன தடவை தம் பெண்ணை அழைத்துச் செல்ல வந்த போது கூட ''மாப்பிள்ளை! பெரிய மனசு பண்ணி நீங்கள் அவசியம் உங்கள் தாயாரையும், குழந்தையையும் அழைத்துக் கொண்டு தீபாவளிக்கு வர வேணும்'' என்று கெஞ்சிக் கேட்டு விட்டுப் போனார். அதற்கேற்றாற் போல் கடிதங்களும் பறந்து கொண்டிருக்கின்றன.

'அவன் எப்படிப் போய் அவர்களுடன் கலந்து கொண்டு தீபாவளியைக் கொண்டாடுவான்! அவன் இதுவரையில் நடந்து கொண்ட விதம் எல்லாம் சரிதானா!' உணர்ச்சி அலைகள் உள்ளக் கடலில் பொங்கி எழுந்தன.

வாழ்க்கையிலே ஒவ்வொருவருக்கும் 'தலை தீபாவளி' ஒரு முறைதான் வரும். ஆனால் ரகுராமனுக்கு அந்தத் தலைதீபாவளியை அனுபவிக்கும் பாக்கியம் இரண்டாம் முறையும் கிட்டியது. ஆம்! அவனுக்கு எல்லாம் இரண்டுதான். ஜானகியின் கரம் பிடித்தவுடனே அவன் அவளுடன் சேர்ந்து தலை தீபாவளியைக் கொண்டாடினான். அப்பொழுது அவனுக்கு அதில் ஊக்கமும், உற்சாகமும் இருந்தன. இல்லாவிட்டால் அவனது மாஜி மாமனாரது கடிதம் வருவதற்கு முன்பே ஜானகியின் பிறந்தகமான மாய ஊருக்கு ரயிலேறியிருப்பானா! அவள் போய் விட்டாள். எல்லாம் கதையாய், கற்பனையாய்க் கனவாயல்லவோ போய் விட்டன! ஜானகி அவனிடம் நடத்திய மூன்று வருட வாழ்க்கைக்கு அடையாளமாக, அன்புச் சின்னமாக, குழந்தை மாலாவையல்லவா ஒப்படைத்து விட்டுச் சென்றுவிட்டாள்.

தினமும் எத்தனையோ ரயில் விபத்துக்கள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. ஆனால் அதற்காக வண்டிகள் போகாமல் நின்று விடுவதில்லையே! ரகுராமனது வாழ்க்கைப் பாதையைச் சரிப்படுத்த அனேகர் முன் வந்தார்கள். ரகுராமனது பிடிவாத குணமோ, வேதாந்தப் பேச்சோ, எவையும் அவன் தாய் மங்களத்தின் முன்போ, வந்தவர்களிடமோ எடுபடவில்லை.

''ராஜா மாதிரி இருக்கே! இன்னும் முதல் கலியாணம் செய்து கொள்கிற வயசு கூட ஆகவில்லை. கட்டாயம் மறுமணம் செய்து கொள்ளத்தான் வேணும்!''

''உன் தாயை எத்தனை நாட்களுக்குத்தான் நம்ப முடியும்? நல்ல இடமாகப் பார்த்து இந்த ஆனியிலேயே .....''

உற்றார் உறவினர் அனைவரும் அவன் உயிரை எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

கடைசியில் எல்லோருடைய தொந்தரவையும் பொறுக்க முடியாமல் பத்மாவின் கரத்தைப் பற்றினான் ரகுராமன். பத்மா பிரமாதமான அழகி இல்லை என்றாலும் சாதாரணப் பெண்ணுக்குரிய எல்லாவித லட்சணங்களும் அமையப் பெற்றவளாகத்தான் இருந்தாள்.

பத்மா வந்தாள். ஆனால் அவளால் ரகுராமனது இதயக் கோட்டையைப் பிடிக்க முடியவில்லை. ஊரிலுள்ள அத்தனை பேர்களும் போனவளுக்கு வந்தவள் எந்த விதத்திலும் குறைந்தவளல்ல என்று கூறினார்கள். தாய்



''[illegible]! நீ இந்தச் சைக்கிளை எடுத்து ஓட்டேன்!''

''இப்போ வேண்டாம்! உனக்கு எப்போ சைக்கிள் வேணுமோ, அப்பத்தான் எனக்கும் வேணும்!''

மங்களத்துக்கு மருமகள் பொன்கலமாகத் தான் தோன்றினாள். குழந்தை மாலா தன் தாயாகவே அவளை நினைத்துக் கொண்டு விட்டாள். ஆனால் ரகுராமனது விழிகளுக்கு மட்டும் அவள் பேயாகத் தோன்றினாள். ஜானகிக்கு இவள் எந்த விதத்திலும் ஏற்றவள் அல்ல என்பது அவன் எண்ணம்.

கப்பல் மூலம் கடந்து வந்த 'ப்ளூ' சுரம் அவன் குடும்பத்தையும் பற்றியது. எல்லோரும் படுத்தெழுந்தார்கள். இரவு பகல் எந்நேரமும் கண் விழித்து வேலை செய்த பத்மாவையும் அது விட்டுவிடவில்லை. அதைப் பற்றி ரகுராமன் கவலைப் பட்டால்தானே! பத்மா ஒரு வாரம் ஜுரமாய்க் கிடந்து எழுந் தாள். எல்லோரும் பத்மாவின் உடல் இப்படி இளைத்துப் போய்விட்டதே என்று பரிதாபப் பட்டார்கள். இதே சொல் அவனுக்குடை யவனிடமிருந்து வந்திருந்தால் அவள் எவ்வளவு ஆறுதல் அடைந்திருப்பாள்! இழந்த பலத்தைக் கூடப் பெற்றிருப்பாளே! ஆனால் அதற்குப் பதில் அவன் செய்த காரியம் தான் என்ன?

திருச்சியிலிருக்கும் பத்மாவின் தகப்பனாருக் குப் பின்வருமாறு அவன் ஒரு கடிதம் எழுதிப் போட்டான்.

''உங்கள் புதல்வி பத்மா ஜுரமாய்க் கிடந்து இப்பொழுது சிறிது குணமடைந்து வருகிறாள். அவளுக்கு இரண்டு மாதங்கள் ஓய்வு தேவை என்பது டாக்டரின் அபிப்பிராயம். அவளை அழைத்துச் சென்றால் மிகவும் நல்லது.''

கடிதம் சென்ற மூன்றாவது தினம் பத்மா வின் தகப்பனார் வந்தார். ரகுராமன் குறிப்பிட் டிருந்தபடி பெண்ணை அழைத்துச் சென்ற தோடு அவனையும் தீபாவளிக்கு அவசியம் வந்து சேரும்படி வருந்தி அழைத்து விட்டுச் சென்றார்.

அன்று வந்த கடிதத்தையும் மடித்து மேஜை டிராயரில் வைத்தான் ரகுராமன். 'அம்மா வையும் மாலாவையும் இங்கு தனியாக விட்டு விட்டு எனக்கு என்ன தீபாவளி வேண்டிக் கிடக்கிறது? போனாலும் கூட்டு புகையாமல் இருக்கப் போவதில்லை.'' ரகுராமனது உள்ளம் இவ்வாறு நினைத்துப் பார்த்தது.

தலைதீபாவளிக்குப் போவதில்லை என்றே முடிவு செய்து விட்டான் அவன். வருவது, வராதது பற்றியும் அவர்களுக்கு ஒன்றும் எழுதாமல் சும்மா இருந்து விட்டான்.

அவனது மறுமணத்தைப் பற்றி உபதேசம் செய்த எல்லா நண்பர்களும், இப்பொழுது அவன் தலைதீபாவளிக்குப் போவதைப் பற்றிச் சிரத்தையுடன் விசாரிக்க ஆரம்பித்தார்கள்.

''என்ன ஸார்! எப்போ திருச்சி பயணம்?''

''குறைந்தது ஒரு வாரமாவது 'காம்ப்' போடுவீர்களோ!''

''போய் நிம்மதியாக நாலு நாட்கள் இருந்து விட்டு வாருங்கள். குழந்தையைப் பார்த்துக் கொள்ளத்தான் உங்கள் தாயார் இருக்கிறார்கள்.''

ரகுராமனுக்கு என்ன செய்வதென்றே புரிய வில்லை. கடைசியில் தன் மனத்தை இரும் பாக்கிக் கொண்டு தீபாவளிக்குப் போய் வருவது என்று முடிவு செய்தான்.

வேதனை உள்ளத்துடன் உற்சாக மிழந்த வனாய் முடுக்கி விட்ட இயந்திரத்தைப் போல் திருச்சி ஜங்ஷனை விட்டு இறங்கித் தன் புது மாமனாரின் வீட்டுக்கு ஒரு ஜட்கா வண்டி அமர்த்திக்கொண்டு சென்றான் ரகுராமன்: 'தன் கரத்தைப் பிடித்த பத்மா தன்னைப் பற்றி என்னென்ன சொல்லி யிருப்பாளோ?' என்று ஏங்கித் தவித்தது அவன் உள்ளம்.

''வரவேணும்! வரவேணும் அத்திம் பேரே!'' அவனது மைத்துனி மஞ்சுளா அவனை வரவேற்க வீட்டுக்குள்ளிருந்து ஓடி வந்தாள்:

''நீங்கள் வருவீர்களோ, மாட்டீர்களோ என்று பயந்து கொண்டிருந்தோம். ஆனால் நான் மட்டும் நிச்சயம் நீங்கள் வருவீர்கள் என்று சொல்லிக்கொண்டிருந்தேன்.'' ஆவி பறக்கும் காப்பியை அவன் முன் வைத்து விட்டு அவன் மைத்துனிதான் பேசிக் கொண் டிருந்தாள்.

''பத்மா எங்கே! வீட்டிலில்லையா! எங்கே யாவது வெளியே போயிருக்கிறாளா! இல்லை! என் முகத்தில் விழிக்கத்தான் மனமில்லையா! மஞ்சுளாவைக் கேட்கலாமா! அவள் ஏதேனும் தம்மைப் பற்றியே கூறி விட்டால்!' ரகு ராமனின் உள்ளம் குழம்பித் தவித்தது.

ஆனால் அதற்குள் அவனது மைத்துனியே முந்திக் கொண்டு விட்டாள்.

''அக்காவுக்கு மீண்டும் ஜுரம் வந்து விட்டது. நேற்றிரவு பயந்தே போய் விட்டோம். நீங்கள் வந்தால் கூட உங்களிடம் உடனடியாகச் சொல்லவேண்டாமென்று கூறி யிருக்கிறாள். அதனால் தான் டிபனும் காப்பி யும் சாப்பிட்ட பிறகு சொன்னேன். ஏனெனில் உங்களூரில் முதல் காய்ச்சல் அவளுக்குக் கண்டபொழுது நீங்கள்தான் மிகவும் வேத னைப் பட்டீர்களாம். அதனால்தான்.........''

'என்ன! நம்மை இவள் கலாட்டா செய்கிறாளா! ஒன்றும் விளங்கவில்லையே!' ரகுராமனது உள்ளத்து உணர்ச்சி தன்னையே கட்டிப் பார்த்துக் கொண்டது.

''இப்பொழுது பத்மா எங்கே யிருக்கிறாள்? எங்கே உன் அப்பாவைக் காணோம்?'' ரகு ராமன் தன்னையும் மீறிக் கேட்டான்.

''அக்கா உள்ளே தான் படுத்துக் கொண் டிருக்கிறாள். அப்பா டாக்டர் வீட்டுக்குச் சென்றிருக்கிறார்.'' மஞ்சுளா வார்த்தையை

வர்ணங்களையும் பாடம் செய்ய வேண்டுமென்ற வித்வான்களுக்கும் பயன்தரக்கூடிய பல அம்சங்கள் இந்தச் சஞ்சிகையில் இடம் பெற்றிருக்கின்றன.

கிடைக்குமிடம்: சங்கீத வித்வத் சபை, 115-இ மௌப்ரீஸ் ரோட், சென்னை 14. பக்கம் 170; விலை: ரூபாய் நான்கு

## ஆச்சார்யஸ்வாமிகள் உபன்யாசங்கள்

ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீசங்கராச்சாரியர் செய்யும் உபந்நியாசங்களை நேரில் கேட்டு ஆனந்தித்தவர்கள் பாக்கியசாலிகள். அவர்கள் கருத்தை அழகுப்படுத்திச் சொல்லும் மாதிரியே தனி. அதில் அவர்களுக்கென்று ஒரு தனி பாணி இருக்கிறது. பேச்சில் அருள் கனிகிறது. மக்களின் நலத்தில் மகான்களுக்கே உரித்தான பரிவு காண்கிறது. எவரையும் குறைகூறாமல், சமுதாயத்தில் காணப்படும் குறைகளை நயமாக எடுத்துச் சொல்லி மக்கள் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரக் கூடாதவற்றை வற்புறுத்தாது. ஆஸ்திக புத்தியை வளர்ப்பதில் அவர்களுடைய அருள் மொழிகள் இணையற்றவை.

அவர்களுடைய உபந்நியாசங்களை அப்படியே சுருக்கெழுத்தில் எடுத்துப் பிறகு தட்டெழுத்தில் பிரதி செய்து, நேரில் கேட்டு அனுபவிக்க முடியாத பலருக்கும் பயன்படுமாறு கலைமகள் காரியாலயத்தார் புத்தக வடிவத்தில் பல தொகுதிகளாக வெளியிடும் புனித கைங்கரியத்தை மேற்கொண்டிருக்கிறார்கள். அவற்றுள் முதல் தொகுதி இப்போது வெளிவந்துள்ளது. இப்புத்தகம் அருமையான ஒரு பொக்கிஷம். ஒவ்வொருவரும் தன்னில்லத்தில் வைத்துக் கொண்டு அடிக்கடி படித்துப் பயன்பெற வேண்டிய நூல். முக்கியமாக, மாணுக்கர்களும் வாலிபர்களும் படித்துப் பயனடைய வேண்டுமென்பதற்காகக் கலைமகள் காரியாலயத்தார் அவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட காலத்துக்குக் குறைந்த விலையில்கூட இந்தப் புத்தகத்தை வழங்க ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

பிரசுரம்: கலைமகள் காரியாலயம், சென்னை-4; பக்கம் 176; விலை: ரூபாய் 2.

## ஸ்ரீ தேவிமாகாத்ம்யம்

தாயன்புக்கு இணையான அன்பு மூவுலகத்திலும் இல்லை என்பது பிரசித்தம். ஆதி பரம்பொருளை அன்னை பராசக்தி வடிவத்தில் உபாசித்து, இம்மையில் சுகத்தையும் மறுமையில் மோக்ஷத்தையும் அடைந்தவர்களின் சரித்திரங்களும் பல. அன்னையின் வழிபாட்டு நூல்களும் பலவாறாக உள்ளன. அவற்றில் சிறந்ததும் பிரசித்தி வாய்ந்ததும் மார்க்கண்டேய புராணத்தின் ஒரு பகுதியுமான ஸப்தசதி என்னும் 700 சுலோகங்களைக் கொண்ட தேவிமாகாத்ம்யம் என்ற இந்த நூல். இது முழுவதும் மந்திரங்களாலானது. இதை முறைப்படி நியமத்துடன் பாராயணம் செய்வோருக்கு இஷ்ட பலங்கள் கிடைக்கின்றன என்பது தந்திர சாஸ்திரங்களின் துணிபு.

அரசை இழந்த ஒரு அரசனும், செல்வத்தை இழந்த ஒரு வைசியனும் ஒரு கானகத்தில் சந்தித்துத் தங்கள் மன அமைதிக்காக ஒரு ரிஷியைச் சரணடைகின்றனர். அவர் துர்க்கையின் வழிபாட்டை உபதேசம் செய்தருளி, அவர்களுக்கு நல்வழி காட்டுகிறார். அவர் செய்த உபதேசமும் அன்னை பராசக்தியின் பிரபாவத்தைப் பற்றிய வர்ணனைகளும் அடங்கியது இந்தத் தேவி மாஹாத்ம்யம் என்ற நூல். பார்ப்பதற்குக் கதைபோலிருந்தாலும் உயர்ந்த தத்துவங்களைக் கொண்டது. சக்தி வழிபாட்டு சம்பிரதாயங்களில் முதன்மை ஸ்தானம் வகிக்கும் பாஸ்கர ராயர் குப்த்வதி என்ற பாஷ்யமும், வங்க மொழியில் ப்ரஹ்ம ரிஷி ஸ்ரீ ஸத்ய தேவர் எழுதியுள்ள 'ஸாதனஸமர' என்னும் உரையும், வாஸிஷ்ட கணபதி முனிவர் எழுதியுள்ள உமா ஸஹஸ்ரம் என்னும் நூலும் இந்த ஸப்த சதியில் பொதிந்துள்ள ரஹஸ்யார்த்தங்களையும் தத்துவங்களையும் விரிவாக விளக்குகின்றன.

இவற்றில் சொல்லியுள்ள கருத்துக்களையும் மனத்தில் கொண்டு வடமொழியிலுள்ள இந்த தேவி மாகாத்ம்யத்தைச் சுலோகம் சுலோகமாகத் தமிழில் மொழிபெயர்த்துத் தமிழ் மக்களுக்கு அளித்திருக்கிறார் தேவி பக்தர் திரு எஸ். சங்கரநாராயணன். மிகவும் விரிவாகக் கொடுக்கப்பட்ட முன்னுரை தேவி உபாசனை பற்றி ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை போன்றே சுவையுடன் அமைந்திருக்கிறது. பக்தியுடன் பாராயணம் செய்வோருக்கு உதவியாக பாராயணக்ரமங்களும் முதல் பாகத்தில் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இரண்டாவது பாகத்தில் மூன்று சரிதங்களாகக் கொண்ட தேவி பாகவதம் மூலமும் உரையும் அடங்கியுள்ளன. கடைசிப் பாகத்தில் தேவி உபாஸனைக்குச் சம்பந்தப்பட்ட தேவீஸூக்தம், பிரயோகம் முதலியவை கொடுக்கப்பட்டுள்ளன. ஏற்கனவே தேவி உபாசனை சம்பந்தமாக மஹிஷமர்தினி ஸ்தவம், சிவகவச ஸ்தோத்ரம் என்ற இரண்டு நூல்களை வெளியிட்டுள்ள இந் நூலாசிரியரின் முயற்சி பாராட்டத் தக்கது.

நுணுக்கங்களை ஆராய்ந்து மறைந்துள்ள கருத்துக்களைத் தெளிவுடன் விளக்கிக் காட்டியிருப்பது தேவி பக்தர்களுக்கு மிகவும் பயன்படும். பராசக்தி வழிபாட்டில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு இது ஒரு இன்றியமையாத புத்தகம். அவசியம் படிக்க வேண்டியது.

பிரசுரகர்த்தர்கள்: கிரி பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை - 5; பக்கம் 500; விலை ரூபாய் 7-00.

## லட்சாதிபதி லங்காசுந்தரம்

கொலை செய்யப்பட்டுப் பரகதி அடைந்துவிட்ட லட்சாதிபதி லங்காசுந்தரம் திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த இக்கதையின் அஸ்திவார புருஷர். அவர் சுடப்பட்டதைப் பார்த்துக் கொண்டிருந்த ஆசாமியும் கொலைகாரனால் சுடப்படுகிறான். அவன் பிழைத்து வந்து எப்படி இந்த மர்மக் கொலையைக் கண்டுபிடிக்கிறான் என்பதுதான் கதையின் சாரம். விறுவிறுப்பாகச் செல்லும் கதைப் பகுதிக்கு ஆசிரியரின் விறுவிறுப்பான தமிழ் நடை பெருதவியாயிருக்கிறது.

எழுதியவர்: வாசவன்; பிரசுரம்: வானதி பதிப்பகம் 82-11 பாண்டி பஜார், சென்னை-17; விலை: ரூ. 1-25.



இயற்கையின்



அற்புதம்

வேப்ப மரமும், வேலமரமும் இயற்கையின் சிருஷ்டிகள். இவைகளை உபயோகிப்பதால் பற்களுக்கு நன்மை என்பதை மனிதன் அறிந்தான். பிறகு இவைகளைக் காட்டிலும் ஒரு டூத் பிரஷ் சிறந்ததெனக் கண்டான். மனிதனுடைய சுபாவம் மேன்மேலும் சிறந்ததையே நாடுவது இயல்பு அல்லவா! அதற்கு ஏற்றவாறு சிறிதும் சந்தேகமில்லாது முன்னணியில் நிற்பது ஆரியன்.






## ஆரியன்
## டூத் பிரஷ்

நன்கு சுத்தம் செய்கிறது
நீடித்து உழைக்கிறது

---



# நரஸூ காபி

அருந்தி அதன்
பிரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்

நரஸுஸ்
மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.
சேலம் & சென்னை

NC 2-23 ARW



# விற்கப்படும் வெண்ணெய்களில் மிகச் சிறந்தது

புத்தம் புதிய வெண்ணெயின் நிகரற்ற சுவையைக் கொண்ட அமுல் வெண்ணெயை நீங்கள் ஒரு முறை சுவைத்த பிறகு வேறொன்றை நாடமாட்டீர்கள். எல்லா காலங்களிலும் புதிய சுத்தமான, சுவை மிகுந்த பால் ஆடையிலிருந்து இந்தியாவில் உள்ள ஒரே ஏர் கண்டிஷன் செய்யப்பட்ட வெண்ணெய் தொழிற்சாலையில் தயாரிக்கப் படுவது அமுல் வெண்ணெய். அமுல் என்ற பெயர் மாறுபடா தரம், உண்மையான மதிப்பு, உத்திரவாதத்துடன் கூடிய பரிசுத்தத் தன்மை இவற்றின் சின்னமாக விளங்குகிறது.

அமுல் வெண்ணெய் உலகிலேயே சிறந்த வெண்ணெய்க்கு ஈடானது என்று வெளி நாட்டு பால் பண்ணை நிபுணர்கள், மதிப்பிட்டிருப்பதில் வியப் பொன்றுமில்லை

## அமுல்

என்ற பெயரைக் குறிப்பிட்டுக் கேளுங்கள்




8 அவுன்ஸ், 1 பவுண்டு பாக் கட்டுகளில் கிடைக்கும் உங்களுடைய வசதிக்கேற்ற 6 அவுன்ஸ் 1 பவுண்டு டின்களிலும் கிடைக்கும்





கெய்ரா டிஸ்டிரிக்ட் கோஆபரேடிவ் மில்க் புரொடியூஸர்ஸ் யூனியன் லி. ஆனந்து (வெஸ்டர்ன் ரெயில்வே)

PSKMP-IA-18 TAM.




“மூன்சீப் கோர்ட் நாகநாதனுடைய வெகுமதி ஒரு பிளாஸ்க்.”

“சிக்னலர் ராஜாராமனுடைய வெகுமதி ஒரு ஹோல்டால்.”

“டிரெயின் கிளார்க் கோதண்டராமனுடைய வெகுமதி மகாகவி பாரதியாரின் கவிதைகள்.”

இப்படி எல்லா நண்பர்களும் வெகுமதியளித்தார்கள். ரமணி அவைகளை வாங்கிப் பெருமிதத்துடன் தன் மனைவி ரஞ்சனியின் கையில் கொடுத்துக் கொண்டிருந்தான். ரஞ்சனியும் உவகையுடன் வாங்கி வாங்கித் தன் பக்கத்தில் வைத்துக் கொண்டிருந்தாள்.

‘ஆகா! நம் கணவருக்குத்தான் எவ்வளவு செல்வாக்கு. இல்லா விட்டால் இவ்வளவு வெகுமதிகள் கிடைக்குமா? ஆகா! இப்படிப்பட்டவர் அல்லவா தன் கணவராக வாய்த்திருக்கிறார். நம் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்!’ என்று எண்ணிப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தாள் ரஞ்சனி.

“மாப்பிள்ளை சாருக்கு என்னுடைய திருமணப் பரிசு” என்று சொல்லி ஒருவர் காலிகோ துணியால் செய்த ஒரு வேலைப்பாடான ஒரு சிறிய பையைக் கொடுத்தார். அந்தப் பை எல்லோருடைய மனத்தையும் கவர்ந்தது. தலைநிமிர்ந்து பார்த்தாள் மணப்பெண் ரஞ்சனி.

‘அடப் பாவி நீயா?’ என்று அவள் அயர்ந்து விட்டாள். ‘இவன் எப்படி இங்கு வந்தான்? இவன் ஏன் பரிசு கொடுக்கிறான்? மாப்பிள்ளைக்குத் தெரிந்தவனா? அந்தப் பையில் என்ன......?’ என்று குழம்பினாள்.

“மாப்பிள்ளை சார்! கவரை இப்போது பிரிக்க வேண்டாம். தனியாகப் பிரித்துப் பார்க்கக் கூடாது. உங்கள் மனைவியுடன் சேர்ந்தே பிரித்துப் பார்க்க வேண்டும். உங்களுக்கு உபயோகமானது உள்ளே இருக்கும்” என்று சொல்லி விட்டு, ஏன் அவன் விஷமப் பார்வையைத் தன் மீது செலுத்த வேண்டும்?

மாப்பிள்ளைக்கு அந்த நண்பன் யார் என்று ஞாபகம் வரவே இல்லை. சட்டக் கல்லூரியில் அவனுடன் படித்தவர்கள் எவ்வளவோ பேர். அவர்களை யெல்லாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்வதென்றால் எளிதா?

மேலும் மேலும் நண்பர்கள் பரிசுகள் கொடுத்தபடி இருந்தார்கள். அவைகளை எல்லாம் ரமணியின் கையிலிருந்து வாங்கும் போது ரஞ்சனியின் கைகள் நடுங்கின.

‘அந்தப் படுபாவி ஏன் வந்தான்? அவன் கொடுத்தது என்னவாக இருக்கும்? ஒரு வேளை? அப்படியானால் அது தன் கணவனுக்குத் தெரிந்து விட்டால்? கல்யாணத்தன்றே வாழ்க்கைக் கப்பல் திசை மாறிவிடுமோ?’ அதற்குமேல் அவளால் உட்கார முடியவில்லை.

நல்லவேளை! ஆரத்தி எடுத்தார்கள். பெண்ணும் பிள்ளையும் எழுந்தார்கள்.

“ரஞ்சனி! எல்லாப் பரிசுகளையும் எடுத்து வை” என்று சொல்லி விட்டு அந்தச் சிவப்பு உறையை மட்டும் ரமணி தன் கையில் எடுத்துக் கொண்டான்.

ரஞ்சனிக்குத் தன் காலடியில் இருந்த பூமி நழுவி விழுவதுபோல் இருந்தது. வேகமாக உள்ளே ஓடினாள்.

அவள் கணவனைச் சுற்றி நண்பர்கள் குழாம்; பார்வையைப் பாய விட்டாள். அந்தப் பாவியைக் காணோம். அவன் இனிமேல் எதற்காக இருக்கிறான்? வந்த காரியம் முடிந்து விட்டது. எவ்வளவு காலமாகக் காத்திருந்தானோ பாவி!

ஒரு வேளை கணவனுக்குத் தெரிந்தவனாக இருக்குமோ? ஆனால் அப்படித் தெரியவில்லையே. வேண்டுமென்றே என்னைப் பழி வாங்க, என் மண வாழ்க்கையில் மண் தூவத்தான் வந்தான். இல்லா விட்டால் என்

லோரையும் போல் வெகுமதி கொடுக்காமல் ஒரு உறையைக் கொடுத்துவிட்டு, 'சாவகாசமாகப் படிக்கவும். உங்களுக்கு உபயோகமான விஷயம் இருக்கிறது' என்று வேறு சொல்லி விட்டுப் போனானே!

அவள் மனம் பின்னோக்கிப் பாய்ந்தது.

*

அவள் ஒரு மிராசுதாரின் பெண். நல்ல அழகி. நல்ல அறிவாளி. ஐந்தாவது வகுப்பு வரையில் உள்ளூரில் படித்தாள். அதற்கு மேல் உள்ளூரில் படிப்பு கிடையாது. அவளைப் பத்தாவது வரையில் படிக்க வைக்க அவள் அப்பா பெரிதும் விரும்பினார். ஆனால் அவள் தாய்க்கு விருப்பமில்லை. ரஞ்சனியோ மேலே படிக்கத்தான் படிப்பேன் என்று பிடிவாதம் பிடித்தாள். நல்ல வேளையாகப் பக்கத்து டவுனில் பத்தாவது வரை உயர்நிலைப் பள்ளி இருந்தது. அவர்கள் ஊரிலிருந்து பள்ளிக்கூட நேரத்துக்குச் சரியாக ரயில்களும் சென்று கொண்டிருந்தன. ரஞ்சனிக்கு ரயில்வே சீஸன் டிக்கெட் வாங்கிக் கொடுத்தார்கள். அவள் பள்ளிக்கூடம் போய் வரலானாள். படிப்பில் முதன்மையாக இருந்து ஆண்டு தோறும் பரிசுகள் வாங்கி வந்தாள்.

எஸ். எஸ். எல். ஸி. வகுப்புக்கு வந்தாள்.

ஒரு நாள் வண்டிக்கு வர நேரமாகி விட்டது. அவசரம் அவசரமாக ஓடி வந்தாள். வண்டியோ நகர்ந்து கொண்டிருந்தது. திறந்திருந்த ஒரு பெட்டியில் ஏற ஓடினாள். அவள் வண்டிப்படியில் காலை வைக்கும் போது காலை வாரி விட்டு விடும் போல் இருந்தது.

அதே சமயம் உள்ளே இருந்து ஒரு கை அவள் கையைப் பிடித்து உள்ளே இழுத்து விட்டது. நல்லவேளை! அப்படி அவளை உள்ளே இழுக்காவிட்டால் கால் தவறி அவள் வண்டியின் அடியில் சிக்கியிருக்க வேண்டும்.

தன் கையைப் பிடித்து ஏற்றி விட்டவருக்கு நன்றி சொல்ல அவரை நிமிர்ந்து நோக்கினாள். ஒரு ஆணழகன். கண் கொட்டாது அவளைப் பார்த்தான். அவள் கன்னம் நாணத்தினால் சிவந்து விட்டது.

"இப்படியா வேகமாக ஏறுவது? கால் தவறியிருந்தால்......!"

"என்னால் உங்களுக்குச் சிரமம்." கஷ்டப்பட்டு வார்த்தைகளை வெளியே தள்ளினாள்.

அதன் பின் அவர்கள் ஒருவரை யொருவர் தினமும் சந்தித்தார்கள். அவனுக்கும் அந்த டவுனில்தான் வேலை. பக்கத்து ஸ்டேஷனிலிருந்து தினமும் அவனும் சீஸன் டிக்கெட்டில் டவுனுக்கு வேலைக்குப் போக அதே ரயிலில் தான் வருவான். அவன் இருக்கும் வண்டியில்தான் ரஞ்சனியும் ஏறுவாள். மாலையிலும் இம்மாதிரியே வருவார்கள்.

அவனுக்குத் தாய் தகப்பன் கிடையாது. பரம ஏழை. ஆனால் ரஞ்சனியோ ஒரு மிராசுதாரின் பெண்.

அவள் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதி முடித்து விட்டாள்.

அன்று அவர்கள் கடைசியாக ரயிலில் பிரயாணம் செய்தார்கள்.

"ரஞ்சனி! இனி உன்னை எப்போது பார்ப்பது?" என்றான் அவ்வாலிபன்.

"எனக்கும் அதே ஏக்கம்தான். அப்பாவிடம் நேரில் வந்து பாருங்களேன்!"

"நீயே சொல்லேன்."

"அவ்வளவு தான் அப்பா உயிரோடு என்னைப் புதைத்து விடுவார்; இதற்குத்தானா படிக்க அனுப்பினேன் என்று சொல்லி என்னைக் கொன்றுவிடுவார்."

"அப்படியானால் நீ கோழையா?"

"கோழை யில்லை. ஆனால் அப்பாவுக்குத் தெரிந்தால்......"

"பரவாயில்லை. உன் அப்பாவிடம் கேட்கிறேன். அவர் சம்மதிக்காவிடில் என்னுடன் ஓடிவந்து விடுகிறாயா?"

அவளால் என்ன பதில் சொல்வது என்றே புரியவில்லை.

மறுநாளே அவன் அவள் அப்பாவிடம் நேரிடையே தனது விருப்பத்தைத் தெரிவிக்க வந்துவிட்டான். அவர் சீறி விழுந்தார்.

அவன் போய் விட்டான்.

ஒரு வாரம் கழித்து அவள் பள்ளிக்கூட நூல் நிலையப் புஸ்தகத்தைத் திருப்பிக் கொடுக்க ரயிலுக்கு வந்தாள். அவன் ஏறியிருந்த பெட்டியில் ஏறினாள். அவன் முகம் கொடுத்துப் பேசவில்லை.

"என்னை மன்னித்து விடுங்கள்" என்று அவள் கெஞ்சினாள்.

"உன் அப்பாவிடம் சொல்லத் தைரியமில்லை உனக்கு. நீ மகா கோழை."

"எனக்குப் பயமாக இருக்கிறது!"

"எனக்குக் கடிதம் எழுதும் போது மட்டும் பயமா யில்லையாக்கும். இப்போது எங்கிருந்து இந்த பயம் வந்தது?"

அப்போதுதான் அவள் முதன் முதலாகத் தன் பிழையை உணரலானாள். புது மோகத்தில் அவள் அவனுக்கு நாலைந்து கடிதங்கள் எழுதியதுண்டு. ஆனால் அன்று அது தவறாகப் படவில்லை. ஆனால் இன்று, அது பெரும் விபரீதமாகவல்லவா ஆகி விட்டது?

"அந்தக் கடிதங்களை என்னிடம் திருப்பிக் கொடுத்து விடுங்கள்!" என்றாள் ரஞ்சனி.

"திருப்பிக் கொடுக்கவா அதைப் பத்திரப் படுத்தினேன்? உன் அப்பாவிடமே காட்டி அவர் மூஞ்சியில் கரியைத் தீட்டியிருப்பேன். அது கூடாது. உன் அப்பாவிடம் காட்டிப் பிரயோசனம் இல்லை. உனக்கு வரப்போகும் கணவனிடமல்லவா காட்ட வேண்டும்!"

ரஞ்சனி அவனுடைய காலில் விழாத குறையாக எத்தனையோ விதத்தில் அவனைக் கடிதங்களைத் தரும்படி கெஞ்சிப் பார்த்தாள்.

கடைசியில் அவன் "நீ என்னை வஞ்சித்தாலும் நான் உன்னை வஞ்சிக்க விரும்பவில்லை" என்று சொல்லிக் கடிதங்களைத் தானே கிழித்து போட்டுவிடுவதாகச் சொன்னான்.

அதன் பின் ஒரு வருடம் ஓடி விட்டது. அவனுக்கும் வேறு ஊருக்கு மாற்றலாகி விட்டது.

இன்று அவளுக்குக் கலியாணம். அவள் கணவன் வக்கீலுக்குப் படிக்கிறார். ஏராளமான நண்பர்கள் வந்திருந்தார்கள். ஏராளமான பரிசுகளும் வழங்கினார்கள்.

அந்தப் பாவியும் வந்திருக்கிறான். ஒரு மணி நேரமாகி விட்டது. தன் கணவன் அதைப் பிரித்து பார்த்துவிட்டால் தன் கதி...!

# எழில் மிக்க ரெய்ப்பூர் ஆடைகள்



பாப்லின்கள்

ஷர்ட்டிங்குகள்

மோர்னிவான்டு வேஷ்டிகள்

பிரின்டட் வாயில்கள் மற்றும் லான்கள்

SANFORIZED

## ரெய்ப்பூர் மில்ஸ் லிட்.

அஹமதாபாத்

மெஸர்ஸ் அஜிட்பாய் ஜயந்திலால் & கோ;
5, இடங்கு தெரு, சென்னை

மெஸர்ஸ் கணேஷ்மல் பிரதாப்மல் & கோ;
ரத வீதி, பெல்லாரி



வாணவேடிக்கைகள் வெடித்துச்
சுற்றியுள்ள சந்தோஷமான
முகங்களைப் பிரகாசிக்கச் செய்வது
போல, முன் யோசனையுடன்
தேர்ந்தெடுக்கப்படும் பரிசு
பண்டிகை தின உற்சாக
மனப்பான்மையை
அதிகரிக்கச் செய்கிறது.
நாற்காலி பஞ்சணைகள்
வட்டமான திருப்பக்கூடிய
பஞ்சணைகள்
சதுரமான திருப்பக்கூடிய
பஞ்சணைகள்,
படுக்கை மெத்தைகள்
தலையணைகள்,
திண்டு,
பிரயாணப் பெட்டி
டன்லபில்லோ
எல்லாச்
சந்தர்ப்பங்களுக்கும்
தகுதியான
பரிசாகும்
DPC-91 TM

"மன்னி, மன்னி! எங்கெல்லாம் தேடுகிறது உன்னை? அண்ணா தேடுகிறார்" என்று அவளுடைய கணவரின் தங்கை வந்து கூப்பிட்டாள். அவளுக்குப் பதில் பேச நா எழவில்லை.

"சீக்கிரம் வா. ஒரு நண்பர் கொடுத்தாரே அந்த உறையைப் பிரிக்க வேண்டுமாம். இருவரும் சேர்ந்தே பிரிக்க வேண்டுமாம்!"

உலகமே இருண்டு விட்டது போல் இருந்தது ரஞ்சனிக்கு. அவள் கணவனின் தங்கை அவளைக் கரகரவென்று இழுத்துக் கொண்டு அவனிடம் போனாள்.

"என்ன, பிரிக்கலாமா?" என்று அவள் கணவர் கேட்டார்.

அவளால் பதில் பேச முடியவில்லை.

"பிரியேன், அண்ணா!"

அவன் பிரித்தான்.

அதிலிருந்து ஒரு குழந்தையின் போட்டோ விழுந்தது. அதன் அடியில் "ஒரு வருடத்துக்குள் உடனடியாகத் தேவை" என்று எழுதப்பட்டிருந்ததை மூவரும் பார்த்தார்கள். எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

அவ்வளவுதான்; ரஞ்சனிக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. தன்னைப் பழி வாங்க அந்தக் கடிதங்களை அதில் வைத்துக் கொடுத்திருப்பான் என்று எதிர்பார்த்தவளுக்கு அவன் ஏன் அவைகளை வைக்காமல் இப்படிச் செய்தான்? புரியாத புதிராக இருந்தது. அவன் நல்லவனோ, கெட்டவனோ அவனுக்கு மானசீகமாக அஞ்சலி செய்தாள்.

"குறும்புக்கார நண்பன். ஆனால் அவனை எனக்குச் சரியாக ஞாபகம் வரவில்லை" என்றான் அவள் கணவன்.

"பரிசு கொடுத்த பிறகு அவரைக் காணுமே!" என்றாள் அவள் நாத்தனார்.

மறுநாள் இரவு ரஞ்சனியும் அவள் கணவனின் தங்கையும் தனியாகப் பேசிக் கொண்டிருந்த போது, "மன்னி! இந்தா இந்தக் கடிதங்களை உன் கைகளாலேயே கிழித்து விடு" என்று கொடுத்தாள். திடுக்கிட்டாள் ரஞ்சனி.

அவ்வளவும் ரஞ்சனி எழுதியவை.

"இவை உன்னிடம் எப்படி வந்தன?"

"முதலில் இவைகளைக் கிழித்துப் போடு. பிறகு சொல்கிறேன்" என்றாள்.

ரஞ்சனி அவற்றைச் சுக்குநூறாகக் கிழித்தெறிந்தாள்.

ரஞ்சனியின் நாத்தனார் சொன்னாள்: "மன்னி! ஒரு நண்பர் ஒரு காகித உறையைக் கொடுத்து நீயும் உன் மனைவியும் சேர்ந்து பிரித்துப் பார்க்கவும் என்று சொன்னார் அல்லவா? உடனே எனக்கு விஷயம் விளங்கி விட்டது. அப்பொழுது உன் முகம் போன போக்கையும் கவனித்தேன். இப்படித்தான் மூன்று வருடங்களுக்கு முன்பு எனக்குக் கலியாணமான போது திடீரென்று ஒருவர் இதே மாதிரி என் கணவருக்கு ஒரு காகித உறை பரிசு கொடுத்தார். அவர் வேறு யாரும் இல்லை. அவருக்கும் எனக்கும் கல்லூரியில் படிக்கும்போது நெருங்கிய பழக்கம் உண்டு. ஆனால் தவறான வழியில் இறங்கவில்லை. அவருக்கும் எனக்கும் கலியாணம் ஆகச் சில இடையூறுகள் இருந்ததால் முடியாமல் போய்விட்டது. என்னைப் பழி வாங்க அவர் அவைகளைப் பத்திரப்படுத்தி என் கணவருக்கு அவைகளை உறையில் போட்டுத் திருமணப் பரிசு என்று கொடுத்தார். ஆனால் என் கணவர் அதைப் பிரிக்காமலே அப்படியே என்னிடம் கொடுத்து விட்டார். நான் அவரிடம் உண்மையைச் சொன்னேன். 'அடி, அசடே! இக்காலத்தில் இப்படிப்பட்ட சில கயவர்கள் பெண்களைக் கவர்ந்து பிறகு பழிவாங்குவது சகஜமாகி விட்டது. கிழித்தெறி அவைகளை' என்றார்.

அவர் அவைகளைப் பார்த்தால் என் வாழ்வே குட்டிச்சுவராகி விடும் என்று நான் பயந்து அணு அணுவாகச் செத்துக் கொண்டிருந்த போது அந்த உறையை என் கையிலேயே கொடுத்துக் கிழித்தெறி என்று சொல்ல எல்லாக் கணவர்களுமே நல்லவர்களாக இருக்க மாட்டார்கள். அதே மாதிரி இன்று அவர் பரிசாகக் கொடுத்ததும் இப்படித்தான் இருக்கும் என்று நினைத்தேன்.

அண்ணா சிநேகிதர்கள் மத்தியில் இருக்கும் போது, 'அண்ணா! அந்த உறையைக் கொடு, பார்க்கலாம். நல்ல வேலைப்பாடுடைய பையாக இருக்கிறதே' என்று சொன்னேன். 'நீ பாட்டிலே அதை உடைக்கப் பார்த்து விடாதே. நானும் உன் மன்னியும் சேர்ந்து உடைக்க வேண்டும்' என்றான். 'உடைப்பேனா, அண்ணா! எனக்கு தெரியாதா' என்று சொல்லி வாங்கினேன். நாங்கள் தங்கி இருக்கும் ஜாகைக்குப் போனேன். மெதுவாக அறையில் போய்த் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு பிரித்த சுவடே தெரியாமல் பின் பக்கம் பிரித்துப் பார்த்தேன். நான் நினைத்தபடியே கடிதங்கள் இருந்தன. அவைகளை எடுத்து விட்டேன். அங்கு கிடந்த ஒரு ஆங்கிலப் பத்திரிகையில் முழுக்க முழுக்க குழந்தைப் படங்களாக இருந்தன. அதில் ஒரு படத்தைக் கிழித்து அதனடியில், 'உடனே ஒரு வருடத்துக்குள் தேவை' என்று எழுதி அதில் வைத்துவிட்டுக் கவரை முன் போல் ஒட்டி விட்டேன். நல்லவேளை! அண்ணாவும் ஒரு மணி நேரம் வரை என்னைத் தேடவில்லை. அதற்குள் கவர் ஒட்டிய சாரும் காய்ந்து விட்டது. அண்ணாவுக்கும் சந்தேகம் வரவில்லை" என்றாள்.

"நீ எனக்குக் கண்கண்ட தெய்வம். இல்லாவிட்டால் அந்தக் கடிதங்கள் உன் அண்ணா கண்ணில் பட்டிருந்தால் என் கதி..." என்று ரஞ்சனி சொல்லிக் கொண்டிருக்கும்போதே, "அதனால் என்ன குடியா முழுகிவிடும்? நானே அவைகளை உன் கையில் கொடுத்துக் கிழித்தெறியச் சொல்லியிருப்பேன். எனக்குப் பழக்கமில்லாத ஒருவன் ஒரு கவரைப் பரிசாகக் கொடுப்பதானால் அதில் ஏதோ உன்னைப் பற்றிய மர்மம் இருக்க வேண்டும் என்று எனக்குத் தெரியாதா? சில பெண்கள் பருவ மயக்கத்தில் செய்துவிடும் சில அசட்டுத்தனமான காரியங்களைத் தங்களுக்குச் சாதகமாக்கிப் பழி வாங்க விரும்பும் சில சமூக விரோதிகளிடம் நாம் இப்படித்தான் நடக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர்களுக்கு இன்னும் தைரியம் உண்டாகிவிடும்" என்றார் திடீரென்று அங்கு வந்த என் கணவர்.

'அடாடா! எவ்வளவு பெருந்தன்மையான கணவர்' என்று பூரித்துப்போனாள் ரஞ்சனி.

# பம்பாயில் கலைநிகழ்ச்சிகள்

**ப**ம்பாயில் சிறந்த நாடகப் பள்ளியான கலாசதனைச் சேர்ந்த குமாரி ஹேமாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் போதார் கல்லூரி ஹாலில் சிறப்பாக நடந்தேறியது. இவ்வைபவத்துக்குத் திரு ஆர். வி. மூர்த்தி அவர்கள் தலைமைவகித்துக்குமாரி ஹேமாவின் நாட்டியத்தைப் பாராட்டினர்.



**ப**ம்பாயில் 14-9.58 ஞாயிற்றுக்கிழமை அன்று 'பாரதி கலா சாரமன்றம்' பாரதி விழாவைச் சிறப்பாக நடத்தியது. அவ்விழாவுக்கு ஒய்வுபெற்ற வருமான வரி கமிஷனர் திரு வி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் தலைமை வகித்தார். இம்மன்றம் பம்பாயில் சிறந்த கல்லூரிகளுள் ஒன்றான கால்சா கல்லூரி மாணவர்கள் மன்றமாகும். இது சுமார் நான்கு வருடங்களுக்குமுன் நிறுவப்பட்டதாகும். விழாவில் சொற்பொழிவுகள், கர்நாடக சங்கீதம், நாட்டியம், நிழல் காட்சி நாடகம் முதலியன இடம் பெற்றன. பல அறிஞர்களிடமிருந்து வாழ்த்துக்கள் வந்திருந்தன.

**க**டந்த நான்கு ஆண்டுகளாகக் கலை, இலக்கியம் ஆகிய துறைகளில் சிறந்த முறையில் தொண்டாற்றி வரும் 'பம்பாய் பாரதி கலாமன்றம்' இவ்வாண்டும் பாரதி விழாவைச் செப்டம்பர் 26, 27, 28 ஆகிய மூன்று தினங்களில் மாதுங்கா நப்பு ஹாலில் கொண்டாடியது. இவ்விழாவுக்கு அம்பாசமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழ் ஆசிரியர் திரு வெ. குஞ்சிதபாதம் அவர்கள் தலைமை வகித்துப் பல அரிய கருத்துக்களைப் பற்றிச் சிறந்த சொற்பொழிவு நிகழ்த்தினார். பம்பாய் உதவி சுங்க அதிகாரி திரு ராமாராவ் அவர்கள் விழாவை ஆரம்பித்து வைத்தார்.

திரு லால்குடி ஜெயராமன் அவர்களின் சிஷ்யை குமாரி ஏ. சுப்புலட்சுமியின் வயலின் கச்சேரியும், திரு என். டி. ராஜகோபாலனின் இசை நிகழ்ச்சியும் நடந்தன.

பம்பாய் பாரதி கலா மன்றத்தின் கலைவிழாவில் தலைமை வகித்த திரு வி. குஞ்சிதபாதம் அவர்களுக்குத் திரு நடேசன் வாழ்த்துப் பத்திரம் வழங்கினர்.



பாரதி கலா மன்ற விழாவில் ஒரு காட்சி.

'**ப**ம்பாய் தமிழ்ச் சங்கம்' செப்டம்பர் 20, 21 ஆகிய தேதிகளில் அமரகவி பாரதியின் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடியது. விழாவுக்கு மதுரைத் தியாகராஜர்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு அ.மு.பரமசிவானந்தம் தலைமை வகித்தார். முதல் நாள் அன்று தலைவர் வரவேற்புரைக்குப் பிறகு வித்துவான் ஸ்ரீமதி அ. கி. ஜயலட்சுமி இறை வணக்கமும், பண்டிதர் செ. சுப்பாராவ், ந. பிச்சமணி ஆகியவர்கள் கவிதாஞ்சலியும் செய்தனர். பிறகு திரு அ. மு. பரமசிவானந்தம் 'எத்தனை கோடி இன்பம்' என்பதைப் பற்றி விரிவாகச் சிறந்த உரை நிகழ்த்தினார். 'காதலும் கடவுளும்' என்பதைப் பற்றியும் சிறப்பான முறையில் பேசினார். மறுநாள் திரு கே. எம். சுந்தரம், திரு ஒய். ராமசாமி, திரு டி. வெங்கடகிருஷ்ணன் ஆகியோர் முறையே அரசியல், சமூகம், சமயம் என்பன பற்றி உரை நிகழ்த்தினர். "வீரமும் ஈரமும்" என்பது பற்றித் திரு அ. மு. பரமசிவானந்தம் பேசினார்.

இரவு ராஜேசுவரி கலா மந்திர் மாணவிகள் குமாரி உமாராணி, அனுராதா இருவரும் ஸ்ரீமதி சாவித்திரி சத்தியமூர்த்தியால் பாடப்பட்ட பாரதி பாடல்களுக்கு அபிநயம் பிடித்தது சிறப்பாக இருந்தது.

# லயன்ஸ் கிளப் பின் சேவை

ஏழை அன்னதானம் செய்யவேண்டுமென்றால், எண்ணம் உயர்ந்ததாக இருந்தாலும் காரியம் நிறைவேறாது. தனிகர்களிடம்தான் இவ்வித உணர்ச்சி உண்டாக வேண்டும். அவ்வாறு ஏற்பட்டால் அவர்கள் செல்வம் படைத்ததற்குப் பயன் உண்டு. அவர்களுக்கும் சிறப்புண்டு. அப்படிப்பட்டவர்கள் தனிப்பட்டவர்களாக இருந்தாலும், ஒரு குழுவினராக இருந்தாலும் ஒரு ஸ்தாபனமாக இருந்தாலும் போற்றிப் பாராட்டத் தகுதி வாய்ந்தவர்கள்.

அப்படிப்பட்ட ஸ்தாபனங்களில் ஒன்று ''லயன்ஸ் கிளப்'' என்பது. மற்ற கிளப்புகள் போன்று பல அங்கத்தினர்களைக் கொண்டது. ஆனால் அரசியல் பற்றற்று, ஜாதி, மத, இனக் கொள்கை சார்பில்லாது, சமூக சேவையை முக்கிய குறிக்கோளாகக் கொண்டு இயங்கும் ஸ்தாபனம் இது. வர்த்தகப் பிரமுகர்களையும் தொழில் முறையில் முன் நிற்பவர்களையும் அங்கத்தினர்களாகக் கொண்டது. மனுப் போட்டு இதில் அங்கத்தினராகச் சேர முடியாது. மற்றவர்கள் அழைப்பின் பேரிலேயே புதியவர்களுக்கு இதில் இடம் கிடைக்கும்.

''கிளப்''பின் நோக்கங்கள் உன்னதமானவை. உலக மக்களிடையே நல்லுறவையும் தாராள மனப்பான்மையையும் வளர்ப்பது; நல்லாட்சியையும் பொறுப்புள்ள பிரஜைகளையும் உருவாக்கிப் போஷிப்பது; சமூக, வர்த்தக, நீதிநெறி முறைகளில் பங்கு கொள்வது; அங்கத்தினர்களிடையே நட்பையும் ஆதரவையும் வளர்ப்பது; பொது விஷயங்கள் பற்றி விவாத அரங்குகள் நடத்துவது; வியாபாரத்திலும் தொழிலிலும் நேர்மையைப் புகுத்திப் போஷிப்பது; மற்றும் இவை போன்றவை.

படிப்பதற்கு நன்றாக இருக்கிறதே, செயல் முறையில்தானே குறைபாடுகள் சாதாரணமாகக் காணப்படுகின்றன என்று எண்ணுபவர்களுக்கு இதோ இச் சங்கத்தினர்கள் கடைப்பிடிக்கும் சில கோட்பாடுகளைக் கேளுங்கள். ''தங்கள் தங்கள் தொழில் உயர்வானது, தாங்கள் அத்தொழிலுக்கு எவ்விதத்திலும் ஏற்றவர்கள் என்ற மனோபாவனையுடன் செயல் புரிதல்; நியாயமான லாபமோ, ஊதியமோ பெற்றுத் திருப்தியடைவதுடன், உழைப்புக்கு அதிகமான லாபத்துக்கு ஆசைப்படாமை; தன் சுய கௌரவத்தைப் பறி கொடுத்தோ, அக்கிரமமான வழிகளிலோ, இழுக்குண்டாக்கும் நடவடிக்கைகள் மூலமோ பொருளீட்டாமை; தன் வியாபாரம் பெருக மற்றவர்கள் வியாபாரத்தைக் கெடுக்க வேண்டிய அவசியமில்லை என்ற உணர்ச்சி; கஷ்டப்படுவோருக்குத் தன்னாலான உதவியைத் தயங்காது வழங்குதல்; மற்றவர் குறைகளைப் பற்றி மனம் நோகும்படி பேசாது குணங்களை மட்டும் எடுத்துக் கூறல்; ஆக்க வேலை தவிர அழிக்கும் பணியை மேற்கொள்ளாமை — இவை போன்ற சீரிய கருத்துக்களைச் செயல் முறை நெறிகளாக இச்சங்கம் கடைப்பிடித்து வருகிறது.

வர்த்தகர்களைப் பிரதானமாகக் கொண்ட சமூகமாதலால், அவர்களுக்கு இவையனைத்தும் முக்கியமானவைதான் என்பது விளங்கும். ஏட்டளவில்தானே இவையனைத்தும் என்று சந்தேகிக்க வேண்டாம். உண்மையிலேயே செயல் முறையிலும் கூட நடத்திக் காட்டுகிறது இச்சங்கம். ஆறு கண்டங்களில், தொண்ணூற்று இரண்டு தேசங்களில், 13,300 'லயன்ஸ் கிளப்'புகள் செயல் புரிகின்றன. சுமார் ஆறு லக்ஷம் அங்கத்தினர்கள் இருக்கின்றனர். இந்தியாவில் மட்டும் 31 பெரிய நகரங்களில் லயன்ஸ்கிளப்புகள் இருக்கின்றன. 27,000 குழந்தைகளுக்கு எல்லா கிளப்புகளும் இலவசமாகப் பால்விநியோகம் செய்து வருகின்றன. சர்வதேச லயன்ஸ் ஸ்தாபனத்தில் 304 வது ஜில்லா இந்தியா. இது சமூக சேவையில் சிறப்புற்ற ஜில்லா என்று பெயரெடுத்திருக்கிறது. சர்வதேச லயன்ஸ் ஸ்தாபனம் சிகாகோ நகரிலிருந்து செயல் புரிகிறது.

கோவை மாநகரத்தில் செயல் புரியும் லயன்ஸ் கிளப் சமீபத்தில் அதன் சாசன தினத்தை ஒரு விழாவாகக் கொண்டாடியது. இச் சங்கம் மேற்கொண்டுள்ள பணிகள், இலவச வைத்திய உதவி, இலவச புத்தக விநியோகம், இலவச ஆடைகள் வழங்குதல் முதலியவை. இந்த ஆண்டில் இலவசக் கல்வியளிக்க விரிவான திட்டங்கள் போடப்பட்டு, சுமார் ரூ. 30,000க்கு மேல் நிதியும் வசூல் செய்திருக்கிறார்கள். கோவை லயன்ஸ் கிளப் இவ்வளவு சுறுசுறுப்புடன் பணியாற்ற அதன் தலைவர் ஜி. கிருஷ்ணன் அவர்களின் உத்சாகத்தைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

சென்னையில் செயல் புரியும் லயன்ஸ் கிளப்பினர் சென்ற அக்டோபர் 5உ தேனாம்பேட்டையிலுள்ள ''லிட்டில் பிளவர் கான்வென்ட்'' பள்ளியிலுள்ள 250 அநாதைக் குழந்தைகளுக்கு உணவு வழங்கினர். இச்சங்கத்தவர்கள் செய்யும் இம்மாதிரி சேவை மேன்மேலும் பெருகட்டும். மனிதப் பண்பு உயரட்டும்.



கோவை லயன்ஸ் கிளப்பின் தலைவர் திரு லயன்' கிருஷ்ணன் அனைவரையும் வரவேற்றுப் பேசுகிறார். அருகில் லயன்ஸ் கிளப் இந்தியக் கிளையின் கவர்னர் திரு என். என். பண்டாராவும் ஸ்ரீமதி பாக்கியலக்ஷ்மி கிருஷ்ணனும் அமர்ந்திருக்கின்றனர்

கூத்தநிக்காடு என்று அந்த ஊருக்குப் பெயர். குக்கிராமம். அதன் வடக்குக் கோடியில்தான் சலவைத் தொழிலாளர் குடும்பங்கள் இருந்தன. அவற்றில் கறுப்பனின் குடும்பமும் ஒன்று. அவன், அவனை நம்பியிருந்த அவனுடைய நித்திய வியாதிக்காரியான மனைவி ராக்காயி, அவன் மகன் சொக்கப்பன் ஆகிய மூவருக்கும் தலைமுறை தத்துவமாகக் கைக்கொண்டிருந்த 'வெளுப்பு வேலை' படியளக்கவில்லை. ஆகவே, அவன் திக்குமுக்காடிப் போனான்.

கிடைத்து வந்த வரும்படி வாய்க்கும் கைக்குமே பற்றும் பற்றாததாக இருந்தது.

இப்படியிருக்கும்பொழுதுதான் ஒரு நாள், அடம் பிடிக்கும் பணக்காரக் குழந்தையைப் போல் மழை நின்று நின்று பெய்தது. பின்னங்கால்கள் இரண்டும் கட்டப்பட்டு வாசலில் நின்ற கழுதையைப் பிடித்து வந்து வாசல் தாழ்வாரத்தில் கட்டுவதற்குள் வியாதிக்காரியான ராக்காயிக்கு மேல மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. மழையில் வேறு நனைந்து விட்டாள். அதைச் சாக்காகக் கொண்டு குளிர்க் காய்ச்சல் வந்து விட்டது அவளுக்கு. வெளுப்பதற்கு வந்திருந்த புடவைகள் அத்தனையையும் அவள்மேல் போர்த்தியுங்கூட, அவள் உடம்பு நடுங்கிக் கொண்டேயிருந்தது. இக் காட்சியைக் கண்டதும் கறுப்பன் பதறித் துடித்தான். ஓடிப் போய் உண்டியற் கலயத்தைக் கையில் எடுத்துச் சில்லறைக் காசுகளைச் சேர்த்தான். அரை ரூபாய் சேர்ந்திருந்தது. எடுத்து முடிந்துகொண்டு, காட்டு வைத்தியர் வீட்டுக்கு ஓட்டமாக ஓடினான்.



வந்த வைத்தியர் நாடிப் பரிசோதனை செய்தார். இது கபவாத ஜுரம். ''செட்டித் தெருவிலே இருக்கும் புது டாக்டர் ஐயாவைக் கூட்டியாந்து பாரு கறுப்பா! ஆனால் அவர் ரொம்பக் கறார் ஆசாமியாம். பத்து அஞ்சு பணத்தைக் கொடுத்துக் கையோடு அழைத்து வந்துகாட்டு. மூன்று நாலு ஊசி ஏத்தினால் எல்லாம் வசத்துக்கு வந்துவிடும்!'' என்றார் நாட்டு வைத்தியர்.

மண்ணால் செய்யப்பட்ட ஐயனார் போல் கறுப்பன் மருண்டு போய் நின்று விட்டான். 'ராக்காயிக்குச் சீக்கு ரொம்ப மிதமிஞ்சிப் போச்சப்போலே. இல்லாட்டி, தனக்கு வருகிற வரும்படியை விட்டுப் போட்டு, டாக்டர் ஐயாவை எதற்குக் கைகாட்டிப் போகணும்?......டாக்டர் பணத்திலே கறிகாரர்னு முந்தாநாள்கூட யாரோ பேசிக்கிட்டாங்க. அவருக்குப் பத்து அஞ்சு கொடுக்கிறதுக்கு இப்ப நான் எங்கே போவேன்?' என்று நெஞ்சம் நெக்குருகினான் கறுப்பன்.

தெரிந்த 'எசமானர்'களிடம் பல்லைக் காட்டி, வழிமறித்திருக்கும் தலைவிதியை எடுத்துக் காட்டி, பணம் கடன் கேட்டான். தலையை வைத்து, ''வட்டிக்காசையும், தந்திடறேனுங்க; காசு பணம் ஏதும் வாங்காமல் உங்கள் துணி மணிகளை யெல்லாம் சலவை செஞ்சு தாரேனுங்க!'' என்று என்னவெல்லாமோ சொல்லிப் பார்த்தான். எந்தக் கலையும் அவனுக்கு நல்ல பதில் கூறவில்லை. கடைசியில் ஏமாற்றமே உயிராகக் குடிசையின் உள் விட்டறைக்கு நடந்தான். கள்ளிப்பெட்டியைத் துழாவினான்; செப்புத் திருகாணிகூடக் கைக்குள் சிக்கக் காணோம். மிளகாய்ப் பானைக்குள் கையை நுழைத்தெடுத்தான். ஏதோ ஒரு பொருள்! பார்த்தான். திடுக்கிட்டான். தாலி! தங்கத் தாலி! ராக்காயியின் கழுத்தில் இருபத்தொன்பது வருஷங்களுக்கு முன் பூட்டிய மங்கலச்சின்னம்அது. நினைவுகள் தறிகெட்டுச் சுற்றின; அவன் பம்பரமாகச் சுழன்றான். மூன்றாம் மாசம் ராக்காயி குளித்துக் கொண்டிருக்கையில், தங்கத் தாலியின் பின் பக்க இணைப்பில் பிளவு கண்டிருப்பதை உணர்ந்தாள்; மஞ்சள் ஒன்றை வீட்டுக்கு வந்து எடுத்துக் குலதெய்வத்தை 'நேர்ந்து கொண்டு' மஞ்சள் நடவின கயிற்றில் முடிந்து கழுத்தில் அணிந்து கொண்டாள். 'ஆசாரியிடம் 'பத்தவைச்சுத் தந்திடுறேன்!'' என்று மனைவியிடம் அளித்த உறுதியைச் செயற்படுத்துவதற்கு அவனுக்கு ஓய்வு இடம் கொடுத்தால் தானே?

ராக்காயியின் உயிரையும் தன் உள்ளத்தையும் அடைத்து வைத்திருந்த அந்தத் தாலியையே இமை மூடாமல் பார்த்தவாறு இருந்த கறுப்பனுக்கு ஏதேதோ பயங்கரமான எண்ணங்கள் படமெடுக்கும் பாம்புகளாக உருமாறிச் சீறத் தொடங்கின.

''அய்ய... ஆத்தா...சாமி!''

உயிர்ப் பாகத்தில் இவ்வார்த்தைகள் எதிரொலித்தன. ஒருகணம் சிந்தித்தான்; அவன் கைகள் கூம்பின; கண்ணீரை வழித்தெறிந்து விட்டு, கைக்குள் அடங்கியிருந்த தாலியுடன் டாக்டரை நாடிப் பறந்தான். செட்டித் தெருவில் கும்மிருட்டு அப்பிக் கிடந்தது. கீழத் தெருவிலிருந்து ஊளையிட்ட நாயின் அவல ஓலம் அவனை அச்சுறுத்தியது. கைக்கழியைக் கீழே போட்டுவிட்டு, ''டாக்டர் ஐயா!'' என்று குரல் கொடுத்தான்.

தூக்கம் கலைக்கப்பட்ட டாக்டருடன், தூண்டி விடப்பட்ட கோபமும் வந்தது.

மென்று விழுங்கிக் கொண்டே விஷயத்தை வெளியிட்ட ஏழை, அவர் வாய் திறந்து பணத்தைப் பற்றிக் கேட்பதற்கு முன்பாகவே தான் கொணர்ந்த தாலியை அவர் காலடியில் வைத்து விம்மியவாறே, ''இதை நம்பிக்கைக்கு வைச்சுக்கிடுங்க, எசமான்! அடுத்த கிழமை பீசுப் பணம் பூராத்தையும்

## உங்கள் அழகே உங்களுக்கு ஆபரணம்...
## உங்கள் முக சருமத்தை மென்மையாயும் அழகாயும் வைக்க

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

## உபயோகியுங்கள்

'மிருதுவானதும், குளுமையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்திற்குப் பாதுகாப்பு அளித்து, அதை அழகுடனும், இளமையுடனும் வைக்கும்! இது எண்ணெய்ப் பசை யற்றது. மற்றும் முகத்தில் தடவிய சிறிதே விநாடிகளில் மறைந்து விடு கிறது. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.'



### சருமத்தை சுத்திகரிக்கும் அற்புதமான க்ரீம்

தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமை உங்கள் முகத்தில் தடவுங்கள். அது சருமத்தை சுத்தம் செய்து, சருமம் மிருதுத்தன்மையற்றுப் போவதையும், சருமத்துவாரங்கள் வரண்டு போவதையும் தடுக்கிறது. அன்றாடம் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உபயோகித்து, உங்கள் அழகுக்கு தகுந்த பாதுகாப்பு அளியுங்கள்.




### இலவச புத்தகம்

"LOVELIER WITH POND'S" என்ற எமது இலவச புத்தகத்தை வரவழையுங்கள். இதில் அழகு பராமரிப்பு பற்றி உபயோகமான குறிப்புகள் அடங்கியுள்ளன. பி. ஓ. பாக்ஸ் 1613, டிபார்ட்மெண்ட் நெ. 357, பம்பாய்-1 என்ற விலாசத்திற்கு 25 நயா பைசா ஸ்டாம்புடன் எழுதவும்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

கட்டிப்பிட்டு, இதை மீட்டுக்கிட்டுப் போகி றேன். இது என்னுடைய சம்சாரத்தினுடை யது. அந்தப் பொம்பளைக்குத்தான் இப்ப சீக்கு அதிகமாயிருக்கு. நீங்கதான் எனக்குத் தெய்வம் கணக்கிலே! அட்டி சொல்லாமல் வந்து பாருங்க!'' என்றான்.

டாக்டர் நாகசுந்தரத்தின் வீட்டுப் பெட்டி யில் அந்தத் 'தாலி' அடங்கியது.

'' சரி, வண்டி கொண்டு வரலையா ?''

'' இல்லீங்க !''

'' இப்போ காட்டிலேயும் மேட்டிலேயும் அந்தக் கும்மிருட்டிலே எப்படி நான் நடந்து வர்றது ?'' என்று கேட்டார் டாக்டர்.

'' இருங்க, இந்தா கொண்டு வாரேன் !'' என்று திரும்பிய கறுப்பன் மொட்டை வண்டி யுடன் வந்து டாக்டரை ஏற்றிச் சென்றான்.

மூன்று நாட்கள்! ராக்காயிக்குச் சுயநினைவு திரும்பவில்லை. ஊசி மருந்து டப்பாக்கள் செலவழிந்தன ; மருந்துக் கலவைகள் உட லுக்குள் முடங்கின. ஆனால் நான்காவது நாள் டாக்டரை அழைத்து வர இரவல் மாட்டு வண்டியைத் தேடிச் செல்ல வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

ஏறு முகத்தில் இருந்தான் செஞ்சுடர்ச் செல்வன்.

இரட்டைவடச் சங்கிலி அறிமுகப்படுத்திக் கொண்டிருந்த தங்கத்தாலி கறுப்பனின் உள்ளங்கையில் நெல்லிக்கனியாகக் காட்சி யளித்தது. அதிகமானுக்குக் கிடைத்த நெல் லிக்கனி ஔவைப் பிராட்டிக்கு உதவ முனைந் தாற்போல, ஒருவேளை, இந்தத் தாலி இவ னுக்குக் கை கொடுக்கப் போகிறதோ...? அவரைக் கறுப்பன் பார்த்தது இல்லையே?... சொக்கப்பனல்லவா அவரிடமிருந்து 'அழுக்கு' எடுத்து வந்தான்...?

மூன்று மாதங்களுக்கு முந்தைய நிகழ்ச்சிக் குள் ஞாபகத்தைப் பதித்துவிட்டான் அவன். 'ராக்காயியின் நினைப்புக்கு அவள் தாலியாச் சும் இந்தக் குடிசையிலே இருந்தால் மனசுக்கு எம்பிட்டோ ஆறுதலாயிருக்குமே!...அதற்குக் கூட வழி வைக்காமல், அந்த ஈவில்லாத டாக்டர் மாற்றலாகிப் போகும்பொழுது, சொல்லாமல் கொள்ளாமல் தன்னோடேயே ராக்காயியின் தாலியையும் எடுத்துக்கிட்டுப் போய் விட்டாரே...!' என்ற எண்ணங்கள் தலையெடுத்தன. அவன் பற்களைக் கடித்துக் கொண்டான்.

இப்போது கறுப்பனின் மனத்தில் புதிதாக ஓர் ஆலோசனை பளிச்சிட்டது. அந்த ஆலோ சனையின் பிற்புலத்திலே பொன்னம்மாவும் சொக்கப்பனும் ஆல வட்டம் சுற்றினர். 'இந்தத் தாலியையும் சங்கிலியையும் ஒளிச்சு வச்சு, புதுக்கோட்டைப் பக்கம் நாடிப்போய் விற்றுப் பணமாக்கினால், எப்படியும் நூறு, இருநூறு ரூபாய் தேறும். காதும் காதும் வைச்சாப்பிலே, பொன்னம்மாவுக்கும் சொக் கப்பனுக்கும் கண்ணாலம் கட்டிப்பிட வேண்டி யதுதான்!...டாக்டர் எனக்கு உண்டாக்கின நஷ்டத்துக்கு ஈடு கட்டத்தான் சாமி இந்தத் தங்க நகையை என் கண் முன்னால் காட்டி யிருக்குதுபோல!......ஆமாம், அப்படித்தான் இருக்கும்!' என்று முடிவு செய்தான் அவன்.



சென்னையின் பிரபல டாக்டரும், சென்னை வைத்தியக் கல்லூரி பயோ-கெமிஸ்டிரி பகுதித் தலைமைப் பேரா சிரியராகப் பல வருடங்கள் பணி யாற்றிச் சமீபத்தில் ஓய்வு பெற்றவரு மான ஸ்ரீ எ. எஸ். ராமச்சந்திர அய்யா ரின் ஷஷ்டியப்த பூர்த்தி அக்டோபர் 4ந் தேதி தியாகராயநகரிலுள்ள அவ ருடைய இல்லத்தில் வெகு விமரிசை யாக நடந்தேறியது. டாக்டர் ராமச் சந்திர அய்யர் தம்பதிகள் இன்னும் பல்லாண்டு வாழப் பிரார்த்திக்கிறோம்.

ராஜேந்திரபுரத்துப் பாலத்தடியிலிருந்து திரும்பிய கறுப்பன், உலர்ந்த துணி மூட் டையை இறக்கிக் கீழே தள்ளிவிட்டதுதான் தாமதம் ; கழுதை பிடித்தது ஓட்டம். சொக்கப்பன் ஓடி வந்து மூட்டையைக் குடிசைக்குள் தூக்கிச் சென்றான்.

'' அப்பா! வாங்க முதல்லே சோறு சாப்பிட லாம். அப்பாலே மற்ற வேலையைப் பாருங்க!'' என்றான் மகன்.

'' நீ ஆக்கினியா......?''

'' இல்லே, வந்து...நம்ப பொன்னம்மா சமைச்சுத் தந்துச்சு!...''

'' அப்படியா?...இரு. மூஞ்சியைக் கழுவிக் கிட்டு வாரேன்!''

காலையில் அவன் முடிவு கட்டியிருந்த நிர்மா ணம் மீண்டும் நினைவில் எழுந்தது. 'இனிமேல் சாப்பாடு தயார்பண்ணுகிற சோலி விட்டுச்சு. சொக்கப்பனும் சுறுசுறுப்பாக வேலை வெட்டி

யைக் கவனிச்சுக்குவான்...என்னமோ மருமகப் பொண்ணு பொன்னம்மா வீடு மிதிக்கிற வேளை கூடிவர வேணும்!'

சாப்பாட்டு பப்பம் ஓய்வு கண்டவுடன், "தம்பி, இத்தனை நாளைக்கப்பறம் இன்றைக்குத்தான் வாய்க்கு ருசியாகச் சாப்பிட்டேன்; இனிமேல் இது மாதிரியே சாப்பிடலாம் நீயும் நானும். வரு ? றமாசத்திலிருந்து.. பொறக்கற மாசம்னைக்குக் கண்ணாலமாக்கும் ..... ஆமாம்; பொண்ணு பொன்னம்மாவேதான்!" என்று விளக்கம் தந்தான் கறுப்பன்.

புதுக்கோட்டைக்குப் புறப்பட எண்ணினான் கறுப்பன். ஏழு நாழிகைப் பொழுது இருக்கும்போதே எழுந்துவிட வேண்டும் என்பது அவன் திட்டம்: கட்டுச்சோறு தயாரானது. சிம்னி விளக்கை எடுத்துக்கொண்டு உள்ளே சென்று மிளகாய்ப்பானைக்குள் கையைவிட்டான். தேடிவந்த தங்கத்தாலியையும் எடுக்க வேண்டாமா? மறுவினாடி, தேள் கொட்டினாற்போலத் துடித்துப் போனான். தேள் அதனுள் இருந்தால்தானே? பாவம், அவன் பத்திரப்படுத்தி வைத்திருந்த தாலியும் சங்கிலியும் அங்கே இருக்க வேண்டாமோ?... எங்கே மறைந்ததோ?

சொக்கப்பன் குறட்டை ஒலி பரப்பிக் கண் வளர்ந்து கொண்டிருந்தான்.

"ஏலே சொக்கப்பா! மிளகாய்ப் பானையிலே போட்டிருந்த தங்கத்தாலியும் சங்கிலியும் காணுமல் போயிருக்கே? நீ எடுத்தியாடா?"

கண்களைத் துடைத்தபடி ஒரு முறை தந்தையை ஏற இறங்கப் பார்த்தான் மகன்.

"ஆமாம்; நான்தான் எடுத்தேன். புதுசா மாத்தி வந்திருக்கிற வாத்தியார் ஐயா விட்டுது அது. உடைமைக்காரங்ககிட்டே மத்தியானம் சேர்த்துப்புட்டேன்!......நம்ப பொருளே நமக்குத் தங்கவில்லே!...அயலவங்க சொத்து தங்குமா? இல்லே, நம்ப அதுக்கு ஆசைப்படறதுதான் நியாயமா?..."

அந்த அடி நெற்றிப்பொட்டில் மாத்திரம் விழவில்லை. உள்ளத்தில் விழுந்தது. ஆகவே, கறுப்பனின் இறுகு தட்டிய உடல் துடித்தது.

"அப்பா!..."

"சொக்கப்பா! அந்த நகையைப் பற்றி உங்கிட்டே கேட்டு, அதை உடையவங்ககிட்டே சேர்ப்பிக்கத்தான் விசாரிச்சேன்!" என்றான் கறுப்பன். அவனுடைய மனச்சாட்சி சிரித்த சிரிப்பிலே, அவன் தன்னை மறந்ததோடு சற்றுமுன் மனச்சாட்சி தந்த வேதனையையும் மறக்க முயன்றான்!

விடிந்தது.

கறுப்பனின் விழிகள் சிவந்திருந்தன.

"அப்பா, ராத்திரி முச்சூடும் தூங்கலேயா?"

"ஏன், தூங்கினேனே?"

"ம்!...பொன்னம்மா கொஞ்ச நேர முந்தி வந்து அஞ்சு ரூபாய்கொடுத்துட்டுப்போச்சு!"

"ஏன்?"

"நீங்க புதுக்கோட்டைக்குப் போகணுமின்னீங்களே? அதுக்குக் கைச்செலவுக்கு!"

"பொன்னம்மா!" என்றதும், முன்பு கட்டிய கோட்டை தகர்ந்த சம்பவத்தை நினைத்தான் கறுப்பன். 'இனி என் மவனுக்கு எப்படிக் கண்ணாலம் கட்டி வைக்கப் போறேன்?'

கண்கள் கலங்கின: "சொக்கப்பா! நான் புதுக்கோட்டைக்குப் போகலே!" என்றான்.

அப்பொழுது—

"இந்தாங்கப்பா!" என்று சொல்லி ஏதோ ஒன்றை நீட்டினான் மகன், தந்தையிடம்.

கறுப்பனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. இரட்டை வடச் சங்கிலியில் பிணைக்கப்பட்ட அந்தத் திருமங்கல்யம் பளபளத்தது!

"ஏது தம்பி இது?"

"புது வாத்தியாரு தந்தாரு? பழைய டாக்டர் ஐயா இந்த வாத்தியார் ஐயாவோட அண்ணாரும். கொடுத்தனுப்பி யிருக்காங்க!"

"நம்முடையது இல்லையே இது? நான் முந்திக் கொடுத்தது வெறும் தாலிப் பொட்டு மட்டுந்தானே?"

"அப்பா! என்னை மன்னிச்சிடுங்க. முதல்லே நான் சொன்னது பொய். இருங்க, டாக்டர் ஐயா கொடுத்து அனுப்பி யிருக்கிற கடுதாசியைப் படிச்சுக் காட்டுகிறேன்!"

சொக்கப்பன் படிக்கத் தொடங்கினான்:

"ஏகாலி கறுப்பனுக்கு,

டாக்டர் நாககந்தரம் எழுதியது.

முதலில் என்னை நீ மன்னித்துக் கொள். என் இதயத்தை எங்கோ அடகு வைத்து விட்டு, உன்னுடைய மனைவியின் தாலியை அடகாக ஏற்று, நான் உன் பெண்சாதிக்கு வைத்தியம் பார்க்க வந்து அரைகுறையாக விட்டுச் சென்ற அந்தக் குற்றம் என்னைப் பல நாட்களாக வாட்டியது. அங்கிருந்து மாற்றலாகி வந்ததும், என் மனைவிக்குத் திடுதிப்பென்று விஷக் காய்ச்சல் வந்தது. அவளுடைய கழுத்தில் நான் கட்டிய தாலி என்னை நோக்கி எக்காளமிட்டுச் சிரித்தது. நான் உன்னிடம் இதயமின்றி நடந்த தவறுதலுக்கு எங்கே தெய்வம் என் தாலியை என் மனைவிக்கு நான் பூட்டிய மாங்கல்யத்தை என்னிடமே சேர்ப்பித்து என் அன்பு மனையாட்டியைப் பிரித்து விடுமோ என்று அஞ்சி அழுதேன். அப்போதுதான் என் குற்றத்தையும் உணரலானேன். என் மனைவி பிழைத்து எழ வேண்டுமென்றும், உடனேயே உன்னிடம் காட்டிய சவிரக்கமற்ற தன்மைக்குப் பரிகாரம் செய்வதாகவும் ஆண்டவனிடம் பிரார்த்தித்தேன். என் மனைவி பிழைத்தாள்! அன்றைக்கு என்னிடம் நீ தந்த தாலியைக் கொண்டே அதைக் கொஞ்சம் அழகுபடச் செய்திருக்கிறேன்; தாலியுடன் இணைந்திருக்கிற இரட்டைவடச் சங்கிலிதான் என்னுடைய பரிகாரப் பொருள்! . உன் மனைவி குணமடைந்திருப்பாளென்று நம்புகிறேன். அடுத்த வாரம் உன் பெயருக்கு ஐம்பது ரூபாய் பணமும் அனுப்பி வைக்கிறேன்!..."

கறுப்பன் கண்ணீர் பெருக்கினான்; மானசிகமாகத் தோன்றிய டாக்டரைக் கைதொழுதான். அவன் வாய், "ராக்காயி! ராக்காயி!" என்று புலம்பியது.

"அப்பா!"

"ஒண்ணுமில்லே சொக்கப்பா!...பொன்னம்மா கிட்டே சொல்லி அதோட அப்பனை வரச் சொல்லு!" என்றான் கறுப்பன்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

பெருமை
படக்கூடிய
உங்கள்
சலவை.

டெட் உபயோகித்து நீங்கள் பெருமையடையலாம். டெட் இந்தியாவிலே முதன் முதலான அற்புத நவீன பரிசுத்தகாரணி. அது சோப்பைக் காட்டிலும் வெகு நன்றாகவும் சீக்கிரமாகவும் சுத்தம் செய்கிறது. ஆடைகளை சுத்தம் செய்யும்போது, அவைகள் கெடாமல் பாதுகாத்து வழவழப்பாகவும் பிரகாச மாகவும், நீடித்து உழைக்கும் படியும் செய்கிறது.

தரை, பீங்கான் பாத்திரங்கள், கண்ணாடி சாமான்கள், சாக்கடைத் தொட்டிகள் (ஸிங்க்ஸ்), சுவர்கள், எதுவாயினும் சரி, துப்புரவாக சுத்தம் செய்கிறது.

**டெட் — ஓர் அற்புத பரிசுத்தகாரணி**

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட். பம்பாய்



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon